# நற்றமிழில் நால் வேதம்

தமிழாக்கம்

த. கோவேந்தன்

தி. ஸ்ரீனிவாச ராஜகோபாலன்

## விக்னேஷ் வெளியீடு

( இரண்டாவது மாடி)

19, நியூ காலனி, ஜோசியர் தெரு,

நுங்கம்பாக்கம், சென்னை – 600 034.

# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | **நற்றமிழில் நால் வேதம்** |
| ஆசிரியர் | : | த. கோவேந்தன் |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பாண்டு | : | 2003 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| நூல் கட்டு | : | தாள் அட்டை |
| பக்கம் | : | 12 + 336 = 348 |
| தாள் | : | 10.5 வெள்ளைத்தாள் |
| நூலின் அளவு | : | 18 செ.மீ. X 12.5 செ.மீ. |
| எழுத்து | : | 12 புள்ளி |
| வெளியீடு | : | **விக்னேஷ் வெளியீடு**<br>(இரண்டாவது மாடி)<br>19, நியூ காலனி, ஜோசியர் தெரு,<br>நுங்கம்பாக்கம், சென்னை – 34. |
| அச்சு | : | வேமன் பிரிண்டர்ஸ்<br>சென்னை – 34.<br>☎ : 2821 11 34 |
| பொருள் | : | தமிழ் வேதம் |

**விலை : ரூபா. 100.00**

# வேதகால வைகறைக் கீற்றுகள்

உலக மொழிக்கெல்லாம் மூல மொழியாகவும், இந்திய மொழிக்கெல்லாம் தாய்மொழியாகவும், நாகரிகப் பண்பாட்டின் விளை நிலமாகவும் விளங்கியவை தமிழ் மொழியும் நாவல நன்னாடுமாகும்.

வரலாற்றுக்கு முற்பட்ட தொல்பழங்கால நாகரிக நாடுகள் தமிழ்நாடு, எகிப்து, கிரேக்கம், உரோம், சீனம், பாபிலோனியா, பாலத்தீனம், பாரசீகம் ஆகியன. பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டுகட்கு முன் ஓங்கி உயர்ந்து செழித்து இருந்தன இவை. மண்-பெண்-பொன்னாசைப்போர் களால் இந் நாகரிக நாடுகள் சிதைந்தன. சில அழிந்தன. பல இயற்கை நேர்ச்சிகளும் நிலநடுக்கங்களும் அங்கங்கு மக்களையும் திசைதோறும் வாழ்விருப்புக்குத் திசைதோறும் துரத்தியடித்தன. நெடும்பல் கால உலக வரலாறு இது.

இன்றைய இந்தியா அன்று ஒருமொழி வைத்தாண்ட தமிழர்களாலும் தமிழினக் கலப்பினராலும் ஆளப்பட்டு வந்தது. அரப்பா-மொகஞ்சதாரோ முதலிய நாகரிகங்கள் தமிழ் நாக ரிகங்களே. தமிழர் ஆண்ட இடங்களே. அந்தக் காலத்தில்தான் இரானிலிருந்து ஆரியர்கள் சிந்து ஆற்றுப் படுகையில் செழுமை நோக்கி வந்தனர். ஆரியன் என்ற சொல்லின் வேற்று வடிவம்தான் இரான் என்பது. இவ்விரு சொற்கும் நிலம் என்றே பொருள். நிலமே இவர்களின் வாழ்முதல்.

ஆரியர்கள் சப்த சிந்துப் பகுதியில் கி.மு. 1500-க்குப் பின் சிறுகச் சிறுகக் கூட்டங் கூட்டமாய்ப் பல நூறு ஆண்டுகாலமாய்ப் புகுந்து கங்கைச் சமவெளியை நிரப்பி அங்கிருந்த பழந்தமிழர்களோடு ஒட்டி உறவாடி கலந்தும் கலவாமலும் வாழ்ந்தனர். மொகஞ்சதாரோ அரப்பா அழிவுக்குப் பின் ஆரியர் வாழ்வு செழிப்புற்றது. அதுவே வேத காலமாகும்.

அன்று சிந்து (தமிழர்) நாகரிகத்தின் முடிவும் ஆரியர்களின் வருகையும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தன. ஆரியர்கள் எவரும் ஆட்சி புரிந்ததில்லை. ஆடு மாடு குதிரை களைக் கொண்டு நிலத்தை நம்பி வாழ்ந்தவர்களே. ஆதி காலத்தில் அவர்களுக்கு என்று எழுத்து மொழி எழவில்லை. பேச்சுமொழியே நிலவியது.

மாந்தனின் படைப்புகளில் மொழி ஒன்றுதான் அனைத்திலும் மேலானது. ஒரு மூதால மரத்தின் பல கிளைகளாய், விழுதுகளாய் நாற்றிசையிலும் ஒலிகளாய் எழுத்து வடிவங்களாய்க் காலந்தோறும் உள்ளது சிறத்தலாய், அகம்புறம் ஆகிய பண்பாட்டின் - நாகரிகத்தின் எண்ணத்தின் கோட்டோவியங்கள்தாம் மொழிகள். எழுதாக் கிளவியான ஒலிச்செல்வம் வாழ்வின் ஒளிச் செல்வமாக வாய் மொழியாய்-தாய் மொழியாய்த், தாய்வழி சமூகக் காலத்திலேயே தோன்றி விட்டது என்பது உறுதி.

வடக்கே புகுந்த ஆரியர்கள் தெற்கேயும் கி.மு.விலேயே புகுந்து கலந்தனர். அதனாலேயே

"நால் வேதம் நெறி தவறினும்" எனப் புறமும் - "வேத முதல்வன் என்ப"

தீதற விளங்கிய திகிரியோனே" என நற்றிணையிலும்,
'படிவ உண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பின் நின்சொல் உள்ளும்' எனக்

குறுந்தொகையிலும் ஆரிய வேதங்களைப் பற்றிய செய்திகள் வருகின்றன.

காப்பிய காலத்திலிருந்து கவிஞர் பாரதியார் வரை வேதங்களைப் பற்றிக் குறிக்காதவர்களே இல்லை. சமயவாணர் கள் பலர் வேதங்களை முற்றும் அறிந்ததில்லை என்பதை வேதங்களைப் படித்தபோதுதான் தெரிகிறது, இருந்தும் வேதங்களை வைணவ, சைவ சமயங்கள் பொதுவாக மறை, மறைமொழி, எழுதாக் கிளவி எனக் குறிப்பிடாமல் இருப்பதில்லை. இது தனி ஆய்வுக்குரியது.

பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் இயற்கை நெறிக்காலம். தெய்வம் - கடவுள் ஆகிய சொற்கள் ஆணாகவோ, பெண்ணாகவோ உருவகப்படுத்தாது. தென்னக மக்கள் கற்பனையில் தோயாதிருந்த காலம் . அக் காலத்தே தான் ஆரியர் தம் நான்கு வேதங்களைக் கூறி 'வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்' என்ற கருத்தினை 'அறம் பொருள் இன்பம், என்ற வாழ்விருப்பைச் சிதைத்தனர். இதுவும் தனி வரலாறு.

ஆரிய வேதங்களான இருக்கு,எசுர்,சாமம்,அதர்வம் நான்கும் கி.மு. 1500 லிருந்து கி.மு.200-க்குள் வாய்மொழிப் பாடல்களாகப் பலரால் பாடப்பட்டவையாகும். நான்கு வேதங்களில் இருக்கு வேதந்தான் முதல் தொகுப்பாகும். 1028 பாசுரங்களைக் கொண்டது. பத்து மண்டலங்களாப்

பிரிக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தும் ஒரு காலத்தலை அல்ல. இருக்கு வேதப் பாடல்கள் பல நூற்றாண்டு கால வாய் மொழித் திரட்டாகும்.

சாம வேதமும் எசுர் வேதமும் கடவுட்கான வேள்வி முறைகளை முன்னிலை-படர்க்கைப் பரவலாகவும் செயற் பாடுகளையும் இணைத்துத் தொகுக்கப்பட்டவையாகும். இருக்கு வேதப் பாடல்கள் சிற்சில மாற்றங்களுடன் கூடி 1549 பாசுரங்கள் அடங்கியுள்ளன. புரோகிதர்கள் கையாள்வன இவை. பண்ணோடு பாடப்படுவன சாமவேதப் பாக்கள்.

அதர்வனவேதம் சுமார் 6000 மந்திரங்களும் 731 சூக்தங்களும் பெற்றுள்ளது. 20 காண்டங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளது; இதிலும் இருக்குவேதப் பாடல்கள் பிணைக்கப் பட்டுள்ளன. அவை பெரிதும் வழிபாட்டுப் பாடல்கள். மந்திர தந்திரங்கள் இவை வேதகாலத்தின் இறுதியில் தோன்றியவை.

இந்த நான்கு வேதங்களும் உலகப் புகழ் பெற்றவை. காரணம் வேத கால ஆரியர்களின் பழக்க வழக்கங்கள் - வாழ்க்கை முறைகள், அவற்றூடு -பண்பாடு நாகரிகம் என அக் கால ஓரின மாந்தர்களின் வரலாறுகள் வெளிப்படுகின்றன. மற்றும் வரலாற்றுக்கு முற்பட்ட நாகரிகத்தில் பிற நாடுகளோடும் ஒப்பிடுகையில் எழுதாக் கிளவியாய் வழங்கிய இலக்கியங்கள் இவ்வளவு வேறு எங்கும் கிடைக்கவில்லை. ஆரியர்களின் காடுறை வாழ்வில் மின்னல் கீற்றொளியைப் போல வாழ்வின் எண்ண ஊற்றுகள் பலவும் இரண்டாயிரம் ஆண்டு கட்கு முன்னர் வெளிப்பட்ட பேருண்மைகள் சிலவும் இன்றும் வியப்பளிக்கும் வண்ணம் சுவை பயக்கின்றன.

மாந்த இனத்தின் அறமுறை, ஒழுங்கு ,அழகு, பழக்க வழக்கங்கள் முழுதும் தொழில்செய்து (உழைத்து) கரடு, முரடாகிப் போன பாட்டாளிகளின் முகங்களைப் போல வந்தேறிகளான ஆரியரின் வாழ்வுப் பரப்பு எல்லை முழுதும் வேதங்களில் தெளிவாகப் புலப்படுகின்றன. ஒளிமிக்க நுண்ணறிவும், இயற்கையின் அரிய உயரிய நுட்பங்களையும், வாழ்வின் தெளிவுகளையும் காட்டுகையிலேயே இருண்ட எண்ணங்களும் மண்டிக் கிடக்கின்றன. நான்கு வேதங்களின் ஊடே, உழைப்புத்தான் மாந்தனைப் பற்றிய கருத்தமைப்பைக் காட்டுவதற்கு ஓர் இன்றியமையாத அடையாளம் எனினும், உழைப்பின்மை, ஏமாற்று இவை கூடும்போது மந்திர-தந்திர-பொய்மையின் ஒட்டுணித்தன்மை, மலிவான கலை நுணுக்கத் தன்மை மானுடத்தை அழிக்கும் எண்ணங்களையும் வெளிப் படுத்துகின்றன; இவை வேத காலத்தின் பின்னிறக்கம்.

அலைகளுக்கு பின்னே பேராழியில் ஆணி முத்துகள் கிடைப்பதுபோல் நான்கு வேதங்களை - ஆங்கிலத்தில் படிக்கும் போதும் சரி,தமிழில் சம்புநாதன் மொழி பெயர்ப் புகளைப் படித்த போதும் சரி, வடமொழி இலக்கிய வரலாற்றை ஆங்கில வழிப் படித்தபோதும் சரி, இருக்குவேதம் தவிர மற்றவை சலிப்பூட்டுபவையாகவே தெரிந்தன. 1948-இல் 'பொன்னி'மாத ஏட்டில் பன்மொழிப் புலவர் கா. அப்பாத் துரையார் 'வடமொழி இலக்கியம்' என்ற கட்டுரை என்னைப் பல வழியிலும் விழிப்படைய வைத்தது. அடுத்து, பேரா. வையாபுரிப் பிள்ளை 'இலக்கிய உதயம்' இரண்டாம் பகுதியைப் படித்த போது 1952 -இல் மேலும் நல்லெண்ணம் தோன்றியது. பிறகு நவாலியூர் நடராசனை நான் இலங்கைக்குச் செல்லுமுன் தமிழகத்தில்(1979) கண்டேன்.

அவர் எழுதிய 'வடமொழி இலக்கிய வரலாறு'-நூல் பெரிதும் என்னை ஈர்த்தது. அதன் சுருக்க வெளியீட்டை என் நண்பர் ஒருவர்க்குத் திரட்டித் தந்தேன். அன்றிலிருந்தே வேதங்களின் சிறந்த அரிய பாடல்களைத் தேர்ந்தெடுத்துத் தமிழில் தர விரும்பியிருந்தேன்.

உலகில் எந்த இலக்கியமும் பெண்ணின் அச்சாணி யின்றி ஓடுவதில்லை. அதற்கு ஒப்ப என்றன் வளர்ப்பு மகள் த. சித்திரா, எம் எஸ்சி, ஒருநாள் 'Holy vedas' என்ற ஒரு நூலை உருபா 415/- கொடுத்து வாங்கிவந்தாள். இதனைத் தமிழில் தாருங்கள் என்று விரைவு படுத்தினாள். வேர்கள் இருப்பது செடி கொடி மரங்களின் பயனை வெளிப்படுத்தவே என்பதை மெய்ப்பிப்பது போல என்னையொத்த இலக்கியவாணர் வடமொழியிலும் ஆங்கிலத்திலும் ஆழங்கால்பட்ட திரு. தீ. ஸ்ரீநிவாசராஜகோபாலன் மொழி பெயர்ப்பதிலும் சமற் கிருதத்தோடு ஒப்பு நோக்குவதிலும் எனக்குப் பேருதவி புரிந்தார்

வேதகாலவாணர் எண்ணங்களின் ஓட்டம் நுங்கும் நிரையுமாய்ப் பொங்குமாங்கடலாய்ப் பெருகிவரும் கங்கையைப் போன்றது. வாழ்வியக்கம் பற்றியும், இயற்கையின் மறையுதிர், வேளாண்மையின் சிறப்புப் பண்புகள், இருசுடர் விழுமச் செய்தி களையும் அவற்றின் மொழியினுக் கடங்கா எழிற் கோலத்தையும் இயம்பும் பாடல்கள் என்றும் சிந்து கங்கைபோல் வாழ்வன.

அறிவியலின் வித்துகள், செம்மாந்த வாழ்வின் சிந்தனைக் கீற்றுகள் ஊடே உடலோம்பும் மருத்துவ முறைகள் மாண்புடையன. ஆனால் மந்திர தந்திரங்கள் இடைச்

செருகலால் வேதங்களின் நல்ல வித்துகள் ஊடே விளைந்த பதர்கள் ஆகும்.

இயற்கை வழிப்பாட்டைத் தமிழர்களிடமிருந்து கற்ற வந்தேறிகள் இறைவன் என்றும் இந்திரன், வருணன் என்றும் வாழ்வியக்க உயிர்ப்பாற்றலை (Life Force) எப்படி ஆண்களாக மட்டும் கொண்டனர்? தாய்மையைப் போற்றும் வாய்மை வாணர்கள், தூய்மையான பெண்களை வாய்மொழியில் வாழ்த்தாதே -வணங்காதே- வழிபடாத நிலை என்னென்று புரியவில்லை! வேதகால பாவியல் மாதர்களே கூட இங்கே தவறிவிட்டார்களோ என்றையம் ஏற்படுகிறது.

உலகின் பல உயரிய எழுத்திலக்கியங்களே நிறையும் குறையும் கலந்துள்ளபோது வாய்மொழி இலக்கியத்தில் காலந்தோறும் இடைச்செருகல் ஏற்பட வாய்ப்புண்டு. இவற்றையும் மீறி உண்மைகள் விண்மீன்களாய்க் கண்ணை யும் கருத்தையும் கவர்ந்து மண்ணில் நறுமண வண்ண மலர்களாய், வாடா மலர்களாய் நின்று நிலவுகின்றன. அவையே இந் நூலில் காணும் சுவைக்கனிகள். சொல்லின் பத்திலும் பொருளின்பத்திலும் நல்லின்பம் தருபவை. வேதகாலச் சொல்லேருழவர்களின் நெல்மணிகளும் பல்வேறு கூலங்களும் இன்றும் நம் உயிர்க்கும் உடற்கும் ஊட்டம் தருவன. நாட்டம் பெறுவன. ஏற்றம் உறுவன.

இயற்கையோடியைந்தது வேதகால வாழ்வு. எனவே தான் இயற்கை இறையை இறைவனாகக் கண்டது, தொழுதது, வணங்கியது. இயற்கையின் வெளிப்பாடுகள் அனைத்தும் ஓர் ஒத்திசைவைக் கொண்டவை. ஒத்திசைவு எப்போதும் பாட்டாக

மலரும். அப்படி அலர்ந்தவையே இருக்கும் சாமமும். மற்றவை உள்ளிசை பயின்ற நூற்பாக்கள். மேலும் நான்கு வேதமும் வாய்மொழிச் செல்வங்கள். எனவே அவை இசையில் இணைந்தாலன்றி செவிச்செல்வமாகத் தொடர்ந்து வாழாது. ஓசையும் ஒலியும் ஒவ்வொரு மொழிக்கும் இரு மூச்சுப் பைகளைப்போல.

தமிழ்த் தென்றல் திரு. வி.க. கூறுவதுபோல "இயற்கையின் கூறுகள் பல திறந்தன. அவற்றில் எல்லாம் கவிதைகள் இருக்கின்றன. உலக இயற்கை ஒரு கவிதைக் கோயில்.

"இயற்கை இருவகை. ஒன்று பொதுமைப்பட்டது; மற்றொன்று சிறப்பின்பாற்பட்டது. முன்னது அறிவியல், பின்னது கவிதை, அதாவது பாட்டு. அது மொழி பெயர்ப்புக்கு அடங்குவதில்லை. அம்மம்மொழிக்கே உரியது. இன்பமும் சுவையும் நுகர்தல் கூட காரணம் ஒலியின்பம், அடுத்துக் கருத்தின்பம்"

நற்றமிழில் நால்வேதம் கருத்தின்பத்தினை மட்டும் கருத்தோடு தரும் முயற்சியாகும். இந் நால் வேதப் பாடல்களைப் பாடல்களாகத் தரமுடியும், அது என்னால் முடியக் கூடிய ஒன்று. அத் தகுதியும் திறமையும் எனக்குண்டு. காரணம் நான் பாவலன். பாரதி - பாரதிதாசன் தோள் மீது நிற்பவன். என் திறமையும் தகுதியும் பாட்டினைப் பாட்டாகச் செய்கையில் என் பங்களிப்புச் சேரும், எல்லை குறுகிய தாகிவிடும். அப்படிச் செய்து விட்டனர்', புதுக் கவிதை நுனிக் கொம்பேறிகள். எனவே இனிய எளிய அரிய உரை நடையில்

நால்வேதப் பாடல்களைத் தந்துள்ளோம். அடுத்தொரு தனி நூல் பாடல்களாக வெளிவரும்.

ஆழ்வார்கள் ஆய்வு மன்றத்தில் இருந்து கொண்டே பல இலக்கியப் பணிகளைச் செய்யும் உரிமையளித்துப் பெருமைப் படும், நாடாளுமன்ற உறுப்பினர் பெருமைக் குரிய தம்பி சாமி. சகத்ரட்சகன் அவர்கட்கும், நான் ஈடுபடும் இலக்கியப்பணியில் எல்லாம் ஊக்குவிக்கும் ஆங்கில அறிஞர் எம். செகதீசன் அவர்கட்கும் என் சிறப்பான நன்றி

நற்றமிழில் நால்வேதம் -நூலின் ஆங்கில மூலம் The Holy Vedas - A Golden Treasury - By pandit Satyakam Vidyalankar - ஆகும். இதனை மொழி பெயர்ப்பிலும் மூலமொழியோடும் ஒப்பிட்டுத் தருவதிலும் என்னுடன் பெரிதும் ஒத்துழைப்புத் தந்த மும்மொழிவாணர் அறிஞர் பெருந்தகை தி. ஸ்ரீநிவாசராஜகோபாலன் அவர்கட்கும், இந்நூல் செப்பமுற தொடக்கநாள் முதல் இறுதி வரை என்னோடு ஒத்துழைத்த மகள் த. சித்திரா எம். எஸ்சி அவர்கட்கும் என் நெஞ்சார்ந்த நன்றி. மொழி நன்றி நன்றியாகாது என்பதறிவேன். என் வாழ்வே அவர்கட்கு நன்றிக்குரியது.

உலக வாய்மொழிப் பேரிலக்கியத்தின் கொடுமுடிச் சுவைப்பாகினை முற்றிலும் தரவில்லை என்றாலும் அடிவாரத்தின் அருவி ஊற்றினைத் தமிழர்க்குத் தரும் பேறு பெற்றமைக்கு மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். அடுத்து வரும் இந் நூலின் பா வடிவின் பாங்காக அமைந்த ஒரு நூலை எதிர்பாருங்கள்.

அன்பன்
**த. கோவேந்தன்.**



# தொடக்க காலத்தில்

இல்லாதது ஒன்றும் இருந்தது இல்லை அன்று,
இருந்தது எதுவும் இருந்ததும் இல்லை,
மண்ணகம் இருந்தது உண்டா, கிடையாது.
விண்ணகம் தான் இருந்தது உண்டா, அதுவும் கிடையாது.
கண்ணுக்கு எட்டாத தொலைவு என்று ஒன்று
உண்டா, அதுவும் தான் கிடையாது
ஒன்றுமே அன்று இல்லாத நிலையில்
எதற்கு எது போர்வை?
பின், எங்கே, எவருடைய அரவணைப்பில்
நீர் நிலையும் அளவிட முடியாத ஆழமும் நிலவுகின்றன?
(இருக் 10)

இறப்பு இல்லை அங்கே, இறப்பு இல்லாத
நிலையும் இல்லை அன்று;
இரவும் இல்லை பகலும் இல்லை, ஏன் அதன்
அறிகுறி கூட இல்லை.



மூச்சு விடுவதே தெரியாமல் இயற்கையாகவே
வெளி வந்தது மூச்சு.
இறைவனையன்றி வேறு எதுவுமில்லை. (இருக் 10)

முதலில் விரிந்தது இருட்டு
கும்மிருட்டு, சொல்லொணாத இருட்டு
கண்ணுக்குப் புலப்படும் இவ்வுலகம், உலகம்
தோன்றுமுன் பிரிந்த நிலைக்குச் சுருக்கப்பட்டது.
எவர்முன் உலகனைத்தும் ஒரு துரும்புக்குச் சமமோ
எவ்வுலகம் அவருடைய ஆற்றலின்,
ஆன்மிக பலத்தின் விளைவோ
அந்தப் பரம்பொருளின் ஆற்றலே
அவ்வுலகினைச் சூழ்ந்து பரந்து நின்றது. (இருக் 10)

ஆதியில் தோன்றியது இறைவனின்
திருவுள்ளம் மட்டுமே.
படைத்தவனின் நெஞ்சத்தில் முளைத்த
முதல் வித்து அதுவே.
மனத்தையும் நெஞ்சத்தையும் ஒருங்கிணைத்து
அப்பாற்பட்ட காலவெளியை ஊடுருவிப் பார்ப்போர்
ஒன்றுமில்லாததில் ஒன்று இருந்ததையும்,
எல்லாம் இருந்ததில் ஒன்றும் இல்லாததையும்
கண்டனர். (இருக் 10)

இறைவனின் திருவுள்ள ஒளிக்கதிர்கள்
உலகெங்கும் பரந்து விரிந்து ஊடுருவிப் பாய்ந்தன.
வானை எட்டியும், நிலத்தைப் பிளந்தும் .
இதன் விளைவாக, வித்துகளை உள்ளடக்கிய
சிறிதும் பெரிதுமான உயிரினங்கள் பிறப்பெடுத்தன.





படைத்தவனின் அருளைப் பொறுத்தது உலகு
இருத்தல் என்பதால்
அதற்குக் கட்டுப்பட்டிருப்பதுதான் உலகின் நிலையும்.
(இருக் 10)

ஆட்டுவிக்கும் ஆற்றல் எங்கிருந்து பிறக்கிறது,
எங்குச் சென்று மறைகிறது-
யாரே அறிவர் இந்த மறைத்திரை?
உண்மை அறியும் தெய்வீக மாந்தர்கள்
உலகம் தோன்றி பல்லாண்டுகள் பின்னரே பிறந்தவர்.
இந்நிலையில் உண்மையை உணர்ந்தவர் யார், எவர்?
(இருக் 10)

படைப்பு எங்கிருந்து தோன்றுகிறது?
அதைக் கையாளுபவர் அல்லது கையாளாதவர் எவர்?
விண்ணிலிருந்து எவர் இதைக் கண்காணிக்கிறாரோ
அவருக்கு, அவருக்கு மட்டுமே, கமுக்கம் தெரியும்.
ஏன், அவருக்கும் கூடதெரியுமா என்ன?
இறைவா,பரந்து விரிந்துகொண்டே போகும்
பேரொளி வீச்சுடைய ஞாயிற்றின் உலகில் அமைதி
நிலவும்பொருட்டு அது உதயமாகும்படி வாழ்த்தி அருள்வாய்.
அமைதியும், ஒற்றுமையும் உலகில் நிலவும்படி, அருட்பேறு
அடிவானத்தின் நான்கு பகுதிகளுக்கும் வழங்கட்டும்.
(இருக் 7)





# அண்டம்
# தொடர்பான வேள்வி

வையத் தலைவன் ஆயிரம் தலைகளுடையோன்
ஆயிரம் விழியுடையோன், ஆயிரம் அடிகளுடையோன்
உலகின் மூலை முடுக்குகளிலெல்லாம் நிறைந்திருப்பவன்
பத்துத் திசைகளையும் கடந்து பரந்திருப்பவன்.
(இருக் 10)

எங்கும் நிறைந்திருப்பவன், எங்கும் நிலைத்திருப்பவன்
இறைவன், இதில் எள்ளளவும் ஐயமில்லை.
பிறப்பு, இறப்பு என்கிற பொது நிலைகளுக்கு அப்பாற்பட்டு
அழிவில்லாத அமராதிபன் அவன். (இருக் 10)

இத்தகையது அவன் பெருமை
உலகத் தலைவனோ இதற்கும் மேலானவன்.
பரம்பொருளின் நிறைந்திருக்கும் தன்மையில் அனைத்து
உயிர்களின் பங்கு கால் பங்கே.
முக்கால் பங்கை எட்டி விட்டால் அமரர் உலகில்
அழியா நிலை பெறுவர். (இருக் 10)



உலகண்ணலின் சிறப்பில் முக்கால் பங்கு
உள்ளடங்கியே நிற்கிறது -
கால் பங்கே மாறி மாறி வெளிப்படுகிறது.
வெவ்வேறு நிலைகளில் இது
உயிருள்ள இயங்குதிணைகள்,
உயிரற்ற இயங்காப் பொருள்கள்
இவற்றில் ஊடுருவிச் செயல்படுகிறது. (இருக் 10)

உலகத்தலைவனின் தெய்வீக ஆற்றல் மூலம்
குறையாத ஆற்றலுடன் இயங்கவல்ல உலகம் தோன்றியது
உலகம் உருவாகிக் கொண்டிருக்கும நிலையில்
நிலவுலகும், அது போன்ற வாழத்தக்க வேறு
கோள்களும் தோற்றம் கொண்டன.
உயிரினங்களில் ஆன்மாக்கள் தாங்கள் இருப்பதை
வெளிப்படுத்திக் கொண்டன;
உயிர்த் தன்மை தோன்றியது. (இருக் 10)

ஆற்றல் மிகு உலகம் தோன்றியதுமே
ஆதியில் தோன்றிய பொருள் சூழ்நிலைக் கேற்ப
மாற்றம் கொண்டு செயல்படலாயிற்று.
அணுக்களின் கலவையில் மாற்றங்கள் எற்பட்டன,
மேலான இந்த நிலவுலக மாற்றத்தில் உயிரைக்
காக்க வல்ல ஆற்றல்கள் உண்டாயின.
கூடவே, பசுமை, நெல்வகைகள், பழவகைகள், மலர்கள்
வலுசேர்க்கும், வாழ்நாளை நீட்டிக்க வல்ல
மருத்துவப்பொருள்களும் தோன்றின.
விலங்கினம் வளரவும் இதன்மூலம் வழி வகையாயின.
(இருக் 10)

உலகம் படைக்கப்பட்ட இந்தச் சூழ்நிலையில்
இருக்கு, சாம, யசுர், அதர்வ ஆகிய நான்கு
வேதங்களும் தோன்றின. (இருக் 10)

உலகம் படைக்கப்பட்ட காலத்தில் மூன்று
வகையான உயிரினங்கள் உருவாயின.
வளர்ப்புயிர்கள் என்ற வரிசையில் நான்கு
வகையான உயிரிகள் உள்ளன.
குதிரைகள்,கழுதைகள் ஆகியவை; இவற்றிற்கு
மேல்வரிசையிலும், கீழ் வரிசையிலும் பற்கள் உண்டு.
பசுக்கள், வெள்ளாடுகள், செம்மறி ஆடுகள், இவற்றிற்கு
கீழ் வரிசையில் மட்டுமே பற்கள் உண்டு.
(இருக் 10)

சீரிய சிந்திக்கும் திறன் காரணமாக,
உலகம் தோன்றிய காலத்திலிருந்தே
உயிரினங்களிடையே, மனிதனே மிகுந்த
முன்னேற்றம் அடைந்தவனாக மதிக்கப்படுகின்றான்.
மனித இனத்திலும் தங்கள் தங்கள் தெய்வீகத்
தன்மைகளை உணர்த்திய அறிவர்கள், யோகிகள்,
முனிவர்கள் இருந்தனர்.
இவர்கள் வேதங்களை நன்கு கற்றுணர்ந்தவர்கள்.
சமுதாயத்தை எவ்வாறு ஒருங்கிணைப்பது, ஒழுங்கு
படுத்துவது என்பதிலேயே தீவிரமாக சிந்தனை
செலுத்தியவர்கள் இவர்கள். (இருக் 10)

மானிட இனம் முழுவதுமே தனி மனிதன் என்கிற
வகையில் கணக்கெடுத்துக் கொள்ளப்பட்டது.

த.கோ - தி.ஸ்ரீ

இப்பொழுது சில வினாக்கள் எழுந்தன:
மனிதன் என்கிற உருவ அமைப்பு எத்தனை
பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது?
வாய், தோள்கள், தொடை, பாதம், ஆகிய அங்கங்கள்
எந்தெந்த வண்ணங்களைக் குறிப்பிடுகின்றன?

(இருக் 10)

சமுதாயத்தை இந்த நோக்கில்
பார்க்கும் பொழுது புலப்பட்டது.
மிகுந்த அறிவுக் கூர்மை வாய்ந்த
அந்தணர்கள் வாயையும்,
ஆள்திறன்களும், போர்வீரர்களுமாகிய
மன்னர்கள் தோள்களையும்,
கைத்தொழில் வல்லுநர்கள், வணிகர்கள், வேளாளர்கள்
வயிற்றின் அடிப்பகுதி தொடைகள் இரண்டையும்,
உழைப்பாளர்கள் அடிகளையும் எதிர்நோக்கின்றனர்.

(இருக் 10)

நிலவு அனைத்து வல்லமையுள்ள
இறையின் உள்ளத்தையும்,
ஞாயிறு அவன் கண்களையும் குறிப்பிடுகின்றன.
காற்றும் மூச்சும் அவனுடைய காதுகளிலிருந்து
வெளியேறுகின்றன.
நெருப்பு வாயிலிருந்து கிளம்புகிறது.
இது போன்றே மனிதனுடைய மனத்துடன் தொடர்புடையது
கண்களுடன் தொடர்புடையது ஞாயிறு வெண்ணிலவு.

(இருக் 10)



உலகம் அனைத்து வல்லமையுள்ள இறையாக
எடுத்துக் கொள்ளப்படுகிறது.
உலகமாகிற இந்த வரைபடத்தில் வயிற்றின் அடிப்பகுதிக்கு
நிகராக நடுப்பகுதி அண்டவெளியின் இடைப்பாகமாகிறது.
தலைக்குச் சமமான உச்சிப்பகுதி
ஒளிமயமான வெளி அண்டமாகிறது.
பாதத்திற்குச் சமமான கீழ்ப்பகுதி நிலமாகிறது.
உலகின் கோள் அமைப்பு முழுவதும் இந்த
நெறிக்கொப்பவே படிப்படியாக உருப்பெற்றது.

(இருக் 10)

உலகத்தைப் படைப்பதில்
சர்வ வல்லமையுள்ள கடவுள் ஈடுபட்டது.
இத்தகைய மகத்தான வேள்வியில் அதனதன் குணங்கள்
கொண்ட கடின மூன்று பொருள்கள் தீயில் இடப்பட்டன.
தூய்மையான வெண்ணெய், நெய்,
இளவேனிற் காலத்தையும்,
மரத்தூள்கள், வேனிற் காலத்தையும், தானியக் கதிர்கள்
மழைக் காலத்தையும் குறிப்பிடுகின்றன. (இருக் 10)

இந்த வையக வேள்வியில் எண்ணற்ற
விலங்கினங்கள் தோன்றின.
இவற்றுள் மானுடப் பிறவியே மிகச் சிறப்புள்ளது.
மனித சமுதாயத்தில் யோகிகள் முனிவர்கள் துறவிகள்,
தவசிகள், மூதறிஞர்கள், அறிவாளிகள் இருந்தனர்.
மனிதனின் விலங்குத் தன்மையை அடக்கி,
நெறிப்படுத்திச் சமுதாயத்தைக் கட்டமைத்தனர்.
இந்த வேள்வியில் ஏழு வேலிகள் இருந்தன,



இருபத்தொன்று வேள்விக்குரிய சுள்ளிகள்
பயன் படுத்தப்பட்டன. (இருக் 10)

இந்த வேள்வியில் அறிஞர்களும், முனிவர்களும்
சமுதாயத்தை ஒழுங்கு படுத்தும் பொறுப்பை
ஏற்றுக் கொண்டனர்.
இந்தக் குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு,
சமூகக் கட்டுக் கோப்பை வளர்க்கும் வகையில்
விதிமுறைகளை ஏற்படுத்துவதில் தீவிர அக்கறை
செலுத்தினார்கள் அவர்கள். (இருக் 10)

குற்றம் குறையற்றவன் இறைவன்.
அனைத்து ஆற்றலும் படைத்தவன் அவன்.
எங்கிருந்து இயற்கை எழில் தோன்றியது?
முழுமையான உலகிற்கு உயிர் அளிப்பது
முழு முதற்கடவுளே.
அனைத்து உயிர்க்கும் அடிப்படையாயிருக்கும்.
இந்த அரிய ஆற்றலை நன்கு உணர்வோமாக.
(அதர் 10)





# வையகத்தின் சிறந்த அறிவாளிகள்

தன்னுடன் வாழ்விக்கும் வாழ்த்துகளையும்
உயிரற்ற பொருள்களுக்கும் பொலிவையும் ஏந்தி,
எழில் மிளிரும் காலைப் பொழுது,
உலகெங்கும் தன் பொன்னொளியைச் சிந்துகிறது.
எண்ணற்ற பகல் பொழுதுகளைக் கடந்து இன்றையது
கடைசியாகப் புலருகிறது; ஆனால் அதுவே இனி
தொடரப்போகும் அற்புதமான காலைப் பொழுதுகளுக்கு
முன்னோடி. (இருக் 1)

முகிலைத் தாங்கி வரும் பெருங்காற்றே,
வல்லமை பொருந்திய வையகத்தின் ஆற்றலாகிய
வானகம் என்கிற கருப்பையில் உன்னை வளரவிடுகிற
காரணத்தினால், விண்மீன் அடர்ந்திருக்கும்
வானில் பேரொளியாய்ப் பொலிகிறது. (இருக் 2)

புடவியின் ஆற்றல் அளவிடமுடியாத திறந்த வெளியில்
வளர்கிறது, அதற்குப் பலம் சேர்க்கின்றது ஆவிச்
சுருள்கள் பல. மனித குலத்தின் நண்பனாகிய இந்த



ஆற்றல், நாளில் ஆறுகளாகிற
உடன்பிறந்தாள்களிடமிருந்து
ஊட்டம் பெற்று இயற்கையின் மடியில் அமைந்திருக்கிறது
(இருக் 3)

வையகத்தின் ஆற்றலே, உலகைப் படைக்கும் பொறி,
நீரின் கரு; மனித குலத்திற்குத் தலைமை வகிப்பது.
மனித இனத்தின் பாதுகாவலன். தனது சொந்த
ஒளியினாலேயே ஒளியாய்த் திகழ்கிறது.
தனது படைப்புகளுக்கு அரவணைப்பு அளிக்கிறது.
(இருக் 3)

உண்மை எது என்பதை யாரறிவர்?
அறிந்தும் உரைப்பவர் எவர்?
தெய்வீக ஆற்றல்களின் உறைவிடத்திற்கு
இட்டுச் செல்லும் முறையான பாதை எது?
அவை வாழும் தாழ்ந்த இடங்கள்தாம்
சட்டென்று நினைவுக்கு வருகின்றன.
திகைப்பூட்டுகின்ற உயர்ந்த இடங்கள் தோன்றுவதில்லை.
(இருக் 3)

வன்மை பொருந்திய வையக ஆற்றலின் தீப்பொறிகள்
தேவர் தலைவன் சுழற்றியெறிந்த இருதலைச் சூலம்
போல் கீழே இறங்குகின்றன.
காடுகளை அழிக்கும் நெருப்புபோல் எரிக்கும்
அஞ்சத் தக்க இந்தத் தீப்பொறிகள்
அற்பக் கழிவுப் பொருள்கள் யாவற்றையும் எரித்துச்
சாம்பலாக்கி விடுகின்றன. (இருக் 3)



தீத் தெய்வம், ஆழ்ந்த சிந்தனைக்கும்
தீவிர தேடுதலுக்கும் பிறகு
திட உள்ளங் கொண்ட தேடுபவன்
நிலவுலகின் கொடுமுடியாகிய
மண்ணகமென்கிற தாமரைக் குளத்திலிருந்து
உன்னைக் கண்டுபிடித்தான். (இருக் 6)

மேலுலகிலிருந்து வெளிவந்து உலக முழுவதும்
நடமாடித்திரிந்து வரும் உன்னுடைய
ஆற்றலும், வெப்பமும் எங்கள் வழிச் செல்கையில்
எங்களுக்கு யாதொரு தீங்கும்
செய்யாதிருக்குமாக,
காற்றைத் திணிப்பவனே,
நோயைத் தீர்த்து வைக்கும் ஆயிரம் மருத்துவப்
பொருள்களை வைத்திருப்பவனே,
எங்களுக்கு எவ்விதத் தீங்கும் இழைக்காமலிருக்கவும்.
(இருக் 7)

இன்னிசை எழுப்பும் புல்லாங்குழல் உடையவனும்,
பொங்கியெழும் கடலலைகளின் மேல் வீற்றிருப்பவனுமான
தெய்வீகக் கவிஞன் பரந்திருக்கும் விண்ணின்
மேற்கவிகையில் தவழ்ந்து வருகிறான். (சாம 6)

சீரான ஒலியுடன் மிதந்துவரும் இந்தத் தெய்வீக இசை
உலக முழுவதையும் வெள்ளக் காடாக்குகிறது.
வீரர்களுக்கு ஊக்கமளிக்கும்
பொருளறிவைப் பரப்புகிறது.





இந்த இன்னிசையில் கட்டுண்ட அன்பர்கள்
தங்கள் மெய்யறிவை வளர்த்துக் கொள்கின்றனர்
(இருக் 5)

இறை உணர்வின் புத்துணர்ச்சி அளிக்கும் பேரொளி
சுறுசுறுப்புள்ள மனிதர்களைத் தாமதமின்றி
அவரவர் இலக்கிற்கு
இட்டுச் செல்கிறது, ஒளி வெள்ளத்தைச் சிதறும்
உதயப் பொழுதே, நீ வருகை தருகையில்
பறவைகள் ஓய்வெடுத்துக் கொள்ளாமல்
மேலும் மேலும் பறக்கின்றன. (இருக் 1)

உதயப் பொழுது செங்கதிர்
தோன்றுமிடத்திற்கு அப்பாலிருந்து
ஒளியைப் பெறுகிறது. செழுமையின் மேல் தளத்திலிருந்து
வெவ்வேறு திசைகளில் வாழ்ந்து கொண்டிருக்கும்
மக்களை நோக்கி முன்னேறிச் செல்கிறது. (இருக் 1)

உலகின் அழிவில்லாத தன்மை அழிவுள்ள மனிதர்களின்
நெஞ்சங்களில் இடம் கொள்கின்றன.
நல்லது எண்ணி முன்னேறிச் செல்லும்
அவர்களுக்குத் தன் வாழ்த்துகளைக் கூறுகிறது.
அருளை எதிரொலிக்கும் ஆன்மிக ஒளியின்
துணை கொண்டும், மெய்யறிவின் அனைத்து
மறைபுதிர்களையும் உணர்ந்த நிலையிலும்
அது நாலா திசைகளிலும் ஒளி வீசுகிறது. (இருக் 3)



# தெய்வீக அன்பைப் பொழியும் வேய்ங்குழல்

தெய்வீகக் கவிஞனின் இன்னிசையைக் கேளுங்கள்.
அன்பின் ஆழத்தை குழல் மூலம் இசைக்கிறான் அவன்,
பாடலின் பண்ணொலிகள் விண்ணை எட்டுகின்றன.
எட்ட முடியாத விண்மீன்களைத் தொடுகின்றன.
கடலின் கொந்தளிக்கும் அலைகளின் மேல்
களி நடனம் புரிகின்றன.
நிலம், கடல், வான் யாவையும் இந்தத் தெய்வீக
இசையின் இனிமையில் கட்டுண்டு கிடக்கின்றன.
காலத்தின் தாழ்வாரத்தின் ஊடே புகுந்து
பரந்த விண்வெளியின் மேற்கவிகையில் அந்த இசையின்
நுணுக்கமான அசைவுகள் எதிரொலிக்கின்றன.

(சாம 446)

தங்கத்தின் பளபளப்பும் இனிமையான குரலும்
படைத்த புடவியின் அறிவின் ஒளி நமக்கு மகிழ்ச்சியூட்ட
விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி வருகிறது.



தெய்வீக ஒளியின் தலைவனே, முன்னரே பலர்
அளித்துள்ள பாராட்டுகளை நாங்களும்
வழங்குகிறோம். அவற்றை ஏற்றுக் கொண்டு
எங்கள் எண்ணங்களை ஈடேறச் செய்க. (இருக் 3)

தெய்வீக மெய்யறிவின் நீரோடையே,
இந்தப் பாராட்டுகளை உனக்கு நாங்கள்
அன்பார்வமுடன் அளிக்கிறோம்.
அவற்றை ஏற்று எங்களை உன்
அரவணைப்பில் வைத்துக் கொள்க.
எவ்வாறு வழிப்போக்கனொருவன் மரத்தின் நிழலில்
பாதுகாப்புத் தேடுகிறானோ, அதுபோல் என்றும்
நாங்கள் உன்னிடம் அடைக்கலம் புகுகின்றோம்.
(இருக் 7)

தெய்வீக ஒளி பொருந்திய அழகிய ஆன்மிக
நீரோடையே, உன்னுடைய நல்வாழ்த்துகளின் பயனாக
மக்கள் உடல் அளவிலும், மனஅளவிலும்
ஊட்டம் பெறுகிறார்கள். எங்களுக்குப் புகலிடம்
தருபவனே, அவர்களிடம் பரிவு காட்டு.
உயிர் மூச்சுகளின் தோழனே, உன்னிடம்
அன்பு செலுத்துபவர்களுக்கு அனைத்து வளங்களும்
வழங்குவாயாக. (இருக் 7)

தெய்வீக ஒளியின் மங்களமான இந்த நீரோடை
நமக்கு ஆன்மிக செல்வமளிக்கட்டும்,
குற்றங் குறையற்ற சுழித்தோடும் ஆன்மிக
பலுவளிக்கும் இந்த நீரோடை எங்கள் மேல்
பக்கறை காட்டட்டும்



தெய்வீக நோக்குடைய அறிவாளிகள்
ஏற்கெனவே உன்னைப் பாராட்டியுள்ளனர்.
உண்மையைத் தேடுபவர்களும் உன்னை
புகழ்ந்து பேசட்டும். (இருக் 7)

நம்மை ஆளும் கடவுள்,
விண்ணில் விண்மீன் கூட்டங்களைப் படைத்தது.
இரவில் தோன்றி பகலில் மறைபவை அவை.
கடவுளின் ஆணைகள் என்றுமே மீற முடியாதவை.
கடவுளுடைய கட்டளையை ஏற்று வெண்ணிலவு
இரவில் ஒளி வெள்ளமாய் நகர்ந்து செல்கிறது.
(இருக் 1)

தெய்வீக ஒளி வீசும் ஞாயிறு,
சிறிய பெரிய விண்மீன்கள்,
காலங் காலமாக நிலைத்திருக்கும்
அழிவற்ற அன்னையின் குழந்தைகள்.
அவை அப்பழுக்கற்றவை, ஒளி பொருந்தியவை.
அவை எவரையும் கைவிடுவதில்லை,
அவை எவராலும் குறை கூற முடியாதவை,
தாக்க முடியாதவை. நமது புகழ்ச்சிகளால்
அவை இன்று மகிழ்ச்சி அடையட்டும். (இருக் 2)

காட்டில் வாழும் மான்கள் இரண்டினைப்போலப்
பசுமையான நிலங்களில் வசிக்கும் இரண்டு
முரட்டுக் காளைகளைப் போல விண்ணில்
பறந்து செல்லும் இரு அன்னங்களைப்போல,
இரவு பகல் இரண்டுமே நமது உயர்ந்த
செய்கைகளைப் போற்றிப் புகழட்டும். (இருக் 5)



த.கோ - தி.ஸ்ரீ

விரிந்து பரந்து செல்கின்ற சீரும் சிறப்பும் பெற்ற
விடியலைச் சுற்றிலும் செவ்வண்ணம் கொண்ட
சுடரும் ஒளிக்கதிர்கள் உள்ளன.
வீரம் செறிந்த வில்லாளியைப் போலும்
விரைவு கொண்ட போர் வீரனைப் போலும்,
அவன் மனச் சோர்வை விரட்டி அடிக்கிறான்.

(இருக் 6)

பேரொளிமயமான பருதியின் உதயம் புதியதோர் நாளின்
வரவை அறிவிக்கிறது.
அதன் செவ்வண்ண ஈட்டிகள்
செங்கதிர்ப் பொன்னிற வாயிற் கதவுகளை
உந்தித் திறக்கின்றன.
நாம் செல்லவேண்டிய பாதைக்கு வழிகாட்டுகின்றன.
இரவின் கருமையும், அயர்ச்சியும் மறைந்து போயின.
ஒவ்வொரு விடியலும் நீண்ட வாழ்க்கைப் பயணத்தில்
வெற்றிக்கு மேல் வெற்றிக்கு வழிகாட்டுக. (இருக் 1)

செஞ்சுடர்த் தேவனே, எங்களைப் பிணைத்திருக்கும்
தளைகளிலிருந்து விடுபட வைப்பாய்.
இயற்கை அளித்திடும் வளங்களிடையே வாழ்ந்து
கொண்டிருக்கும் தேவனே, பிறவியெடுக்கும்
மனித இனத்தைக் காப்பாற்று. ஒளியின்
தலைவனே, விண்ணையும் மண்ணையும் ஆள்பவனே,
உன்னுடைய வாழ்த்துப் பெற்று
நாங்கள் முன்னேறுவோமாக. (இருக் 7)

புல் பூண்டு, செடி கொடிகளுக்கு உயிரளிப்பவனே,
தெய்வமே, உன்னிடமன்றோ நிலத்திணை இயங்குதிணைப்



பொருள்களுக்கு வாழ்வளிக்கும் ஆற்றலுள்ளது.
உன்னருளால் நான் நூற்றாண்டு வாழ்ந்திருப்பேனாக,
எங்கள்பால் அருளன்பு கொள்வாய். (இருக் 7)

தெய்வீக முகில்களே, குறையற்ற மழைநீரை
எங்கள்மேல் பொழியவும் நிலத்தின்மேல் பட்டு
அதற்கும் நறுமணம் அளிக்கிறீர்கள். நீங்கள்,
கடவுள் அருளிய அமுத நீர் என அதை
அன்பர்கள் ஏற்றுக் கொண்டுவிட்டனர். (இருக் 7)

தெய்வீக நீர்த்துளிகளே, வளமிக்கதும் உயிரளிக்கும்
நிலம், நீர், காற்று, நெருப்பு ஆகியவற்றிற்கு
நிறைவளிக்கிறதாகிய அந்த அலையை
நெருப்புப் பாதுகாக்கிறது.
இயற்கை வளங்களின் தொண்டர்களாகிய நாங்கள்
எங்கள் மகிழ்ச்சியை உங்களுடன் பகிர்ந்து கொள்கிறோம்.
(இருக் 6)

தும்பு தூசுகளினால் மாசடையாத முகில்களின்
தங்கமயமான தேர்கள் தூண்டி விடப்பட்ட
தீப் பொறிகளாய்ப் பளபளக்கின்றன.
தங்கள் இச்சைப்படி இரண்டு மூன்று மடங்காகப்
பெருகுகின்றன. அவற்றில் மிகுந்த வலிமையும்
ஆற்றலும் புதைந்து கிடக்கின்றன. (இருக் 6)

முகில்கள் தங்கள் தங்கள் வண்ணத் தேர்களில்
வெகு விரைவாக வருகின்றன.
அவற்றில் சிறந்தவையே மழை எனப் பொழிகின்றன.
(இருக் 8)



அகன்ற நீரிடையே எரியாற்றிலின்றி ஒளிர்பவன்
அவன் ஒருவனே
அவன் இருக்குமிடத்திலேயே தொண்டர்கள் அவனை
வழிபட்டு வருகின்றனர்.
இந்த மேலான, திரு அமுதத்தை
தெய்வீக நீருடன் கலந்து ஆன்மாவுக்கு அளிப்போம்.
அது எழுச்சியும், வீரமும் பெறட்டும். (இருக் 10)

மெய்யறிவு செங்கதிரின் ஒளியைப் போன்றது,
தேவர்கள் வாழுமிடம் பேராழியைப் போன்றது.
மண்ணுலகைவிட விண்மணி பழமையானது.
வான வெளியின் பரப்பளவிற்கு எல்லையே கிடையாது.
(யசுர் 23)





# வாழ்வின் நிலைத்திருக்கும் தீச்சுடர்

வேற்றுமையில் ஒற்றுமையைப் பார்.
பல்வேறு வடிவங்களில் ஒரே தெய்வீக வடிவைக் காண்.
அவனுடைய நிறைவை அளவிட முடியாது.
அவனுடைய பெருமை ஈடு இணையற்றது.
நாம் காணும் ஆனால் அதே சமயம் புரிந்து
கொள்ள முடியாதவையுமான எண்ணிலடங்கா
உலகங்களும் ஞாயிறுகளும் கோள்களும்
இயற்கையின் ஆளுகைக்கு உட்பட்டவை.
வெவ்வேறு வடிவங்களில் தென்பட்டாலும்
என்றும் நிலைத்திருக்கும் பேரொளி ஒன்றே.
காலைப் பொழுதில் ஒளிக் கதிர்களை உலகில் தூவும்;
மாலையில் உலாவரும் வெண்முகில் கூட்டங்களின் மேல்,
வகை வகையான வண்ணங்களைத்
தீட்டுவதும் ஒரே செஞ்சுடரே. (இருக் 8)



அனைத்து உயிராற்றல்களுக்கும் உறைவிடமான தாயே,
உலகின் அடிப்படை ஆற்றலே, வேள்விகளின்
கொடிச் சின்னமே, உனது பேரொளி வளருவதாகுக.
எழுந்திரு, எங்கள் அன்புக்குப் பரிசளி.
உலக முழுவதும் பணிந்தேற்றும் அன்னையே
மக்களிடையே எங்களுக்கு ஓர் உயர்ந்த இடமளிப்பாயாக.
(இருக் 1)

என்றும் நிலைத்திருக்கும் அன்னையின்
பிள்ளைகளே இந்த விண்மீன்கள்.
இவை எண்ணிக்கையற்ற கண்களிலுள்ள அற்புதமான
அழகையும் பேரொளியையும் பெற்றுள்ளன.
தெய்வீகப் படைப்புகளின் தொலைவிலோ,
அருகிலேவுள்ள இவை
எண்ணிலடங்காத விழிகள் அளிக்கும்
பேரொளியைப் பெறுகின்றன.
தங்கள் இருக்குமிடத்திலிருந்து எமது நற்குணங்களையும்,
தீக் குணங்களையும் கண்காணித்து வருகின்றன.
(இருக் 2)

படைப்புத் தொழிலில் மண், விண்வெளி, வானுலகம்
மூன்றுமே சரிசமமான நிலையில் வைக்கப்பட்டுள்ளன.
உடல், மனம், உயிர் ஆகியவற்றிற்கு நிலையான
பணிகள் அளிக்கப்பட்டுள்ளன.
அவை முறையே உடல் தொடர்பான,
மனம் தொடர்பான, தனித்து நிற்பதுமான நிலைகள்,
அன்னையின் குழந்தைகளே,
சின்னஞ் சிறிய விண்மீன்களே, ஞாயிறு பென்னம்
பெரிய கோள்கள், உங்களுடைய



பணி சாலச் சிறந்தது. ஏனெனில் நீங்கள்
கடவுள் இடும் கட்டளைகளை நிறைவேற்றுகிறீர்கள்.
(இருக் 2)

பேராழியிலிருந்து கிளர்த்தெழும் பேரொளி மயமான,
அளவிடமுடியாத உள்ளொளி, அறிவு என்னும் ஓடை,
புயல் போன்ற ஆரவாரத்துடன் பாய்ந்து முன்னேறுகிறது.
(இருக் 6)

செம்பருதித் தொடர்புடைய முறைகள்,
என்றும் நிலைத்திருக்கும் அன்னை,
மிகுந்த அன்பு செலுத்தும் செம்பருதி
ஆணை இடுபவன்,
நீர் நிலைகள் ஆகியவை பாராட்டப்படுவதாகுக.
உலகத்தின் பாதுகாவலர்கள் நமது நண்பர்களாகட்டும்;
அமுதத்திற் கொப்பான நமது அன்பு
ஏற்றுக் கொள்ளப்படட்டும். (இருக் 7)

செங்கதிர்த் தொடர்புடைய முறைகள் அத்தனையும்,
தலைமையான கொள்கைகள்,
இயற்கை அன்னையின் கொடைகள்,
நுண்ணறிவுக் கூர்மையுள்ள மாந்தர்கள்,
கதிரவன், நெருப்பின் ஆண்டகை,
தெய்வீக இரட்டையர்கள் யாவரும்
நம்மால் போற்றப்பட்டவர்கள்.
நீங்கள் யாவரும் எங்களை வாழ்த்தவேண்டும்.
(இருக் 7)



செடி கொடிகளின் வளர்ச்சியை எவன்
அதிகப் படுத்துகிறானோ,
தண்ணீர்ப் பெருக்கை அதிகப்படுத்துகிறானோ,
உலகு முழுவதையும் தனக்குரிய
பெருந்தன்மையோடு ஆட்சி புரிகிறானோ,
அந்தப் பெரிய ஆண்டகை நமக்குப் புகலிடம் தரட்டும்.
எல்லா வளங்களையும் அருளட்டும்.
மூன்று பருவங்களிலும் உரிய பேரறிவை
நமக்கு வழங்கட்டும். (இருக் 7)

நோய்களைக் குணப்படுத்தி எங்களுக்கு
மகிழ்ச்சியூட்டுவதற்காகத், தண்ணீரே,
உன்னைப் பருகுகிறோம்.
எங்களுடைய மரபு விளங்கும்படி
எங்களுக்குப் புத்துணர்ச்சியூட்டிடும் ஆற்றலை
அளிக்கிறாய் நீ. (சாம 1839)

நகர்ந்து கொண்டேயிருப்பது அல்லது
தற்காலிகமாக அசைவின்றி இருப்பது
ஆகிய முறைமைகளின்படி இயங்கி வருபவை
அன்னையின் செல்வர்களாகிய
மகிமை வாய்ந்த விண்மீன்கள்.
அவையே சமன்மை நிலையைப் பாதுகாத்து வரும்
உலகத்தின் பாதுகாவலர்கள்.
இயற்கையின் கட்டளைக் கேற்ப செயல்படுகின்றன,
இருட்டை விரட்டுகின்றன. (இருக் 2)

புடவிப் படைப்பை அரவணைத்துச்
செல்கிறது தெய்வீக ஆற்றல்;



உலகததைத் காப்பதுதான் இதன் குறிக்கோள்.
காரண காரிய பூதனாகிய இந்த இறையையே
உலகத்தினர் வழிபட்டுப் போற்றுகின்றனர்.
முற்றிய கதிர்கள் பரவிய வயலினூடே
புகுந்து செல்லும் மனங்கள் போலத்
தங்க மயமான தீச்சுடர்களையுடைய
அவன் உலகின் இரு பகுதிகளில்
தன்னை அடையாளம் காட்டிக் கொள்கிறான். (இருக் 2)

பெருந்தன்மை மிக்கதும், அமைப்பில் வேறு
பட்டதும் ஆனால் அதே நேரத்தில் ஒரே வகையான
செயல்கள் புரிந்து வருவதுமான புடவியின்
முறைமைகளினால் ஆற்றல் அளிக்கப்படும்
நாம் வளர்வோமாக. (இருக் 6)

கன்று ஈனாத பசுவைப்போன்றது வானகம்,
நிலயற்ற ஆற்றல் வாய்ந்தது.
தான் விரும்பும் வடிவங்களை எடுத்து கொள்கிறது,
உயிரினங்கள் யாவற்றையும் உணவூட்டிக் காக்கும்
வானகமாகிற தந்தையாரிடமிருந்து தண்ணீரைப்
பெற்றுக்கொள்கிறாள் மண்மகள். (இருக் 7)





## வழிபாட்டுப் பாடல்கள்.

எல்லாம் வல்ல இறையோனே, உன் பாதங்களைப் பணிந்து வணங்குகிறோம்.
உன் கட்டளைப்படி தான் கால ஆழி சுழல்கிறது, காலத்தைக் கடந்து என்றும் நிலைத்து நிற்பவன் நீ. (அதர் 10)





## கடவுள் உறுதிபடக் கூறல்

எண்ணத்திற்கும் தெய்வீக ஒளிக்கும் நானே அடிப்படை.
எதிர்காலத்தைக் கண்டறியும் அறிவன் நான்.
கோள்களின் சுழற்சியின் போக்கில்
நான்தான் நடுநிலைப் புள்ளி.
கூர்மையான புத்தியை அளிப்பவனும் நானே.
கடந்த காலமும் நான்தான், எல்லோருக்கும்
நல்லதையே எண்ணுபவன் நான்.
என்னை உற்று நோக்குங்கள். (இருக் 4)

உயர்ந்த உள்ளமுடையவர்களிடம் நான்
உலகை ஒப்படைக்கிறேன்.
நிலத்தை உழுபவர்களுக்காக நான்
மழை பொழிகின்றேன்.
சீறிவரும் தண்ணீருக்கு நான் வடிகால் அமைக்கிறேன்.
தெய்வீக ஆற்றல்கள் என் கட்டளைகளுக்கு
அடி பணிகின்றன. (இருக் 4)





என்னுடைய அடியார்களுக்கு
அன்பு செலுத்தும் வகையில்
தீயவர்களின் கோட்டை கொத்தளங்களை அழிக்கிறேன்.
தீய ஆற்றல்களை அழித்து என்னுடைய
பற்றார்வங்களைக் காக்கிறேன். (இருக் 4)

நானே மன்னன், எல்லோராலும் மதிக்கப்படுபவன்.
தீய ஆற்றல்களை அழிவு செய்யும் வல்லமை
அளிப்பது என்னைச் சார்ந்திருக்கிறது.
தெய்வீக ஆற்றல்கள் என் சொற்படி நடக்கின்றன.
நன்மதிப்புக்குரிய தலைவனாகிய நான் மட்டுமே
மாந்தர்கள், அவர்களின் உற்றார் உறவினர்கள்
யாவர் மேலும் ஆட்சி செலுத்துகிறேன். (இருக் 4)

ஓ, மனிதனே, உன்னுடைய மெலிந்த உடலையும்,
மனத்தையும் இரும்புக் கவசம் போன்ற என்னுடைய
அன்பினாலும் ஆதரவினாலும் போர்த்துகிறேன்.
இந்தத் தெய்வீக அன்பு என்றும் நிலைத்திருக்கும்
மகிழ்ச்சியை உனக்களிக்கட்டும்.
கருணையுள்ள இந்தப் புடவிக் காவலன்,
நீ வாழ்வதற்கான திடத்தை அளிக்கட்டும்.
வாழ்க்கைப் பயணத்தில் முன்னேற, உனக்கு அனைத்துத்
தெய்வீக ஆற்றல்களும் கனிவு காட்டட்டும்.
(சாம 1870)



ஓ, இசைக் கலைஞனே, உன் கண்களைத் திறந்து பார்.
உனக்கெதிரே நிற்கும் என்னைக் காண்.
உலகில் சிறந்தவை, பெருமிதமானவை என்று
கருதப்படும் எல்லாவற்றையும்
நான் விஞ்சி நிற்கிறேன்.
என்னைப் பற்றிய, உண்மையான
ஒளி எது என்பதை எடுத்துக் காட்டுபவன் நானே.
எல்லா உலகிலும் நான் யாவராலும் போற்றப்படுகிறேன்.
அவர்களை நான் அக்கறையுடன்
கவனித்துக் கொள்வேன். (இருக் 8)

மனிதர்களுக்கு நான் நூறாண்டு வாழ்வை அளிக்கிறேன்.
தங்கள் உடலையும், உள்ளத்தையும் நலமுற
வைத்துக் கொண்டு இந்த வாழ்க்கையை நுகரட்டும்.
என்று கடவுள் வாழ்த்துகிறார். (இருக் 10)

சீறியெழும் கொண்டல்களை மின்னல் தாக்கி
வீழ்த்துவது போல், பிறர் உழைப்பைச் சுரண்டும்
கொடியவர்களை
இடிபோன்று தாக்குபவன் நான்.
பிறரின் இரத்தத்தை உறிஞ்சும் இரக்கமற்றவர்களை
ஒள்ளிய வானத்தைத் தாண்டி அப்பால்
விழுமாறு ஓங்கி வீசி எறிபவனும் நானே. (இருக் 10)

“பலம், செழுமை, ஆகிய அண்டத்தின்
ஆற்றல்களை இயக்குபவன் நானே.
ஒளிதரும் பொருள்கள் வானக ஆற்றல்கள்
ஆகியவற்றின் மீதும் என் வல்லமை உள்ளது.
ஞாயிறு, காற்று, நெருப்பு, மற்றும் மக்களுக்குதவும்



ஆற்றல்கள் அளிக்கும் பலம், ஒளி, உயிர்
இவற்றின் மையமானவன் நானே". (இருக் 10)

"வையகத்தின் தாய் நான்; செல்வமளிப்பவள் நான்;
எவற்றைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ,
எவற்றைச் சொல்லவேண்டுமோ,
அவை யாவற்றையும் நான் அறிவேன்.
தெய்வீக ஆற்றல்கள் என் கட்டளைப்படிதான்
இயங்குகின்றன.
அனைத்து ஆள்நிலமும் என் ஆட்சியின் கீழ்தான்
என்னைப் பற்றிப் போற்றியப் பாடல்கள்
எல்லா இடங்களிலும் இசைக்கப்படுகின்றன."
(இருக் 10)

"அறிவார்ந்த மக்களே, எனது ஆற்றலினால்தான்
அனைத்து உயிர்களும் மூச்சு விடுகின்றன;
உண்கின்றன; பார்க்கின்றன, கேட்கின்றன.
அவை அறியாவிட்டாலும் கூட என்னுடைய
பற்றும் பிணைப்பில்தான் அவை வாழ்கின்றன.
அவற்றில் நான் உள்ளேன், என்னில் அவை உள்ளன."
(இருக் 10)

தெய்வீகத் தன்மை பெற்றவருக்கும், மனிதர்களுக்கும்
மகிழ்ச்சியளிக்கும் சொற்களையே நான் பேசுகிறேன்.
என் மனத்துக்குகந்த மனிதர்களுக்கே நான்
திறமைகளை அளிக்கிறேன்.
அவர்களை நான் தெய்வீகத் தன்மை
பொருந்தியவர்களாகவும், அறிவர்களாகவும் , முழுமை
பெற்றவர்களாகவும் மாற்றுகிறேன். (இருக் 10)





வையக வாழ்வின் காவலனுக்காக,
அறிவாற்றல்களைத் துளைத் தெடுக்கவல்ல
அம்புகளை எய்வதற்கு ஏற்ற வகையில்
வில்லை வளைக்கிறேன்.
கொடுமைகளுக் கெதிராகப் போர் தொடுக்கும் வகையில்
அவர்கள் நெஞ்சத்தில் சீற்றக் கனலை மூட்டுகிறேன்
எனது நிலையான விதிகளை எவரும் மீறாதபடி
விண்ணையும், மண்ணையும் ஊடுருவுகின்றேன்.

(இருக் 10)

நானிலங்களிலும் நிறைந்திருக்கும்
காற்றைப்போல் நான் உயிர்க்கிறேன்.
பரந்த இம் மாநிலம், வானக எல்லைகளையும்
கடந்து செல்கிறேன் நான்.
என்னை எவரும் வெல்ல முடியாது,
எவரும் என் கட்டளைகளை மீற முடியாது.

(இருக் 10)

செல்வங்கள் யாவற்றிற்கும் உரிமையுடைவன் நானே
எனக்கு ஈடானவர் எவரும் கிடையாது.
மேலான அறிவே என் உள்ளுயிர்
எந்த மனிதனின் நண்பனும் எனக்கு உகந்தவனே
என் நெஞ்சத்தில் துயரத்திற்கு இடமில்லை.
கடலளவு பரந்தது என் நெஞ்சம்.
என் அன்புக்குரியவர்கள் யாவருக்கும்
அதில் இடமுண்டு. (அதர் 16)





ஆட்டு மந்தைக்குப் புலி எப்படியோ,
அது போன்றே கொடியவர்களுக்கு நான் ஓர் அரிமா.
அரிமாவை நேருக்கு நேர் காணும் பொழுது
நாய்கள் எப்படி அதிர்ந்து போகின்றனவோ,
அதேபோல் என்னை நேரில் காணும் பொழுது
கொடியவர்கள் அதிர்ந்து போகின்றனர். (அதர் 4)

நீர்க்கசியும் உலகப் பேராழியை நான் தாங்குகிறேன்.
நிலையான அமைப்பிலுள்ள இருப்பிடத்தின்
பேரொளிப் பகுதியைத் தாங்குகிறேன்.
அழிவற்ற தன்மையின் பாதுகாவலனாகிய நான்
உலகின் எல்லாப் பரப்புகளையும் படைக்கிறேன்.
(இருக் 10)

தூயனோ, தூய்மையற்றவனோ
எவராயிருந்தாலும் சரி,
நான் ஏற்படுத்தியிருக்கும் நிலையான அறத்தைத்
தன் வலிமையால் தகர்க்க முடியாது. (அதர் 5)

உலகின் நாற்புறமும் என்னைப் பணிகின்றன.
ஆழியின் அலைகள் எனக்குக் கீழ்ப் படிந்து நடக்கின்றன.
(அதர் 9)

அறிவொளி பெற்ற மாந்தனே, இவற்றுக்குள்தான்
நான் விண்ணையும் மண்ணையும் வைத்துள்ளேன்.
மெய்யறிவையும் வலிமையையும் பெற்றுவரும்
மையங்களும் இங்கேதான் உள்ளன.
உனது நெஞ்சத்தில் தெய்வீகமான ஒளியை
வைக்கிறேன்.



இவற்றுடன் நல்லுறவை வளர்த்துக் கொண்டு
வாழ்க்கையை நன்கு துய்த்து மகிழ்வாயாக. (யசுர் 7)

அவனே உலகங்கள் யாவையும் படைக்கிறான்
அவற்றில் பரவிவிடுகிறான்.
நமது பல குறைகளைப் பொறுத்துக் கொள்கிறான்.
நல்லவர்களுக்கு எண்ணற்ற வகைகளில்
உதவி புரிகிறான்.
கடவுனிள் அன்பர்களுக்காகவே இவற்றைச் செய்கிறான்.
ஓய்வின்றி அவன் உழைக்கிறான்;
பருவங்களை ஞாயிறு நெறிப்படுத்துவது போன்று
அவன் தன் அன்பர்களுக்கு வழி காட்டுகிறான்;
அவன் உண்மையைக் கடைப்பிடிக்கிறான்;
தீய ஆற்றல்களை ஒதுக்கிவிடுகிறான்.
வாழ்க்கை என்னும் கொந்தளிக்கும் கடலைக்
கடக்கத் தன் அன்பர்களுக்குக் கை கொடுக்கட்டும்
(இருக் 3)





## உயர்வுநலம்

கத்தி முனையில் அறத்தை காக்கும் விதியின்
தலைவன் வாழ்வு, வீழ்வு ஆகிய பற்றுகளை
அறுத்தெறிந்து அவற்றின் பிடியிலிருந்து நமக்கு
விடுதலை அளிக்கிறான்.
பின்னர், இறப்பு தேவனாகிய அறவாணனிடம்
நம்மை ஒப்படைக்கிறான்.
இறப்பு தேவன் நம்மை மீண்டும் விதியின்
கண்களில் சேர்க்கிறான்.
இவ்வாறாக பிறப்பு இறப்பு என்கிற ஆழி
முழு விடுதலை கிட்டும்வரை, தொடர்ந்து
சுழன்று கொண்டேயிருக்கிறது.
அந்த விதியின் தலைவனுக்கு
நாம் தலை வணங்குவோம். (அதர் 6)

படைப்பின் உயிர் நாடியாகக் காற்றை,
ஒளிக் கதிர்களாகிய கண்களை,
வானை, வெளியின் திசைகளைக்
கேட்கும் உறுப்புகளாகவும் படைத்த



எல்லாம் வல்ல மேலான வல்லமையுள்ள இறைக்கு
எங்கள் பணிவன்புகள் உரித்தாகுக. (அதர் 10)

அனைத்து வல்லமையுள்ளவனுக்கு
எங்கள் போற்றுதல்கள்.
நிலத்தையும், நீள்விசும்பையும்
உயர்வருமைதான் தாங்குகிறது.
இயற்கை அன்னையின் கருணைக்கு
நம் மதிப்பருமை என்றுமே உண்டு.
தீமைகளை அழிக்கிறது இறையன்பு.
வாழ்க்கையில் நான் புரிந்திடும் பழிகளுக்குக்
கழுவாயாக என் தவ வலிமையைக்
காணிக்கை ஆக்குகிறேன். (இருக் 6)

திருவுருக்கொண்ட பேரின்பமும்,
அமைதியின் தோற்றமுமாயுள்ள
அந்தப் பெருமைவாய்ந்த இறைவனுக்கு
எங்கள் பணிவன்புகள்.
பேரின்பம், அமைதி, நற்பண்புகள் இவற்றின்
உறைவிடமாகிய இறைவனுக்குப் பணிவன்புகள்.
இவற்றை வாரி வழங்குகிற இறைவனுக்கு
மீண்டும் அன்பு வாழ்த்துகள். (யசுர் 16)

எல்லாவற்றையும் ஏற்று நடத்தும் பேரிறைவனே,
உனக்கு வணக்கம்.
தண்டனை அளிக்கும் ஆற்றலுள்ள இறைவனே,
உனக்கு வணக்கம்.
கொடியவர்களை அழித்தொழிக்கும்
உன் வில் அம்புக்கு வணக்கம்.



நல்லவரைக் காத்து அருளிடும், கெட்ட எண்ணம்
கொண்டவர்களை அடக்கி ஆண்டிடும் உன்
வலிய படைகளுக்கு வணக்கம். (யசுர் 16)

இயற்கை அன்னை அளித்திடும்
செல்வங்களுக்கு நல்லன்பு.
முதியோர்களுக்கும் இளைஞர்களுக்கும் வணக்கம்.
நமக்கிருக்கும் ஆற்றலைத் திரட்டி இறைவனின்
ஆணைகளின் புகழ் பாடுவோம்.
அவை பெரியனவோ, சிறியனவோ, எவற்றையும்
நாம் புறக்கணிக்கக்கூடாது. (இருக் 1)

வானவெளியைப் போன்ற ஆண்டவன் எங்கும இருக்கிறான்,
அவன் சொல்லைப்போல
அவனும் என்றும் நிலைத்திருப்பான்.
இயற்கை அளித்திடும் செல்வங்கள் யாவும்
அவனிடமே அடங்கியுள்ளன.
இந்த உண்மையை அறியாதவரைப்
பற்றி பேசிப் பயனென்ன?
மறைகளினால் இவர்களுக்கு என்ன பயன்?
எவருக்கு இந்த உண்மை புரிகிறதோ அவன்
இறைவனை நெருங்கி நிற்கிறான். (அதர் 9)





# இறைவன் ஒருவனே

உண்மை தெரிந்தவன்
இறைவன் ஒருவனே என்று உணர்கிறான்.
இரண்டாம் மூன்றாம்
நான்காம், நிலையில் இல்லை அவன்;
ஐந்தாவது, ஆறாவது
ஏழாவது, நிலையில் இல்லை அவன்;
எட்டாவது, ஒன்பதாவது அல்லது பத்தாவது
நிலையில் அவன் வைக்கப்படுவதில்லை.
உயிர்ப்பவை யாவற்றையும்
ஏன், உயிர்ப்பற்ற பறவையையும் கூட
அவன் கண் காணிக்கிறான்,
பெரும் பேராற்றல் உள்ள ஒருவன் அவன்.
அவன் ஒருவனே, தெய்வீக ஆற்றலுள்ளவன்
அவன் ஒருவனே. (அதர் 13)



நெருப்பு, செங்கதிர், காற்று,
அல்லது தண்கதிர்
எந்தப் பெயரில் வேண்டுமானாலும் அவன் அழைக்கப்படட்டும்.
எல்லாமே அனைத்து வல்லமையுள்ள அவன்
ஒருவன்தான்.
அவன் தான் படைப்பவன், மக்கள் தலைவனும் அவனே.
அகில உலக ஆண்டை அவன்;
முடிவு காணமுடியாத ஆற்றல் உடையவன் அவன்;
எல்லா உயிரையும் காப்பவன் அவனே. (யசுர்32)

என்றும் நிலைத்திருக்கும் புனித ஒளி ஒன்றே.
அதுவே பல்வேறு வடிவங்களாக எழுச்சியுறுகிறது.
ஞாயிறு ஒன்றே; நமக்கு வெதுவெதுப்பையும்
உயிரையும் அளிப்பது அதுவே.
அனைத்து உயிர்களிடையேயும் அதன் மிளிர்கிற
வண்ணங்கள் புகுந்து ஒளிர்கின்றன.
வையப்புடவி அனைத்திலேயும் அதன்
உயிர்மூச்சை உணரலாம்
வைகறை ஒன்றே இதன் பளபளப்பாய் வகை வகையான
வண்ணங்களாக உதிர்த்து உலகத்தின்
முகத்தை அழகு பெறச் செய்கிறது. (இருக் 8)

அந்த உண்மைக்குக் கற்றுணர்ந்த அறிவர்கள்
வெவ்வேறு பெயரிட்டு அழைக்கிறார்கள்.
ஒருவனுக்கே பல பெயரிடுகிறார்கள்,
இந்திரன், ஒளிமயமான முதல்வன்,
கண்காணிப்பாளன், நண்பன், நற்பண்பாளன்
மழைஞன்(வருணன்) போற்றுதற்குரிய தீ, மேலுலகைச்



சேர்ந்த புகழ்தற்குரிய விதியை
முடிவு செய்யும் காலன் வையத்து உயிர்ப்பான,
மடாரி சிலன் என்ற பெயர்களாலும் அழைக்கப்
படுகிறான் கடவுள். (இருக் 1)

வள்ளன்மையுடைய இறைவனே,
உனது பெருமை சொல்லில் அடங்காதது.
நீ எடுத்துக் கொள்ளும் உருவங்களுக்கு
ஒரு கணக்கில்லை.
எண்ணற்றவற்றைக் கொண்ட எண்ணற்றவையும் நீ;
நின்னிடத்திலே பல கோடிகளைக் கொண்டவன் நீ
(அதர்13)

எவன் ஒருவன் என்றும் தனித்து விளங்குகிறானோ,
அவனை நம்பு, இரண்டாமவனே இல்லை கடவுளில்.
(அதர் 13)

அனைத்துலகத்திற்கும் தலைவன் அவன்.
சிறந்துயர்ந்த ஆற்றலுள்ள இறைவன்
எங்கிருந்து உதித்தான். (இருக் 10)

தூய திருத்தொண்டு யாவற்றிற்கும் ஏற்றவன்
அவன் ஒருவனே. (இருக் 1)

இறைவன் ஒருவனே மானிடர்கள் யாவருக்கும் தலைவன்
அங்கிங்கென்னாதபடி எங்கும் நிறைந்திருப்பவன்.
அவன் அவன் வகுக்கும் திருவறங்களை
நாம் பின்பற்றுகிறோம். (இருக் 8)



ஈடு இணையற்றவன் அவன்.
மிகப் பெருமை வாய்ந்தது அவன் புகழ். (யசுர் 32)

ஒருவனே அவன்,
விண்ணகத்தின் செம்மலான அவனை
நாம் யாவரும் ஒன்று சேர்ந்து சென்றடைவோம்.
கிடைத்தற்கரிய விருந்தாளி அவன்.
பாதைகள் யாவும் அவன் இருப்பிடத்திற்கே
வழிகாட்டுகின்றன.
புது வடிவம் பெற்று வரவிரும்பிய புதியன் அவன்.
ஒருவனே அவன். (சாம 372)





# புகழ்வாய்ந்த பெருமான்

வடிவமற்றவன் அவன், வடிவமும் உருவமுமற்ற
எல்லாப் பொருள்களிலும் குடியிருக்கிறான்.
குற்றம் குறை இல்லாதவன், எண்ணத்தில்
அப்பழுக்கில்லாதவன், உடல் தொடர்பான
செம்மையில் மேம்பட்டவன்.
தெய்வீக் கவிஞனாகிய அவன் ஒரு சிறப்பறிஞன்,
அமைதியும் இணக்கமும் இணைந்தவனாகத்
தன் படைப்பைச் சீரான நிலையில்
அமைத்துக் காக்கிறான். (யசுர் 10)

நம்மையும் நமது உற்றார் உறவினர்களையும் படைத்து
ஒரு கட்டுக்குள் வைக்கிறான் அவன்.
ஆட்சிப் பகுதிகளையும், பல்வேறு இடங்களையும்
அவற்றின் தொடக்க நிலையையும் நன்கறிந்தவன் அவன்.
அறிவொளி பெற்ற உள்ளுயிரின் உள்ளொளி
யாவும் அவன் அறிவொளி பெற்ற அனைவரும்
அடைந்து அழிவிலாப் பேரின்பம் பெறுகின்றனர்
வீறுடைய இலக்காகிய வீடு பேற்றை அடைகின்றனர்.
(யசுர் 31)



புடவிப் பேராற்றலின் தலைவன் அவன்,
நெசவின் ஊடு பாவு இரண்டையும் நன்கறிந்தவன்,
எந்தப் பொருண்மைகளை நமக்குச் சொல்ல வேண்டுமோ,
தக்க நேரத்தில் அவன் அவற்றைச் சொல்வான்.
அழிவில்லாமல் நிலைத்திருப்பவையும் அழிபவையையும்
படைத்த மூதாதையும் அவனே.
எல்லா அளவுகளையும் திசைகளையும் கண்ணால்
அளந்தவாறு இங்குமங்குமாக, மேலும் கீழுமாக
கட்டின்றி இயங்குகிறான். (இருக் 6)

வையகத்தை உருவாக்குபவன் அவனே
பன்முகம் கொண்ட அறிவின் உறைவிடம் அவன்,
ஒளிமிகுந்த உயிர்கள்அனைத்திலும்
பரவி உள்ளான் அவன்.
உலகைப் படைப்பவனாயிருந்து யாவற்றிற்கும்
ஆதரவாயிருந்து தாங்கி நிற்கிறான்.
அவன் கண்ணில் படாதவை எவையும் இல்லை.
அவன் எல்லாப் பெருமைக்கும் அப்பாற்பட்டவன்.
ஈடு இணையற்ற ஒருவன் என்று அறியப்படுகிறான்.
இன்றியமையாத ஏழு வளிகளடங்கிய
உயிர்நிலை அவனிடம் அடங்கியிருந்து
பேரின்பம் பெறுகிறது,
இன்பமளிக்கும் அத்தனைப் பொருள்களையும்
உயிர்மைகளுக்கு அவன் தந்தருள்கிறான்.
மூவுலகங்களுக்கும் முதல்வனாகிய அவன்
வழிபாட்டுக்கு ஏற்றவன். (யசுர் 17)



எங்குமிருப்பவன் அவன்; ஆற்றல் வாய்ந்தவன் அவனே.
நிலம், இடைவெளி, வானகம் ஆகிய
மூவுலகங்களையும் ஆளுபவன் அவன்.
அவன் எடுத்துவைக்கும் ஒவ்வோர் அடியும்
கமுக்கமானது,
மாந்த இனம் புரிந்து கொள்ள முடியாதது.

(அதர் 7)

வெல்ல முடியாத புடவியைக் காப்பவன்அவனே.
நிலம், வான்வெளி, விண்ணகம் ஆகிய
மூவுலகங்களையும் படைத்தவன் அவனே.
உலகின் திருநிலையை நிலைநிறுத்துகிற
செயல்பாடுகள் அனைத்தையும் கட்டிக்காப்பவன் அவனே.

(சாம 1670)

எங்கும் அவனைத் தேடு,
எல்லாமே அவன் பரப்புக்குள் அடங்குபவை;
அனைத்தும் அறிந்தவன் அவன்,
மெய்யறிவின் பெட்டகம் அவன்,
நடக்கவேண்டியவற்றைத் தீர்மானிப்பவன் அவன்.
அவன் ஒருவனே நமக்குப் புகலிடம்.
அனைத்து ஆற்றல்களையும் பெற்றவன் அவன்.
நமது விருப்பங்களை நிறைவேற்றி வைப்பவன் அவன்.
நமது ஊட்டம், வீறியம், அறிவு, வன்மை ஆகியவற்றிற்
கெல்லாம் உறைவிடமாய் இருப்பவனும்
அவன்தான்.

(இருக் 1)

எங்கும் நிறைந்தவன் அவன்,
என்றும் மாறாத மேலானவன்,



தூய்மையிலும் தூய்மையானவன் அவன்.
நன் மக்களின் நெஞ்சங்களில் வாழ்பவன்.
கோவில் ஓதுவர்களைப்போல நல்ல சொற்களை
மொழிந்து அவற்றைப் பரவச்செய்யும்
ஊக்கி விப்பவன் அவன்.
வீட்டிற்கு வருகை தந்திருக்கும் விருந்தாளியைப்போல்,
அன்பு வேண்டியவன் அவன்.
நின்று நிலைத்திருக்கும் அறமுறைகள் யாவும்
அவன் ஆக்கியவையே.
உலக இயக்கும் ஆற்றல்களாகிய கடல்கள், மண்.
மலைகள் ஆகியவற்றின் ஊடே அவன் தன்னை
அடையாளம் காட்டிக் கொள்கிறான். (இருக் 4)

ஒவ்வோர் உருவிலும் அவன் தன்னை உணர்த்துகிறான்,
இயற்கைச் செல்வத்திலும், படைப்பின் ஒவ்வோர்
அங்கத்திலும் அவனது பங்களிப்புப் பளிச்சிடுகிறது.
அவனது ஆற்றல் ஒன்றே படைப்பினங்கள்
யாவற்றிற்கும் எழுச்சியூட்டுகின்றது. (இருக் 6)





# வழி ஒன்றே

செங்கதிர் போன்று ஒளிமிகுந்தவனும், தனக்குத் தானே
ஒளிசேர்த்துக் கொள்பவனும், உலகத் தலைவனும்
ஆகிய எல்லாம் வல்ல இறைவனை
இப்பொழுது நான் உணர்கிறேன்.
இருண்மையைக் கடந்தவன் அவன் என்கிற உணர்வு
இறப்பின் அச்சத்திலிருந்து என்னைக் காக்கிறது,
இதுவொன்றே அருள்மீட்புக்கு வாழ்வின் குறிக்கோளை
எட்டுவதற்கு, நிலையான பேரின்பத்திற்கு ஒரே வழி
என்று உறுதிபடக் கூறுவேன். (யசுர் 31)

எல்லாவற்றையும் காண்பன அவன் கண்கள்.
அவனின் தோள்களும், அடிகளும் எங்கும் எட்டுபவை.
எல்லாம் அறிந்தவன் அவன், தன்
பேராற்றலால்தான் உலகத்தைப் படைத்தான்,
மண்ணையும் விண்ணையும் அவற்றுள் அடங்கிய
யாவற்றையும் காப்பவனும் அவனே. (அதர் 13)



மக்கள் மேல் ஆட்சி புரிகிறவன் அவன் ஒருவனே,
உலக முழுவதும் அவனுடைய பேரரசு
நமது உணர்வுள்ள ஐம்புலன்களையும்
அடக்கி வழி காட்டுபவன் அவனே. (அதர் 20)

அவனே பேருலகின் கோவேந்தன்
அடிப்பிடிப்பில்லாத வேர்ப் பகுதியில் பேருலகத்தைத்
தூங்கி நிற்பவன் அவனே.
அதன் கிளைகள் கீழ் நோக்கிச் செல்கின்றன,
வேர்கள் மேலெழுந்து நிற்கின்றன. (இருக் 1)

அவனை எவரும் புறக்கணிக்க முடியாது.
எவரும் அவனை வெறுப்பேற்றத் துணிவதில்லை.
அவன் புகழை இடையூறுகள் தடுத்து நிறுத்த முடியாது.
மாந்தர்களைக் கொடுமைப் படுத்துபவர்கள் கூட
அவ்வாறு செய்ய முடியாது.
தீங்கு செய்வதிலேயே ஈடுபட்டிருப்போர்
நிலையும் அதுவே. (இருக் 1)

மாந்தன்மை கொண்ட நல்லோர்களை
அவன் காப்பாற்றுகிறான்.
உயிர்நலம் சார்ந்த அமுத தாரைகள் பாய்ந்தோடி
வர வழி செய்கிறான்.
(அன்பு, உண்மை, அறஆர்வம், எளிமை, நிறைவு,
பெருந்தன்மை அழிவு) (இருக் 1)

நன்னடத்தை உடையோர், அறிவாளிகள்
விதி முறைகளை இயற்றும் இறைவன்



ஆகியோரின் பாதுகாப்பு பெறுபவர் என்றும்
தோல்வியே அடைவதில்லை. (இருக் 1)

எவனைத் தெய்வீக ஆற்றல்கள் தங்களின் தோள்மீது
வைத்துக் கொள்கின்றனவோ,
எவனைத் தீய எண்ணம் படைத்தவர்களிடமிருந்து
காக்கின்றனவோ, அவன் அனைத்து இடையூறுகளையும்
வெற்றி கொள்கிறான். (இருக் 1)

அவன் என்றும் வெல்லப்படுவதில்லை, உலகின்
அனைத்து செல்வங்களையும் அவன் எளிதாக அடைகிறான்
தன்னைப் போன்றே துணிவினர்க்குத் தந்தையாகிறான்.
(இருக் 1)

அன்னம்போல் உயிர்த்துக் கொண்டு புகழ் வாய்ந்த
அறிவாளியாயிருக்கிறவனை எப்போதும் விழிப்புடன்
இருக்கின்ற, இறைவன் எல்லோர் முன்னிலையிலும்
சிறந்தவனாய் வீற்றிருக்கிறான்.
புடவியின் நீராவிச் சுருள்களாகிற முகத்திரையால்
அவன் முகவாய் திரையிடப்பட்டுள்ளது. (இருக் 1)

முழு ஆற்றலையும் தன் கையில் வைத்துக்கொண்டு
உண்மையான தொண்டர்களுக்கு அதைப்
பகிர்ந்தளிக்கிறான் அவன்.
ஆழ்ந்த நினைப்பாலும், மாசற்ற பற்றுறுதியினாலும்
இறைவனை முனிவர்கள் நன்குணர்கிறார்கள்
(இருக் 1)



விரைந்து இயங்குகின்ற பேருலகத்தைப்
படைத்தவன் ஒளிமயமான இறைவன்
தீய ஆற்றல்களைக் கண்காணாத
இடத்திற்கு விரட்டிவிடுகிறான்.
வேட்டைக்காரன் தன் இரையை
அடித்து வீழ்த்துவதைப்போல்,
அவன் தீயோர்களின் செல்வம்
யாவற்றையும் எடுத்துக் கொள்கிறான். (இருக் 2)

அவன் அழிக்க முடியாதவன், அளப்பரும் உயர்வினன்,
காலத்திற்கும் இறப்புக்கும் அப்பாற்பட்டவன்.
ஆக்க ஆற்றல்களின் தலைவன், உலக முழுவதற்கும்
முதல்வன்; இறப்பு நிகழ்வு எதிர்காலம் ஆகிய
முக் காலங்களின் மேலும் ஆட்சி செலுத்துபவன்
ஈடு இணையற்ற அவன் முழுமையான பேரின்பம்.

(அதர் 10)





## நேயத்திற்குரிய கடவுள்

போற்றுதற்குரிய, ஒளிமிக்க, அருள் உள்ளம்
கொண்ட இறைவா,
உன்னிடமுள்ள மங்கலப் பண்புகளை அடியார்களுக்கு நீ
வாரி,வாரி வழங்குகிறாய்.
உனது அன்பு எங்கள் உடல், உயிர் இரண்டையும்
நிறைக்கட்டும்.
மனிதனுடைய வெறுமையான
வாழ்க்கைக்கு முழுமை கொடுப்பது நீ தான்.
எங்களுள் இருக்கும் சிறப்புக் கூறுகளை
உன் காலடியில் படைக்கிறோம்.
உனக்குக் குற்றேவல் செய்வதில் 'நான்' என்கிற
செருக்கினை விட்டொழிக்கிறோம். (இருக் 1)

உலகியல் அறிஞனே, உள்ளுயிர் ஆற்றல்களின்
தலைவனே,
வலுவுள்ளவன் நீ; உற்றார் உறவினர்போல்
அன்பு செலுத்துகிறாய்,
உன்னிடமிருந்து நட்பையும் நேயத்தையும்



வேண்டுகிறோம்.
மெய்யறிவு பெற, உன் பாதுகாப்பை நாடுகிறோம்.
(இருக் 4)

இறைவா, உன் அன்புக்கு நான் மட்டும் தானா,
உன்னுடைய அன்புறவு மீண்டும் கிட்டுமா,
இல்லை, அவையெல்லாம்.
நான் இழந்தது தானா?
இறைவா, என்றும் நான் உன்னுடனேயே
இருக்க வேண்டும், எனக்கு முழுமையான
மகிழ்ச்சி கிட்டவேண்டும்.
நெஞ்சைத் துழாவும் பொழுது, என் கனவுகளில்
நான் உன்னையே காண்கிறேன். உன்னிடமே
உரையாடுகிறேன். (இருக் 7)

உன் பொங்கி வழியும் அன்புகொண்டு உள்ளத் தூய்மையுடன்
உன் புகழ் மேலும் மேன்மை பெறப்,
பணிவுடன் வேண்டுகிறோம்.
நிறை மனத்தின் ஊற்றுக் கண்ணாக
எங்கும் பரந்திருக்கும்
விண்ணொளியின் உள்ளுயிர்
எங்கள் நெஞ்சத்தில் உள்ளது.
மூதாதையே, எங்களை வாழ்த்தியருளும். (இருக் 8)

பேரொளிப் பிழம்பே, என்னுடைய நற்குணங்களும்
செய்கைகளும் நின் விருப்பத்திற்கு
இசைந்தனவாக இருக்க அருள் செய்.
நின்னிடமுள்ள என் அன்பு "யான்" என்கிற



அகந்தையை மீறட்டும்.
'உனது', 'எனது' என்கிற தடைக் கற்களைத்
தகர்த்து முன்னேறிச் செல்ல வாழ்த்தி அருள்வாய்.
'யான்', 'எனது' என்கிற எண்ணங்கள் நீங்கி,
'நீ', 'உனது' என்கிற எண்ணங்கள் மேலோங்கட்டும்.
(இருக் 8)

சிறப்புடைய இறைவன் கைக்கெட்டும்
தொலைவில்தான் உள்ளான்,
கண்ணுக்குத் தெரியும் தொலைவில்தான் இருக்கிறான்.
இயற்கையின் எழிலொளியைப் பார்,
கடவுள் ஆக்கிய கவிதையைப் பார்,
இரண்டுமே அழிவுக்கும் இறப்புக்கும் அப்பாற்பட்டவை.
(அதர் 10)

நீயே எங்கள் பாதுகாவலன்.
நின்னை வழிபடுபவர்க்கு எல்லா நலன்களும்
அருள்பவனே.
நீயே எங்களின் தோழன், தந்தை, எந்தைக்கு முந்தையே,
வழிபடுவார்க்கெல்லாம் நலன்களை ஈந்தருள்பவனே,
எங்களுடைய படையல்கள் யாவும்
பற்றார்வத்துடன் ஈபவை.
மொழியின் அன்னையே, நாங்கள் செய்யும்
வேண்டுதல் ஒவ்வொன்றும் உனக்கு மகிழ்ச்சியுண்டாக்கும்
அன்புக்குரிய தேவியே, உன்னுடைய பாதுகாப்பில்
எங்களுக்கு அடைக்கலம் கிட்டுவதாகுக.



உனது ஆதரவின் துணைகொண்டு எங்களை
எதிர்ப்பவர்கள் எவரையும் வலுவிழக்கச் செய்வோம்.
நீ எங்கட்குரியவன், நாங்கள் உங்கட்குரியவர்கள்.
(இருக் 8)

பால்குடிக்கக், கன்றினைப்
பசுவினிடம் அழைத்துச் செல்வதைப் போல
உன் நண்பனை நின்னிடம் அழைத்துக் கொள்.
இசைக் கலைஞனே,
அன்பைப் பொழிபவனை எழுப்புவாய்.
உணவு நிறைந்திருக்கும் அமுதசுரபி போல்,
வாரி வழங்கும் வள்ளவலான இறைவனைச்
செயல்படத் தூண்டுக. (இருக் 10)

பேரொளி படைத்த ஒருவனே,
என்றும் நிலைத்திருக்கும் ஞாயிற்றினை,
மக்கள் மேல் ஒளிவெள்ளம் பாய்ச்சுகிற
விண்மீனைப் படைத்தவன் நீ.
எங்கள் அருகில் இருக்கும் வீறொளியன் நீ
சிறந்த மிக நெருங்கிய அருங்கலையே,
பாடகனைச் சற்றே எண்ணிப்பார், அவனுக்கு அருள் புரிக.
(இருக் 10)

உன் பற்றாளனாகிய நான், ஆழ்ந்த நீரோடையின்
இசையில்தான் இருக்கிறேன்,
ஆயினும் எனக்கு வேட்கை எடுக்கிறதே.
அருளளிக்கும் ஆண்டையே, என்னிடம் இரக்கம் காட்டு.
என் வேட்கையைத் தணிப்பாய்,
மகிழ்ச்சியையும் நிறைவையும் எனக்களிப்பாய். (இருக் 7)



# போற்றி வழிபடுதல்

போற்றிப் புகழத் தக்க மேலாண்மைப் பெரும,
காப்பில்லாதோரைக் காப்பவன் நீ.
புடவிப் படைப்பின் ஈகையே
உண்மையைத் தேடுபவனுக்கு நாலா திசைகளிலிருந்தும்
கடவுள் அருட்பேறு கிட்டுமாக. (இருக் 1)

அப்பழுக்கற்ற அறத்தைக் கையாளும் பேரொளிப் பெரும,
ஐம் பூதங்களையும் இணங்கிச்
செயல்படச் செய்பவன் நீயே.
உன் ஆணையின் பேரில் ஞாலங்கள் யாவையும்
உலகின் நன்குணர செய்யப்பட்ட
மேற்கவிகையுடன் ஒன்றுகின்றன.
விரைந்து வந்து எங்கிருப்பினும்
அவை நமக்கு உதவுகின்றன. (இருக் 1)

கடவுளே, நீ மிகமிக உயர்ந்தவன்,
அளவற்ற மேன்மைக்கும் மேன்மையன் நீ,
எல்லையற்றவன் நீ, வானகத்தின் வெளிக்கப்பால்

உண்மையிலேயே இருப்பவன் நீ உயர்ந்த நிலைகளின்
முதல்வன் நீ தான். (இருக் 1)

பேராழிகள் போன்று உள்வாங்கி வெளியேற்றும்
உனது ஆற்றல் அளவு கடந்தது.
உனது பேரொளிப் பிழம்பால் உலகனைத்தையும்
காக்கிறாய் நீ.
பேராழிகள் போல் நீயும் ஆற்றலைச் சேர்த்துக் கொள்கிறாய்.
ஞாயிற்றின் கதிர்கள்போல வெளியேற்றுகிறாய்.
(இருக் 1)

எங்கும் நிறைந்த செம்பொருளே,
உனது புகழ் மேலுலகங்களுக்கும் நானிலத்துக்கும்,
உலகின் மற்ற பகுதிகள் அனைத்துக்கும்
ஒளி சேர்க்கிறது. (இருக் 1)

உள்ளேயும் வெளியேயுமான போராட்டங்களில்
நீ காக்கும் மனிதன்,
அனைத்துத் கீழ்மைகளிலிருந்தும் விடுபட்டுச்
சிறந்த அறிவொளி பெறுகிறான். (இருக் 1)

மெய்யறிவின் உறைவிடமே,
அனைத்தையும் அறிந்தவனே,
விளக்கமறியாத உன் அன்பனுக்கு வழிகாட்டியாக இரு.
கெட்ட வழிகளிலிருந்து மீண்டு வந்து
நல்வழியை அவன் கடைப்பிடிக்கப்படும்
வலுவுடையவர்கள். ஆனால்
கெட்ட பாதைகளில் செல்வோரிடமிருந்து
ஆற்றலற்றவர்கள்



ஆனால் நேர்வழியில் செல்பவர்களைப்
போராட்ட காலங்களில்
நீ என்றும் காப்பாற்றுகிறாய். (இருக் 1)

போற்றுதலுக்குரிய கடவுளே!
இறக்கக்கூடிய மானிடனுக்குக் கை கொடுத்து,
இறவா நிலைக்கு நீ இட்டுச் செல்கிறாய்,
உன்னைப் புகலடைந்தவர்களுக்கு
இம்மையிலும் மறுமையிலும் அனைத்து
இன்பங்களையும் வாழ்நலன்களையும் அளிக்கிறாய்.
(இருக் 1)







# படைப்பாற்றலில் புனைவு

இயற்கை எழில் இறைவன் அருளும் அற்புதங்களில் ஒன்று.
அழகிய பொருள் ஒவ்வொன்றிலும் கடவுளின்
கைவண்ணத்தை உணர்வோம்.
அவனின் கைபட்ட உடனேயே
ஆறுகள் சிலிர்த்தெழுந்து சுழித்துச் செல்கின்றன.
அவன் புன் முறுவலிக்கும் போதே செங்கதிர்
ஒளிர்கிறது, வெண்ணிலா ஒளிவிடுகிறது, விண்மீன்கள்
மின்னுகின்றன, பூக்கள் மலர்கின்றன.
எழு ஞாயிற்றின் முதல் கதிர்கள் பட்டதுமே,
உலகம் விழித்தெழுகிறது.
வீசும் ஒளிவெள்ளம் செம்மலரின் முறுவலிக்கும்
மொட்டுகளின் மேல் சிதறி விழுகிறது,
பாடும் பறவைகளின் இன்னிசை நறுமணம்
வீசும் காற்றோடு கலக்கிறது.
புலர்காலைப் பொலிவு கடவுளின் புனைவுத்
திறனின் வெளிப்பாடு. (இருக் 1)



போற்றுதலுக்குரிய தலைவ,
தாங்கள்தான் எங்களுக்கு உயிர் அளிப்பவர் என்றும்,
நாங்கள் தங்களுடைய நெருங்கிய உற்றார் சுற்றார்
என்றும் எண்ணும்படியாகவும், தாங்கள் அத்தனை
பெருந்தன்மை யுடையவராயிருக்கிறீர்கள்.
பிறர் வெல்ல முடியாத தன்மையினால் வீரம்
பொருந்திய மாந்தர்களை விரும்புகிறீர்,
நல்லவர்களைக் காப்பாற்றுகிறீர்.
ஆகவே, அனைவரும் நூற்றுக்கணக்கில், ஏன்
ஆயிரக்கணக்கில் கூட உன்னைப் புகலடைகிறார்கள்.
(இருக் 1)

தேவர்களுக்குத் தலைவன், முனிவர்களில் சிறந்தவன்,
புகழ்வாய்ந்தவன் நீ.
உயிர்நலன் சார்ந்த அறிவின் தலை சிறந்த,
நின் இருப்பிடத்திற்கு நாங்கள் வந்துள்ளோம்.
கருணை கூர்ந்து எங்கள் முறையீடுகளைக் கேளுங்கள்.
(இருக் 2)

மகன் தந்தையை வணங்குவது போல்,
நான் தங்களை வணங்குகிறேன்.
என்னுடைய குறைகளை நீக்கி அருள்புரிக.
(இருக் 2)

மிகச்சிறந்த வழிகாட்டியாகயிருந்து
நீ ஒருவனை முன்னேறச் செய்கிறாய், காத்தருள்கிறாய்,
உன்னைப் புகலடைபவர்களுக்கு
எந்தத் தீங்கும் நேர்வதில்லை
அறிவனைப் பழிக்கிறவனை நீ தண்டிக்கிறாய்,



முரடனுடைய சீற்றத்தைத் தணிக்கிறாய்.
செம்பொருளே உன் பெருமையைக் கூறச் சொற்களில்லை.
(இருக் 2)

தனிமுதன்மைப் படைப்பாளியே,
நீ இட்ட முறைமைகளை எவரும் மீற இயலாது.
பாலைவனத்தில் தண்ணீரைத் தேடியலையும்
காட்டு விலங்குகளும்
நீ படைத்தளித்த நீர் நிலைகளில் தண்ணீர் குடித்து
வேட்கை தீர்த்துக் கொள்கின்றன.
பறவைகள் உணவருந்தவே நீ காடுகளைப் படைத்தாயோ!
(இருக 4)

மதிப்புணர்ச்சிப் போற்றுதலுடன் நான்
உண்மையை பின்பற்றுகிறேன்.
உயிர் வாழ்கின்ற எல்லாமே
உன்னருளினால்தான் வாழ்கின்றன.
உலகின் ஒரே வலிமை அளிப்பவன் நீ.
விண்ணிலோ, மண்ணிலோ,
இருக்கும் செல்வம் அனைத்தும் உனதே. (இருக் 4)

உலகைப் படைத்த தெய்வீகனே.
அறிவு, பற்றுறுதி இவற்றில் முதிர்ந்தவர்களுக்கு
இறவா வரம் அளிக்கிறாய் நீ.
பின்னர் அவர்களுக்கு உனது
முழு பாதுகாப்பை அளிக்கிறாய்.
தொடர்ந்து அவர்களுக்கு உன் ஆசிகளை
வழங்கிய வண்ணமிருக்கிறாய். (இருக் 4)



**த.கோ - தி.ஸ்ரீ**

அனைத்து உலகையும் காப்பவனே,
நீ தேர்ந்தெடுத்த பாதையை எவரும்
தடை செய்ய முடியாது,
அந்தப் பாதையிலிருந்து நகரச் செய்யவும் முடியாது.
பறந்த மண், விரிந்த விண் முழுவதிலுமே
உன்னுடைய கைவண்ணம் படிந்துள்ளது.

(இருக் 4)





# ஓய்வற்ற அன்னம்

உண்மையை இடைவிடாமல் தேடுதலே வாழ்க்கை.
மானிட உயிராகிய அன்னம் உண்மையைத் தேடித்
தன்னுடைய முடிவற்ற பயணத்தைத் தொடங்குகிறது.
இறக்கைகளை நன்கு பரப்பி உயர உயரச் சென்று
அளந்தறிய முடியாத விண்ணை எட்டுவதற்காக
ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பறந்து கொண்டேயிருக்கிறது.
ஓய்வற்ற அன்னத்தின் நீண்ட நெடிய பயணம் அது,
ஆற்றலுள்ள இறைவனின்அருளாட்சி அதற்குண்டு.
அன்னத்தின் கூரிய பார்வை நிலத்தின்மேல் நன்கு
விழத்தான் செய்கிறது.
ஆயினும் அதற்கு ஓய்வொழிவு கிடையாது,
அமைதியுந்தான்.
மேலே மேலே பறந்து கொண்டுதானிருக்கிறது.
ஓய்வில்லாத அன்னப்பறவை
முடிவு காண முடியாத பயணத்தைத்
தொடர்ந்து கொண்டு தானிருக்கிறது. (இருக் 10)



முகில்களைத் தாண்டி செங்கதிர் எவ்வாறு மேலே மேலே செல்கின்றானோ அவ்வாறே
உனது அடியார்களின் நிலையை நீ மேலும் மேலும் உயர்த்திச் செல்கிறாய்.
அனைத்து ஏந்துகளும் கொண்ட இல்லங்கள்
அவர்களுக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.
அவர்களின் நிலை எவ்வளவுக் கெவ்வளவு
உயர்கிறதோ, அத்தனைக்கத்தனைப் பற்றுறுதியை
அவர்கள் உள்ளத்தில் நீ நிறைக்கிறாய்.
உனது அன்பு அவர்களுக்குக் கிடைக்கிற போக்கில்
உன்னுடைய கட்டளைக்கு
அவர்கள் பணிகின்றனர். (இருக் 4)

நல்லறங்களை ஊக்குவிப்பவனே,
தெய்வீக ஆற்றல்கள் உன்னைப் போற்றுகின்றன.
யாவருக்கும் நன்மை செய்பவனாதலால்,
நீயே மாந்தரையும் மானுடத்தையும் ஊக்கி
மேம்படுத்துகிறாய். (இருக் 6)

இறைவா, வையக ஆற்றல்கள் உன்னைப்
போற்றிப் புகழ்கின்றன.
காணமுடியாத இருட்டில் ஞாலத் தீ அதே
நிலையில் இருக்கிறது.
என்றும் அழிவில்லாத இறைவன் நமக்கு
வேண்டியவற்றை அளித்துக் காக்கட்டும். (இருக் 6)

ஒப்பற்ற நற்பெரும் செயல்கள் செய்பவனே,
வையக வேள்வி புரிபவனே,
உனக்குத் தெரியாத வழிமுறைகள் ஏதுமில்லை;



எவ்வாறு பயணிப்பது, எப்படி விரைவாகச் செயல்படுவது
அனைத்தும் நீ அறிவாய். (இருக் 6)

உன் அருள்பார்வை எங்கு யார்மேல் படுகிறதோ,
அங்கங்கு அவன் சிறப்படைகிறான்.
மேன்மைபொருந்திய ஆற்றலை அருமையான வீறியத்தை
அவனுக்களிக்கிறாய் நீ,
அவன் நெஞ்சத்தினை
உன் வீடாக்கிக் கொள்கிறாய் நீ. (இருக் 6)

நின்று நிலைகொண்டிருக்கும் இறைவா,
உனக்கு எங்கள் மனமுவந்த பாராட்டுகள்;
எங்களுக்குக் கிடைத்தவற்றை நிறுத்திக் கொள்கிறோம்.
உனதருளால் மேலும் மேலும் பெறுகிறோம்.
எல்லாம் உன் கருணையாலன்றோ? (இருக் 7)

அழியும் மாந்தர்களிடையே நீ அழியாதவன்.
அவர்கள் புரியும் புனிதமான பணிகளைக்
கட்டிக் காக்கிறீர்கள்.
ஆகவே யாதொரு புனிதப் பணியைத்
தொடங்கு முன்னும் உன்னை வழிபடுகிறோம்.
(இருக் 8)

எந்த இடத்திலும் நீ ஒன்று போலவே இருக்கிறாய்.
நீ படைத்த மக்கள் யாவரிலும்
நீயே மேலான ஆற்றலுள்ளவன்.
எங்கள் போராட்டங்கள் யாவிலும் உன்
துணையை நாடுகிறோம். (இருக் 8)



பேரிறையே, வஞ்சமின்றி உண்மை நாடுபவருக்கு,
வேண்டுவன பெறுவதில் பெருமகிழ்ச்சி.
ஆசையற்ற உள்ளம்,
களங்கமற்ற நல்மனம்,
கூர்மையான அறிவு இவற்றை அருள்வாய். (சாம 306)

எங்கெங்கிருந்தோ உன்னைத் தொழுது வேண்டுகிறோம்,
எங்களைக் காத்தருள அழைத்தோம்,
தேய்வு, மாய்வு இவற்றிலிருந்து
விடுவிக்குமாறு இரஞ்சுகிறோம்.
எங்கள் வேண்டுகோள்களுக்கு நீ செவி சாய்த்தாய்.
நாலாவிடங்களிலிருந்தும் நின் பேரின்ப வாழ்த்துகள்
எங்கள் மேல் பொழிந்தன. (அதர் 19)

அண்டப் பெருவெளியின் ஒளியே, ஆற்றலே,
உன்னை நீயே அண்டங்களின் ஆணைகளுக்கு
ஆட்படுத்திக் கொள்கிறாய். (யசுர் 4)

எல்லையற்ற காலம் நிலைத்திருப்பது வானகம், காற்று.
எல்லையற்ற காலம் நிலைத்திருப்பவை தாய், தந்தை, மகன்,
வாழ்பவை எல்லாம் எல்லையற்ற காலம்
நிலைத்திருப்பது சமூக உணர்வு.
இதுவரை தோன்றியவை, இனி தோன்றப் போகின்றவை
எல்லாமே எல்லையற்ற காலம் நிலைத்திருப்பவையே.
(இருக் 1)



# வேண்டுதல்

மேலான எண்ணங்கள், உயர்ந்த அருஞ்
செயல்கள் இவற்றுடன்
வழிபாட்டுணர்ச்சியோடு இரவும், பகலும்
உன்னை அணுகுகிறோம். (இருக் 1)

முடிவான பேரின்பத்திற்கு வழிவகுக்கும் முறையான
பாதையை எவன் தேர்ந்தெடுக்கிறானோ,
அவன் மேலும் மேலும் முன்னேறுகிறான்.
அவன் எடுக்கும் ஒவ்வொரு முயற்சியிலும்
இறைவன் துணை நிற்கிறான்.
அவன் செல்லும் வழியை அன்புறவுடனும்
முன்னின்றும் எளிதாக்குகிறான்.
இறைவனின் நல்வாழ்த்துகள் அவனுக்குக் கிட்டுகின்றன.
(இருக் 1)

தலை தாழ்த்திக் கைகூப்பி இரவின் பகலின் ஒவ்வொரு
காலமும் உன் திருவடிகளைப்
புகலடையும் பற்றாளன் வேண்டுகிறான்

**த.கோ - தி.ஸ்ரீ**



‘இறைவா, எனக்கருள் புரிவாய். தன்னைத் தானே
புரிந்து கொள்ளும் தகுதியைக் கொடுக்கும் நெறியில்
என்னை இட்டுச் செல்வாய். (இருக் 1)

செம்பொருளே, தூய மேன்மையான அன்புகாட்டி
என்றனுக்கு மதிப்பரிய வாழ்த்தினை அருள்.
நிறைந்த செல்வமளி, வாழ்க்கையின் இடர்பாடுகளைக்
கடக்க அது உதவும்.
கேட்டார் பிணிக்கும் சொல்லாண்மை, நல்லூழ்,
நற்பெயர் ஆகியவற்றை எனக்களிப்பாய். (இருக் 3)

பெருந்தலைவ,
எங்களை நெருங்கி வருவாய். வரும்பொழுது
உன் தெய்வீக ஆற்றல்களையெல்லாம் கொண்டு வருக.
அவற்றினைப் பகுத்துண்டு மகிழ்ச்சியடைவோம்.
(இருக் 6)

வையகம் நிறைந்த வான்பொருளே,
எங்கள் வழிபாடுகளுக்குச் செவி சாய்த்து
எங்கள் இதயங்களில் குடி கொள்வாய்
புனிதமான நரந்தம் புல் இருக்கையாகக்
கொள்ளப்படுவது போல்,
எங்கள் நெஞ்சங்கள் உனக்கு
இருக்கையாக இருக்கட்டும். (இருக் 6)

பரம்பொருளே, ஆறுகள் ஆழியில் அணைவது போல,
உன்னிடம் இணைவதற்காக நாங்கள்
ஒடோடியும் வருகிறோம்,
செழுமையான இடம் என்றெண்ணி உழாத நிலத்திற்கு



நாங்கள் சென்றிடாமல் தடுத்து ஆட்கொள்வாய்.
உன்னுடைய இடத்தில் நின்று நிலைத்து, வாழ்ந்து
ஒருவரையொருவர் அன்புறுவோமாக. (இருக் 4)

மேன்மையனே, வையத் தலைவனே,
பேரொளி ஒளியின்மை
இவ் இரண்டிற்கும் தலைவனே,
செல்வம் ஊட்டம் அருள் ஆற்றல் யாவற்றிலும்
தலை சிறந்தவனே,
இந்த விடியற்காலைப் பொழுதில்
உன்னைத் தொழுகின்றோம். (அதர் 3)

இறையன்பர்களே, பறந்து செல்லும்
அன்னங்களைப் போல்,
ஆழ்ந்த பற்றார்வத்துடன்
போற்றிப் பாடல்களைப் பாடுங்கள்.
இயற்கை அன்னையின் வளம்பெற்று
அருளின்பக் கடலான இறைவனின் பெருமையில்
பங்கெடுத்துக் கொள்ளுங்கள். (யசுர் 6)

அன்பர்களே, நாமெல்லோரும் ஒன்று சேர்ந்து
இறைவனுக்கு நம் பற்றார்வத்தையும்
அன்பையும் செலுத்துவோம். (யசுர் 36)



# அளிக்கை / காணிக்கை

உயிர்மூச்சு அருள்பவன் எவனோ,
ஆற்றல் கொடுப்பவன் எவனோ,
ஊக்கம் அளிப்பவன் எவனோ,
எவனுடைய கட்டளைக்கு அனைத்து ஆற்றல்களும்
அடிபணிகின்றனவோ,
அந்த இறைக்கு எங்களை அளிக்கிறோம்.
நிலைத்த வாழ்வு என்கிற நிழலின் அதிகாரியாகிய
காலதேவன் யார்? (இருக் 10)

உயிர்ப்பவை, இயங்குபவை. இருந்த இடத்திலேயே
இருப்பவைை இவற்றை ஆளுகிறவனும்,
மாந்த இனத்திற்கும், விலங்கினத்திற்கும்
படைப்பாளியாகிய அந்த முழு முதல்வனுக்கு
நாங்கள் அடிபணிகிறோம். (இருக் 10)

எவனுடைய பெருமை பனிமூடிய மலைகளில்
எதிரொலிக்கிறதோ,
எவனுடைய புகழ் முழுக்கமிடும் கடலலைகளால்



எதிரொலிக்கப்படுகின்றனவோ,
எவனுடைய அகற்சி நெடுந்தோள் போலுள்ள திக்கு
திசைகளினால் உறுதி செய்யப்படுகின்றனவோ,
எவனுடைய நீள் நெடுந் தோள்கள் வையகத்தையே
அனைத்துக் கொள்கின்றனவோ,
அந்த ஒருவனுக்கே, அவனுக்கு மட்டுமே,
அந்தப் பேரொளியோனுக்கு மட்டுமே
எங்களை முழுமையாக அளித்துக் கொள்கிறோம்.

(இருக் 10)

மண்ணுலகைப் படைத்தவன் நமக்கு என்றும்
தீங்கு இழைக்காமலிருப்பானாகுக.
ஈரேழு பதினான்கு உலகங்களையும் படைக்கிறவன்
அவன், வடிவங்களை மதிக்கிறவன் அவன்,
பளிங்கு போல் தூய ஆற்றலுள்ள தண்ணீரை
வழங்குபவன் அவன்.
அவனையன்றி வேறு எந்தக் கடவுட்கு நாம் நம்மை
அளிக்கவேண்டும்? (இருக் 10)

எல்லாப் படைப்புகட்கும் தந்தையே,
நீ மட்டுமே உன்னால் படைக்கப்பட்ட
யாவற்றின் மேலும் அன்பு காட்டுகிறாய்.
எங்களுடைய வேண்டுதல்களைப் நிறைவு செய்பவன்
உன்னையன்றி எவருமில்லை.
அவனையன்றி வேறு எந்தத் தெய்வத்திற்கு நாம்
நம்மை உரிமையாக்கிக் கொள்ளவேண்டும்?

(இருக் 10)





விண்ணுலகத்திற்கும், மண்ணுலகத்திற்கும்
ஆற்றல்அளிக்கிறான் அவன்.
வானகம், கடவுளர்களுடைய உறைவிடத்தை
ஆக்கிபவன் அவனே.
இடையேயுள்ள பரப்பிடங்களை அளந் தெடுப்பவனும்
அவன் தான்.
அவனையன்றி வேறு. எந்த தெய்வத்திங்கு நாம் நம்மை
அளித்துக் கொள்ளவேண்டும்?







## உறுதியான தீர்மானம்

மெய்யறிவின் மூலமுதலாகவும்
ஒளிக்கே ஒளி அளிப்பதுவமாயிருக்கிற
எனது இந்த மனம்
எங்கெங்கெல்லாமோ அலைந்து திரிகிறது.
நான் உறக்கத்தில் இருந்தாலும் சரி, விழித்திருந்தாலும் சரி,
இந்த நிலை தொடர்கிறது.
ஓ, மனமே, உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

சமுகத் தொடர்புள்ள நிகழ்ச்சிகளில்
இறைவன் நியமித்த கடமைகளை
ஊக்கமுள்ள, அறிவாளிகள் செய்து முடிக்கின்றனர்.
இது இயல்பான செயலே.
ஓ, மனமே, உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

உயிர்கள் யாவற்றிலும்
மனமே அறிவின் இருப்பிடம்.
மனமே மெய்யறிவின் ஊற்று,



மனமே நினைவாற்றலின் இருப்பிடம்.
மனம் செயல்படாவிடில், எக்காரியமும் நடைபெறாது.
ஓ, மனமே, உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

தேர்ந்த சிறந்த தேரோட்டிபோல், நம்மை வழி
நடத்திச் செல்வது மனம்.
விரைந்து நடைபோடுகிற குதிரைகளைக்
கடிவாளமிட்டு அடக்குவது மனம்.
விரைவும், வீறியமும் உள்ளது மனம்.
நெஞ்சத்தில் நிலைத்திருப்பது மனம்.
ஓ, மனமே. உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

கடந்தகால, நிகழ்கால நிகழ்வுகள் பதிந்திருப்பது
மனத்தில் தான்.
நற்செயல்கள் யாவும் நிகழ்வது ஏழு புலன்களின்
செயற்பாட்டினால் தான்.
மனமே அறிவற்ற ஊக்க எழுச்சி.
ஓ, மனமே, உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

தேராழியின் ஆரங்கள் போல்
இருக், சாம, யசுர், வேத வாய்மொழிகள்
ஒன்றுடனொன்று தொடர்புள்ளவையாக,
நம் உள்ளத்தினுள் இடம் பெற்றுள்ளன.
ஓ, மனமே, உயர்ந்த நோக்கு எது என்பதைத்
தீர்மானிக்க வேண்டியது நீ தான். (யசுர் 34)

## நிலையான அமைதி

அமைதியின் பெருந் தலைவ,
விண்ணுலகிலும், மண்ணுலகிலும் அமைதி நிலவட்டும்.
நீர், செடி கொடிகள், புல் பூண்டுகள் யாவும் நமக்கு
நல்ல உடல் நலம் அளிக்கட்டும்.
தெய்வீக ஆற்றல்கள், இயற்கை ஆற்றல்கள் இரண்டும்
நம்மிடம் பரிவு காட்டட்டும்.
நன்மை செய்யட்டும், அமைதி மட்டுமே
வற்றாத மகிழ்ச்சியை அளிக்கட்டும். (யசுர் 36)





# தெய்வீக உறுதிமொழி

வாழ்வின் அனைத்துஆற்றல்ளும் நற்பணியில்
ஈடுபட்டிருப்போருக்கே துணை புரிகின்றன. (இருக் 1)

பாரம் மிகுந்திருந்த மரக்கிளையிலிருந்து
பழுத்த பழம் தானே உதிர்வதுபோல,
இறைவனுடைய வளம் மிகுந்த பரிசுகளான
மெய்யறிவும் செல்வமும் அவன்
அடியார்களுக்குத் தாமே கிட்டுகின்றன. (இருக் 1)

இறைவன் அனைத்து ஆற்றலுள்ளவன். அதே சமயம்
நிறைவாக முழு நம்பிக்கையுடன் எவர்
அவனைச் சரணடைகிறார்களோ, அவர்களுக்கே
அவனுடைய துணையும் பாதுகாப்பும் கிடைகின்றன.
(இருக் 1)

இறைவனிடம் வைத்திருக்கும் திடமான
நம்பிக்கை மட்டுமே மனிதனுடைய அச்சத்தையும்
அறியாமையையும் நீக்க வல்லது. (இருக் 2)





இறைவனிடம் முழு நம்பிக்கை வைத்திருப்பவன்
வாழ்க்கை போராட்டத்தில் சந்திக்கும் எல்லாத்
தடைகளையும், இடர்பாடுகணையும் வெற்றி கொள்கிறான்.
(இருக்4)

தன் வாழ்க்கையை இறைவனின் பணியில் எவன்
ஈடுபடுத்திக் கொள்கிறானோ, அவனை இறைவன்
தன் அன்பினால் அரவணைத்துக் கொள்கிறான்.
அப்படிப்பட்டவன் இறைவனின்
இன்னருளைப் பெறுகிறான்,
அவன் அன்பில் திளைக்கிறான். (இருக் 5)

இறைவனின் நினைப்பு எவனிடம் என்றுமிருக்கிறதோ,
அவனைத் துதிப்பாடல்கள் விரும்புகின்றன,
அவனை நாடுகின்றன.
அவனை நோக்கி இறைவன் இவ்வாறு கூறுகிறான்.
உறுதியும் அளிக்கிறான் :
"என்றும் நான் உனக்கு உயிர் நண்பனாய்
இருப்பேன், உற்ற துணையாயிருப்பேன்." (இருக் 5)

தன்னலம் கருதாமல் பிறருக்கு எவன், பணி புரிகிறானோ
அவன் இறைவனுக்கு வேண்டியவனாகிறான்.
இறைவனின் நற்குணங்களை ஏற்றுக் கொள்கிறான்.
(இருக் 6)

தன்னிடம் உள்ளன்பு கொண்டிருப்பவர்களுக்கு இறைவன்
அச்சமில்லாத, வீரமுள்ள குழந்தைகளை உருவாக்கும்
பேற்றினை அருளுகிறான். (இருக் 8)



எல்லோர் உள்ளங்களிலும் இறைவன் குடி
கொண்டிருக்கிறான் என்று
எவன் திடமாய் நம்புகிறானோ,
அவனுக்கு எத்தகைய துன்பங்களையும் எதிர்த்துப்
போரிடும் பலத்தையும்,
ஒரு புன்முறுவலுடன் தாங்கிக் கொள்ளும் ஆற்றலையயும்
இறைவன் அளிக்கிறான். (அதர் 20)

இறை பக்தியில் என்றும் நிலைத்திருக்கும்
மனம் துன்பமென்னும் கருமேகங்களில்
ஒரு பொழுதும் சிக்கிக் கொள்வதில்லை. (இருக் 10)

ஒளி வீசும் இறைவா,
உன் அடியவர் சிறுமைப்பட என்றும் விடுவதில்லை நீ.
மேலும் மேலும் அவனுக்கு ஆதரவளிக்கிறாய் நீ.
(சாம 300)





## வாழ்த்து

ஒளிமயமாய்த் திகழும் தேவனே, செல்வம், புகழ்,
நிமிர்ச்சி ஆகிய மேன்மைகளை எனக்கு அருள்வாயாக.
வானகத்தில் ஒளி வீசும் பரிதி போன்று
நான் மிளிர வேண்டும். (அதர் 10)

ஈடு இணையற்ற தேவனே, வலிமையில் நிகரில்லாதவனே,
நீதி வழங்குவதில் அறத்திலிருந்து வழுவாதவனே,
தீங்குகளிலிருந்து எங்களைப்
பாதுகாப்பாகக் கரை சேர்த்து விடு,
உடல், மனத் தொடர்பான சோர்வை அகற்றி விடு.

படைப்புத் தொழிலின் சிற்பியே, எந்தக் காரியத்தையும்
அப்பழுக்கின்றி செய்து முடிப்பவனே,
அறிவின் உறைவிடமே,
உண்மையின் காவலனே,
எங்களைக் காத்துக் கொள்ளத்
தேவையான துணை அருளிச் செய்



இயற்கை ஆற்றல்களுடன் தொடர்புள்ள அறிவர்களே,
எங்களுக்கு மகிழ்ச்சி அளியுங்கள். (இருக் 3)

குற்றமொன்றுமில்லாத குணக் குன்றே, தங்கள் தீர்ப்பில்
நாங்கள் பாவம் செய்யாதவர்களாக இருக்க வேண்டும்.
பாவம் புரிந்தவனுக்கு நீ கருணை காட்டுகிறாய்,
உலக நாயகியின் கட்டளைகளை நாங்கள்
நிறைவேற்ற வேண்டும், வாழ்த்தி அருளுங்கள்,
வாழ்த்தி அருளட்டும் அன்னை. (இருக் 7)

பேரொளியானே, ஊட்டமளிப்பவனே,
மகிழ்ச்சியான வாழ்க்கை, அமைதி, வளமை இவற்றை
எங்களுக்கு வழங்குவாயாக.
நிற்காமல் நிலைக்காமல் நகர்ந்து கொண்டேயிருக்கும்
தெய்வீகத் தேரில் அமர்ந்திருக்கும் இறைவனே,
என்றும் எங்களுக்குச் செல்வம், அறிவு, மகிழ்ச்சியை
அளித்துக் கொண்டிருப்பாயாக. (இருக் 1)

எங்களுக்கு நீ அளித்திடும் சீரிய மெய்யறிவையும்
உற்சாகத்தையும் மேலும் மேலும்
வளர்த்துக் கொள்வோமாக.
துதி பாடல்கள் மூலம் உனக்கு நாங்கள் விடுக்கும்
கோரிக்கைகளுக்கு இரங்கி, இறைவா,
வரும் காலத்திற்கும் எங்கள் பணி பயன்பட அருள் புரிக.
(இருக் 2)

ஒளியும், பொலிவழகும் நிறைந்த எம் அரசே,
எங்களுக்கு செழுமை அளி.'
விண்ணுலக நாயகியும், செல்வத்தின் அதிதேவதையும்



எங்களுக்கு எல்லா வளமும் அருளட்டும்,
அனைத்து வல்லமையுள்ள இறைவன்
எங்களுக்கு உற்சாகம் நல்கட்டும்,
எவரும் எதிர் கொள்ள முடியாத வல்லவனே,
எங்களுக்கு எல்லா நலங்களும் அளிப்பாய்.

(இருக் 5)

தேவனே, உலகத்திற்கு நன்மை, செய்பவனே, எங்களிடம்
குடிகொண்டிருக்கும் கொடிய ஆற்றல்களை அழித்துவிடு.
எங்களுக்கும், வருங்கால மரபினருக்கும் பயன்படும்
அருள் செல்வத்தை அளி. (இருக் 6)

மற்றவர்களுக்கு உதவிடும் வகையில் செல்வத்தைப்
பயன்படுத்துவோருக்கு,
அள்ள அள்ளக் குறையாத செல்வத்தை வாரி வாரி
வழங்குவாய், எம் இறைவா. (இருக் 6)

மண்ணுக்கும், விண்ணுக்கும் தலைவனே,
இரண்டையுமே உன் ஆளுகைக்குக் கொண்டு வா.
மங்காத ஒளியுடனும், குன்றாத புகழுடனும் அவை
விளங்க அருள் செய்வாய். (இருக் 7)

எங்கள் செல்வச் செழிப்பு அமைதிக்கு வழி காட்டட்டும்.
சமூகக் கட்டுப்பாடு இணக்கத்திற்கு வழி வகுக்கட்டும்.
அறிவு வார்ந்த தேடுதல்கள்
மேன்மைக்கு இட்டுச் செல்லட்டும்.
நமது வளமையின் நோக்கமே வேற்றுமையில்



ஒற்றுமையையும், சமுதாயத்தில் நல்லினக்கதினையும் ஏற்படுத்துவதே.
எங்களை வாழ்த்தி அருளுங்கள், இறைவா. (இருக் 7)

ஆக்கமான முயற்சிகளில் ஈடுபட்டிருப்பவர்கள்
சமுதாய வளத்தை நிலை நிறுத்துவதில்
ஈடுபடுத்திக் கொள்பவர்கள்,
சமுதாயத்தில் அமைதியை ஏற்படுத்தட்டும்
பரந்த நிலமும் தன் விளைச்சல்கள் மூலம்
அமைதியையும் வளத்தையும் கொணரட்டும்.
விரிந்து பரந்த விண்ணுலகமும் மண்ணுலகமும்
அமைதியையும் இணக்கத்தையும் கொணரட்டும்.
மலைகள் அமைதியையும் பணிவையும் புகட்டட்டும்.
இயற்கையின் கருணையைப் புகழ்ந்து பாடும் நமக்கு
அமைதி கிடைக்கட்டும். (இருக் 7)

தன் செந் நாக்குகளின் ஒளிகொண்டு தீ அமைதி அளிக்கிறது.
புடவியின் ஒளியும் இரட்டையான அசுவினி குமாரர்களும்
அமைதி பெறுகிறார்கள்.
ஓங்கி வீசும் காற்றும் நம் உடலுக்கும் உள்ளத்திற்கும்
அமைதி அளிக்கட்டும். (இருக் 7)

ஆதி காலம் தொட்டு வழிபட்டுவரும் விண்ணுலகும்,
மண்ணுலகும் எங்கள் மகிழ்ச்சிக்கு உதவிட
நீ வாழ்த்துக் கூறுவாய்.
நல்ல உடல்நலமும், மலர்ந்த தோற்றமும்
எங்களுடையதாகட்டும்.
காடுகளில் வளரும் மூலிகைச் செடிகளும், மரங்களும்
மகிழ்ச்சியூட்டுகின்றன.



தொலைவிலுள்ள தெய்வீக ஆற்றல்களும் எங்களுக்குக் கருணை காட்டட்டும். (இருக் 7)

ஒளிமிகு உலக நாயகனே, வானகம், நீர், பாறைகள், காடுகள், மற்றும் செடிகொடிகள் யாவற்றிலும் உன்புகழ் ஒளி வீசுகிறது. (இருக் 2)

பரந்திருக்கும் ஒளி கொண்டுள்ள பரிதி எங்கள்
அமைதிக்காகவே உதயமாகட்டும்.
அடிவானத்தின் நான்கு பகுதிகளும் அமைதியையும்
இணக்கத்தையும் ஏற்படுத்தட்டும்.
வேரூன்றி இருக்கிற மலைகள் எங்களுக்கு
மகிழ்ச்சி அளிக்கட்டும்.
ஓடும் ஆறுகள் நலம் காக்கும் நீரை
எங்களுக்குத் தரட்டும்
வயல்கள் செழித்து ஓங்கட்டும். (இருக் 7)

இயற்கை அன்னை தன் புனிதத் தன்மையால்
எங்களுக்கு மகிழ்ச்சி அருளட்டும்.
இறைவன் எங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கட்டும்,
நீர்நிலைகளும், காற்றும் எங்களுக்கு
மகிழ்ச்சியைத் தரட்டும். (இருக் 7)

தொல்பழங்காலந்தொட்டு வழிபட்டுவரும் விண்ணுலகும்
மண்ணுலகும் எங்கள் மகிழ்ச்சிக்கு உதவிட
நீ வாழ்த்துக் கூறுவாய்.
நல்ல உடல்நலமும், மலர்ந்த தோற்றமும்
உங்களுடையதாகட்டும்.



காடுகளில் வளமும் மூலிகைச் செடிகளும் மரங்களும்
மகிழ்வூட்டுகின்றன.
தொலைவிலுள்ள தெய்வீக ஆற்றல்களும் எங்களிடம்
அன்புடன் மிகுமகிழ்ச்சி ஊட்டட்டும். (இருக் 7)

ஒளிமிகு உலகப் பெரும,
வானம், நீர், பாறைகள், காடுகள், செடிகொடிகள்
யாவற்றிலும் உன் சீர்த்தி பட்டொளி வீசுகிறது.
(இருக் 2)

பரந்த ஒளிகொண்டுள்ள செம்பருதி எங்கள்
அமைதிக்காகவே உதயமாகட்டும்.
அடிவானத்தின் நாற் பகுதிகளிலும் அமைதியையும்
இணக்கத்தையும் ஏற்படுத்தட்டும்.
வேரூன்றி இருக்கிற மலைகள் எங்களுக்கு
மகிழ்ச்சியளிக்கட்டும்.
ஓடும் ஆறுகள் நலம் காக்கும் நீரை எங்களுக்குத்
தரட்டும், வயல்கள் செழித்து ஓங்கட்டும். (இருக் 7)

ஒளிமிகுசெம்பொருளே, எங்களைக் காப்பவனே,
எங்களுக்கு அமைதி அளித்திடுக.
பேரொளிப் பிழம்பே, எங்களுக்கு ஊக்கம் தந்திடுக,
இணக்கம் காண முகில்கள் எங்களுக்குப்
பெருமகிழ்ச்சி ஊட்டட்டும்
பேருலகின் தனிப்பெரும் ஆட்சிக்குரியவன்
எங்களுக்கு மகிழ்ச்சி அளிக்கட்டும். (இருக் 7)



பேருலக இறைவன் அருளிய வாழ்த்துகள் எங்களுக்கு மன அமைதியைத் தரட்டும்.
தூய எண்ணங்கள் கொண்ட தெய்வீக வாய்மொழிகள் எங்களுக்கு நன்மை பயக்கட்டும்.
புனிதமான பணிகளில் பூசை செய்பவர்கள்
எங்களுக்குத் துணை புரியட்டும்.
பரந்த உள்ளங் கொண்ட கொடையாளிகள் எங்கள் அமைதிக்கும், நிலைத்தன்மைக்கும்
உறு துணையாய் இருக்கட்டும்.
தெய்வீக ஆற்றல்கள் யாவையும் எங்களுக்கு
இன்னமைதியையும், மகிழ்ச்சியையும் அளிக்கட்டும்.

(இருக் 7)

என்றும் நிலைத்திருக்கும் உண்மையைக்
காத்துவருகிறவர்கள் இணக்கத்திற்கு வழி வகுக்கட்டும்.
நமது எண்ணங்களும், செய்கைகளும்
நமது மகிழ்ச்சிக்கு ஒத்துழைக்கட்டும்.
பட்டறிவும், மெய்யறிவுமுள்ள உயர்ந்த பெரியோர்கள்,
அமைதியையும் செழிப்பையும் நமக்களிக்கட்டும்.
ஆதி முனிவர்கள் நம்மிடம் கருணை காட்டட்டும்.
கூடவே, சமூக நல் நிகழ்ச்சிகளுக்காக
நாம் விடும் வேண்டுகோள்களுக்குச் செவிமடுக்கட்டும்.

(இருக் 7)

பிறவி எடுக்காத ஒரே பாதமுடைய பெருமானே,
(பகவானுடைய ஒருபாதமே உலகுமுழுவதையும்
அளக்கவல்லது)
நாங்கள் அமைதியாக ஒற்றுமையுடன் வாழ அருள்புரிக.



வான வெளியில் மிதந்துவரும் முகில் கூட்டங்கள்
நமக்கு வளமை அளிக்கட்டும்.
பேராழிகள் இணக்கத்தை ஏற்படுத்தட்டும்.
நீரிலிருந்து தோன்றும் நெஞ்சுரமும், ஆற்றலும்
நம்மிடம் கனிவு காட்டட்டும்.
இறையருளால் காக்கப்படும் நடுவிண் வெளியும்,
வானமும், நமக்கு மகிழ்வூட்டுமாக; (இருக் 7)

தன்னிகரில்லாத தலைவனே,
அறிவுமுற்றுப் பெற்ற ஆதி முனிவர்கள் நுகரும்
முற்றுணரும் ஆற்றலை எனக்கு இன்றே அளிப்பாய்.
(யசுர் 32)

இயற்கை அன்னை எங்களுக்கு அருள்பாலிக்கட்டும்
மண்ணுலகம் கருணையுடன் இருக்கட்டும்
ஓடும் ஆறுகள் அமைதியுடன் இருக்கட்டும்.
செடி கொடிகளும், மூலிகைச் செடிகளும்
அமைதியுடன் இருக்கட்டும்,
கடந்த காலம் கருணை காட்டியது.
எதிர் காலமும் அவ்வாறே அருள்புரியட்டும்.
(அதர் 19)



# தெய்வீக வழிகாட்டி

இறைவா, என் ஆழ்மனத்தில் நீ குடிபுக வேண்டும்.
தீய எண்ணங்களாகிற புகை மண்டலம்
என்னிடமிருந்து வெளியேறட்டும்.
அப்பழுக்கற்ற உன் உயிரொளியை நான் காணவேண்டும்.
(இருக் 1)

இறைவா,
எனக்கும் என்போன்ற நம்பிக்கையுள்ளவர்களுக்கும்
எங்கள் வாழ்கையை மனிதகுலத்தின் நன்மைக்காகவும்,
அவர்களுக்குப் பணிபுரிவதிலும் செலவிட அருள்புரிக.
(இருக் 1)

உலகைப் படைத்தருளியவனே, உனது உள்ளொளி
எங்களுக்கு வழிகாட்டியாயிருந்து
தீவினைகள் செய்வதிலிருந்து
எங்களைத் தடுத்து நிறுத்தட்டும்.
அதற்கேற்ப ஆன்மிக பலத்தை அருள்வாய்.
உனது வல்லமை பொருந்திய தோள்கள் எங்களுடைய





வாழ்க்கைச் சுமை முழுவதையும் தாங்கிக் கொள்ளட்டும்.
உலக இன்பங்கள் யாவற்றையும்
நாங்கள் நுகர்ந்துவக்கக் கருணை காட்டுவாய்.

(இருக் 5)

நாங்கள் உன்னிடம் உண்மையான
பற்றுறுதியுடையவர்கள்.
உனக்குப் பணிந்து நடக்கும் எங்களுக்கு
வாழ்த்து வழங்குவாய்.
நாங்கள் அவற்றின் பலன்களை நுகரவேண்டும்.
நறுமணமுள்ள காற்று மெல்லென வீசட்டும்.
இன்னிசை இசைத்து ஆறுகள் தவழ்ந்து செல்லட்டும்.
செடி கொடிகள் புதியதோர் ஆற்றல் பெற்றுக்
காய்த்துப், பழுத்துக் குலுங்கட்டும். (யசுர் 13)

ஒளி படைத்த தலைவ, வீரமிகு எழுச்சி, பெயர், புகழ்
அகியவற்றை அள்ளி அளிக்கும்
உனது வாழ்த்துகளை வாரி வழங்குவாயாக. (இருக் 7)

அருளாண்மை வழங்கும் அரசே,
அறிவுக் களஞ்சியமாக விளங்கும் இறையே,
பணியாளனைப்போல் உனக்கு நாங்கள்
பணி புரிந்து வருகிறோம்.
தீவினைகளிலிருந்து எங்களை விடுவிப்பாய்,
எங்களை வாழ்த்தி அருள்புரிவாய்.
மெய்யறிவில்லாதவர்களுக்கு மெய்யறிவளிப்பாய்.
வளமைக்கு இட்டுச் செல்லும் பாதையை
உன் அன்பனுக்குக் காட்டியருள்வாய்.

(இருக் 7)



செங்கதிர், வானம், வெண்கதிர், விண்மீன்கள் யாவும்
தங்கள் தங்கள் ஒத்தியைபில் இடம் பிறழாமல்
செயலாற்றி வருகின்றன.
தெய்வ முறைமைகளை வல்லந்தமாக மீறுவதில்லை,
இயற்கை ஆற்றல்களிடமிருந்து இந்த உண்மையை
மனிதன் கற்றுக் கொள்ளட்டும்.
அமைதியோடும் இணக்கத்துடனும்
வாழத் தெரிந்து கொள்ளட்டும்.
எவ்வளவுதான் ஆற்றல் மிக்கவனாகவும் அறிவாளியாகவும்
இருந்தாலும் இயற்கையின் நெறிமுறைகளின்
கட்டுப்பாட்டுக்கு அடங்கியே வாழவேண்டும்.
(இருக் 10)

நிறையாற்றல் வாய்ந்த இறையே,
ஒழுக்க நெறியிலேயே எங்கள் மனம் செல்ல அருள்வாய்.
(இருக் 10)

புடவியின் மெய்ப்பொருளே,
எங்கள் சொல்திறனிலே வன்மை, ஆழம், பிழையின்மை
யாவும் மிளிரச் செய்தருள்க. (இருக் 10)

தண்ணொளிமிக்க மின்னொளித் தலைவ,
ஆன்மிக அறிவினாலும் கடுமையான கட்டுப்பாட்டினாலும்
தங்களைச் செம்மையாக்கிக் கொண்ட முனிவர்கள்
செல்லும் நெறியில்
எங்களையும் ஈடுபடுத்துவாயாக.
உன் திருவடி பணிகிறேன், இறையே.
நீ வழங்கும் ஒளி என்னை அழிவில்லாத
பேரின்ப நிலைக்கு நடத்திச் செல்லட்டும். (அதர் 19)



**த.கோ - தி.ஸ்ரீ**



வண்ணஒளி வழங்கும் வானொளியே, ஆன்மிகத்தின்
உயர்ந்த நிலைக்கு இட்டுச் செல்லுக.
தன் பேரொளியினால் என் மனத்திற்கும்
தெளிவான ஒளி சேர்ப்பாயாக. (அதர் 19)

தெய்வத் தீயே, தன்னொளி கொண்ட தனிமுதலே
உடல், நலமும், ஆன்மிகச் செல்வமும் பெற்று மகிழ
எங்களை அறநெறியில் வழி நடத்திச் செல்வாய்,
எதிர் திசையில் செல்லத் தூண்டும் தீவினைச்
சிந்தனைகளிலிருந்து என்னைத் தடுத்து ஆட்கொள்வாய்.
என்றும் உன் புகழ் பாடிட அருள் செய்வாய்.
(யசுர் 11)

ஆற்றலின் ஊற்றிடமே,
எங்களை இழி பிறவிகளாக்கி அறியாமைக்கு
அடிபணியும் படுநோவுக்கு ஆளாக்காமலிருப்பாயாக,
கட்டுக் கடங்காத அலைக்கும் பற்றுகளுக்கும், இழிவான
அடிமைத் தனத்திற்கும் எங்களை
இட்டுச் செல்லாதிருப்பாயாக. (இருக் 3)







# வேண்டுகோள்

தலைவ, உன் அருளும், பாதுகாப்பும்
எங்களுக்கு வேண்டும்.
மண்ணையும், விண்ணையும் ஆட்சிபுரிபவன் நீயே
என்று அறிந்திருந்தும்,
கடலலைகளும், வான்முகில்களும் உன் ஆணைப்படியே
நடக்கின்றன என்று தெரிந்திருந்தும்,
அடிக்கடி எங்களை அச்சமும் மனக் கசப்பும்
பீடித்து வருத்துகின்றன.
கொடிய ஆற்றல்கள் யாவும் எங்களிடம்
பெருந்தன்மையுடனும் பரிவுடனும்
நடந்து கொள்ள அருள் செய்க.
தீமை ஏதும் எங்களுக்கு நேராமலிருக்கட்டும்,
என்றும் நாங்கள் வளர்ச்சியில் முன்னேற்றம் காண்போமாக.

(யசுர் 36)



ஈடு இணையற்ற கடவுளே,
தெய்வீக ஆற்றல்களின் நலம்
பயக்கும் மெய்யறிவைப் பாராட்டும் பண்பை
எங்களுக்களிப்பாய்;
நாங்களும் அவற்றின் பண்பு
நலன்கனை அடையட்டும்.
அவற்றின் பரந்த மனப்பான்மையையும்,
அன்பு கலந்த நெகிழ்வையும்
நாங்களும் பெறுவோமாக.
அவற்றின் பெருந்தன்மைச் சிறப்பையும், அமைதித்
தன்மையையும் அடையும் வகையில் நீண்ட அகவையை
எங்களுக்கு அருள்வாய்.
அவற்றைப் போல் நாங்களும் அன்பும், அமைதியையும்
பெற்று நிறைவோடு வாழ உதவி புரிவாய். (இருக் 1)

மெய்யறிவொளி கொண்ட உயர்ந்த ஆன்மாக்களே,
நல்லவற்றைக் காதுகள் கேட்கட்டும்.
நல்லவற்றைக் கண்கள் கண்டு,
பகவான் அளித்துள்ள வாழ்நாள் காலத்தை
நன்கு நுகர்வோமாக.
எங்களுடைய உடலுறுப்புகள்
உறுதிகொண்டு விளங்கட்டும்.
உடல் நலம் பெற்று இருக்கட்டும்.
பேரிறைக்குப் பணி செய்து மனம் நிறைவு பெறட்டும்.
(இருக் 1)

தனக்கு உவமையில்லாத சீர்த்திபெற்ற பேரின்பத் தலைவ,
உனது புகழ், வானுலகிலும் நிலவுலகிலும், மலைகளிலும்



செடி கொடி மர இனங்களிலும் நீரிலும் பரந்துள்ளது
எங்களிடம் கருணை காட்டி
எங்கள் பணிவன்பை ஏற்றுக் கொள்வாய். (இருக் 1)

நற்பண்புகளின் உறைவிடமே, பெருந்தகையே,
எங்கள்மேல் அருள் பாலிப்பாய்.
உன்னைப் போற்றி வழுத்தாதவர் எவருமில்லை,
வாழ்முதலாகிய வள்ளலே
எங்கள் முயற்சிகள் யாவற்றிலும்
உறுதுணையாக இரு. (இருக் 7)

இறைவன் ஏற்படுத்திய நெறிமுறைகளின் இருப்பிடமாக
விளங்குகிறவையும்,
எங்கும் நிறைந்திருக்கிறவையும், போற்றுதலுக்கு
உரியவையுமான தெய்வீக ஆற்றல்களே, வீரமிக்க
குழந்தைகளுட்பட அனைத்துச்
செல்வங்களும் எங்களுக்கு அருள்வாயாக.
உயர்ந்த வினைத்திறன் புரியும் ஆற்றலை
எங்களுக்கு அளிப்பாயாக. (இருக் 10)

இறையே, கேட்காமலேயே வாரி வழங்கும் வள்ளல் நீ.
வாழ்த்துக்கூறி எங்கள் மீது உன்
அன்பு மழையைப் பொழிவாய்.
மனமார உன்னைத் துதி செய்தாலே போதும்.
எங்கள் குறைகளை மறந்து மன்னித்து
எங்களுக்கு அருள் பாவிப்பாய் நீ,
பெருமானே, எங்களை வாழ்த்தியருள்வாய். (இருக் 1)



உலகத் தலைவ, தீப்பொறி பறக்கிற ஆற்றல்
படைத்தவன் நீ;
எனக்கும் அதே ஆற்றலை அளிப்பாய்.
ஆண்மையின் முழு உருவம் நீ;
அதே ஆற்றலை எனக்கருள்.
வலத்தின் மறு உருவம் நீ;
அதே வலத்தை எனக்குத் தந்திடுவாய்.
நீயே ஆற்றலுள்ளவன்;
எனக்கு ஆற்றலை அளித்திடுவாய்.
கட்டுப் பாடுள்ளவன் நீ;
எனக்கும் அதே தன்மையைத் அருள்வாய்.
எதையும் வெற்றி கொள்ளும் திறன் படைத்தவன் நீ;
நானும் உன்னைப் போல் விளங்கவேண்டும். (யசுர் 19)

கடவுளே,
வெற்றி பாதையில் வீறுகொண்டு விரையும் தேரின்
இரண்டு சகடங்களைப்போல, எங்களின், உள்ளம், அறிவு
இணைந்து செயல்பட வாழ்த்துக் கூறுவாய். (இருக் 1)

நீ தான் எங்களுக்கு வாழ்வளிக்கிறாய்.
திறந்த மனத்தோடும், பற்றோடும்
உன்னிடம் ஒரு வரம் கோருகிறோம்.
பிணிகளைத் தீர்க்கும் செங்கதிர்போல்,
எங்களைத் துன்பங்களிலிருந்து காத்தருள்க.

(இருக் 1)



என்றும் இளமையோடு ஒளிவீசும் பேரொளியே,
அறிவிற்கு வழி காட்டும் ஆற்றல்களிலிருந்து
என்னை மீட்டிடுவாய்.
உள்ளிலிருக்கும் பகைவர்களிடமிருந்தும்
என்னைக் காப்பாற்று.
கொடிய விலங்கு இச்சைகளிலிருந்தும் அழிவிற்கு
இழுத்துச் செல்லும் மூட நம்பிக்கைகளிலிருந்தும்
எங்களைக் காக்க. (இருக் 1)

மதிப்பும் நேயமும் கொண்ட கடவுளே,
எங்களுக்கு இடையூறுகள் விளைவிக்கும்
கெட்ட எண்ணங் கொண்ட எதிரியிடமிருந்து
எங்களைக் காப்பாற்றுவாய். (இருக் 1)

உன்னுடைய பாதுகாப்பைப் பெற்று,
சீறிப் பாயும் நீரோட்டம்போல்
எதிரிகளை வென்று வீழ்த்தி முன்னேறுவோமாக.
(இருக் 2)





## புகலடைதல்

வெற்றிமிகு வாழ்க்கை நடத்திய நிறைமனம்
பெறும் வகையிலும்,
இறவாப்புகழ் பெறும் வகையிலும்
வாழ்க்கையை வாழ்ந்து காட்டு.
நீ இறவா நிலைபெற்ற குழந்தை என்பதையும்,
வாழ்க்கை என்பது
ஒரு காணிக்கை அல்லாது வேறில்லை என்பதையும்
மனத்தில் கொள்.
(தியா)ஈகம் செய்வதையே குறிக்கோளாகக் கொண்டு
வாழ்பவர்களுக்கே
இரக்கம் என்கிற நறுமலரின் தேன் துளிகள்
கிடைக்கின்றன என்பதை மறந்து விடாதே
இவ்வாறு அளிக்கப்படும் வாழ்க்கையாகிற அளிக்கை
இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படும்.
தெய்வீகத் தீயின் புனிதச்சுடர் உனது
உள்ளுயிரில் ஒளி வீசட்டும். (அதர் 15)



உணர்ச்சிகளின் கொந்தளிப்பாகிற சுடர்விடும்
அம்புகள் எய்யப்பட்டுச் சுற்றிலும் சிதறிக் கிடக்க,
போராடிக் கொண்டிருக்கும் அத்தனை பேர்களுக்கும்
பேரிறைவன் உதவிக்கை நீட்டுகிறான்.
உனது ஆற்றல் வாய்ந்த பாதுகாப்பை அளிக்க
விரைந்து வருக,
உன்னுடைய இன்னருளால் எங்கள் உள்மனப்
போராட்டங்களில் வெற்றி பெறுவோமாக. (இருக் 4)

வெற்றியின் பெரும,
தீயர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றுக.
பெருமை குன்றாமல் எங்கள் அளிக்கைகள்
உன்னை வந்தடையட்டும். (இருக் 6)

எல்லாம் அறிந்த இறைவ, தீவினை புரிவதிலிருந்து
எங்களைத் தடுத்து நிறுத்துவாய்.
தேய்வீகப் பாவல, கெட்ட எண்ணம் கொண்டவர்
களிடமிருந்து எங்களைக் காத்தருள்வாய். (இருக் 6)

தீவினைச் செயல்களிலிருந்தும்,
பொல்லாங்குப் படை தாங்கி அச்சுறுத்தும்
கொடியவர்களிடமிருந்தும் எங்களுக்குப்
பாதுகாப்பளித்திடுவாய். (இருக் 6)

ஓநாய்கள், கொள்ளையர் போன்ற கெட்ட எண்ணம்
படைத்தவர்களுக்கு எங்களை
அடிமைப் படுத்திடாமலிருப்பாயாக,
நீ ஒருவனே எங்களுடைய ஆற்றல் சொல் இவற்றை
நெறிப்படுத்தி எங்களுக்கு நல்ல
வழிகாட்டியாக இருக்க முடியும். (இருக் 6)



கடவுள் எல்லோரையும் துன்பங்களிலிருந்து விடுவிப்பார்.
கடவுள் எல்லோரையும் காப்பாற்றுவார்.
கடவுள் பேராற்றல் மிக்கவர்.
ஒவ்வொரு சமயத்திலும் தொழப்படுபவர். இத்தகைய
பெருமை வாய்ந்த கடவுள்
நமக்கு அனைத்துப் பேறுகளும் அளிப்பாராக.

(சாம 333)

அறிவுக் களஞ்சியமாக விளங்கும் தலைவன்,
பாம்புபோல் எந்த இடத்திலிருந்து தோன்றினாலும்,
எளிய மாந்தரை அனைத்து இடர் பாடுகளிலிருந்தும்
காக்கும் பொறுப்பைத் தானே ஏற்றுக் கொள்கிறான்.

(இருக் 6)

என்னிடம் கூறமுடியாத பொறாமை கொண்டுள்ள
உற்றார் உறவினரை என்னிடமிருந்து
ஒதுக்கி வைத்திடுக.
தெய்வீக ஆற்றல்களே,
என்னுடைய இந்த நெஞ்சார்ந்த வேண்டுதல்
தகர்க்க முடியாத கவசமாகயிருந்து
எனக்குப் பாதுகாப்பளிக்கட்டும். (இருக் 6)

போற்றத்தக்க தலைவ, இந்த நிலவுலக வாழ்க்கை
நடத்தும் எங்களுக்கு உன் பாதுகாப்பை அளிப்பாய்.
உன் வாழ்த்துகளை அருள்வாய்.
இயற்கை அன்னை எங்களுக்கு
அனைத்து வளங்களும் வழங்கட்டும். (இருக் 7)



தலைவர்க்கெல்லாம் தலைவனே,
காலங் காலமாக முன்னோர்களிடமிருந்து தொடர்ந்து வரும் கட்டுகளிலிருந்து
எங்களுக்கு விடுதலை அளிப்பாய்.
கந்திலிருந்து கட்டவிழ்த்து விடப்பட்ட கன்றைபோல்
நாங்களும் உன்னருளால்
விலங்குணர்ச்சிகளிலிருந்து விடுபடுவோமாக.

(இருக் 7)

எல்லாமறிந்த இறைவன்
கைக்கெட்டும் தொலைவிலேயே இருக்கிறான்.
வாய்ப்பினை நழுவவிடாதே.
கண்டு களிப்புறக் கிட்டவே இருக்கிறான்.
இயற்கையின் அழகைக் கண்குளிரக் கண்டு களித்திடுவாய்.
இயற்கையின் எழிலும், இறைவனைப் பற்றிய தெய்வீகக் கவிதைகளும் அழிவும் இறப்பும் அற்றவை. (அதர் 10)

குணக்குன்றே, மேலிருந்தும் கீழிருந்தும் எங்களைச்
சிறைபடுத்த வீசப்படும் வலைகளிலிருந்து
எங்களைத் தப்பிக்கச் செய்வாய்.
கெட்ட கனவுகள், துயரங்கள் இவற்றிலிருந்து
எங்களைக் காத்திடுவாய்
நற்பண்புகள் நிறைந்திருக்கும் உலகிற்கு
எங்களைச் செல்ல விடுவாய். (அதர் 7)

நாங்கள் எவற்றுக்கெல்லாம் அஞ்சுகிறோமோ,
அவற்றிலிருந்தெல்லாம் எங்களைக் காத்தருள்வாய்.
எங்கள் பகைவர்களை விரட்டி அடித்திடுவாய்.
உனது நிழலில் நாங்கள் பாதுகாப்பைத் தேடுகிறோம்.





பரந்த, பாதுகாப்பான, மகிழ்ச்சியான கதிர்ஒளி நிறைந்த உறைவிடத்துக்கு அழைத்துச்செல்.
உன்னுடைய வன்மை கொண்ட தோள்கள் எங்களுக்கு அச்சமற்ற அரணாக அமையட்டும். (அதர் 19)

வையத் தலைவ; பாதுகாப்பின்மை, மனச்சோர்வு,துயரம் போன்றவை
என்னை அணுகாதிருக்கட்டும். (யசுர் 5)

எங்கள் மனத்துள்ளிருக்கும் பகைமை உணர்வுகளை வெற்றி கொண்டிடத் துணை புரிவாய். (யசுர் 12)

எல்லாம் வல்ல மேலவ,
பரந்த் அருளிரக்கத்தின் கருத்துருவே,
எங்கள் மீது என்றும் இரக்கம் காட்டுவாய்.
உனது வன்மை வாய்ந்த படைக்கருவியை, இடியேற்றை அதோ அந்த ஞாலமாகிய
மரத்தின் உச்சியில் வைத்துவிடுவாய்.
பின்னர், நல்லவர்கைளயும், உன்னிடத்தில் நம்பிக்கை கொண்டவர்களையும் காத்தருளும் பொருட்டு
மண்ணில் தோன்றிடுவாய். (யசுர் 16)

இறைவா,எங்கள் வாழ்நாளின் ஊடே நோய் நொடியின்றி வாழ்ந்திட உறுதி செய்து வாழ்த்தி அருள்வாய்.
(இருக் 1)

பிணியிலிருந்தும், உன்னிடத்து நம்பிக்கை
இல்லாதவர்களாகவும்,
எங்களுக்கு எதிரிகளுமாயிருக்கிறவர்களிடமிருந்தும்





எங்களைக் காப்பாயாக.
நலமிக்க யாவையும் எங்களுக்கு நல்குக. (இருக் 1)

உலகைக் காப்பவனே,
கதிரவனைக் காணவிடாமல் செய்து விடாதே.
எங்களுடைய வீரப்புதல்வர்கள் எதிரிகளை அடக்கி
வெற்றி வாகை சூடட்டும்
எங்களுடைய கால்முறைகள்
பெருகித் தொடர்ந்து வளரட்டும். (இருக் 2)

மேற்கு, கிழக்கு, வடக்கு, தெற்கு எத்திசையிலும் எங்கள்
படைப்பின் பகவன் இருந்தாலும் சரி,
ஏற்றவை யாவற்றையும் எங்களுக்களித்தருள்வாய்.
நீண்ட வாணாளை எங்களுக்கு வழங்கிடுவாய்.
(இருக் 10)

பரந்த பேருலகின் தலைவ,
ஞாயிறு, நிலவு, விண்மீன் தீக்கோளங்கள்,
வெவ்வேறு தோற்றமும் அமைப்பும் கொண்ட கூட்டம் இவற்றின்
ஆற்றலை ஈர்த்து நிறுத்தி வைத்துப் கொள்ளும்
ஆற்றலை எனக்களிப்பாய். (அதர் 1)

விண்கோள்களைப் போன்று தூய்மை பெற்று
நாங்கள் ஒளி மிக்கவர்களாகத் திகழ வரம் அருள்வாய்.
தடைகள் யாவற்றையும் கடந்து,
எங்களுடைய வீரமிக்க தோழர்களோடு கூட
நூறாண்டு புகழ்மிக்க சிறப்பான வாழ்வு வாழ்ந்திட
வரமருள்வாய். (அதர் 12)



என்றும் நிலைத்திருக்கும் இறைவ,
புனித சட்டத்தின் காவலன் நீ.
பணிவன்புடன் உன்னை நாள் வேண்டிக்கோள்கிறேன்.
என் குரலில் இனிமையிருந்திட வாழ்த்திடுவாய்.
என் மூக்கு தூய காற்றை மூச்சுற வாழ்த்திடுவாய்
என் காதுகள் நல்லவற்றையே கேட்டிட வாழ்த்திடுவாய்.
எனக்கு நரை ஏற்படாதிருக்கட்டும்,
என் பற்கள் கெடாமலிருக்கட்டும்
என் தோள்கள் பலம் பொருந்தியவையாக இருக்கட்டும்.
(அதர் 19)

என் தொடைகளில் உறுதி ஏற்படவும்,
கால்களில் விரைவு ஏறிடவும்
காலடிகளில் உறுதியாகப் பதிந்திருக்கும் தன்மை
ஏற்படவும் அருள் செய்வாயாக.
என் உடல் உறுப்புகள் ஊறு அடையாமல் இருக்கட்டும்
என் உள்ளுயிர் வெல்லப் படாமலிருக்கட்டும்.
(அதர் 9)

கடவுளே, என் உடலைக் காப்பாற்று.
நீண்ட வாழ்நாளை அருள்பவன் நீயே,
எனக்கு நீண்ட பெருவாழ்வை அளி.
அறிவுக் கூர்மையை அளிப்பவன் நீ.
என்னிடம் என்னென்ன குறைபாடுகள் உள்ளனவோ,
அவற்றையெல்லாம் நீக்கி அருள்வாய். (யசுர் 3)

அருளே, எங்களுக்கு நீண்ட வாழ்வைத் தருவாய்
உன்னுடைய தெய்வீக மேன்மைகளை
உலகத்தாருக்கு விரித்துரைப்போம். (யசுர் 4)



உயர்ந்த செயல்களை செய்யும் வகையில் எங்களுக்கு பாதுகாப்பையும் ஆற்றலையும் அளிப்பாய்.

(யசுர் 9)

நூறாண்டு காலம் எனக்கு அருள்வாய்.
எவருக்கும் சுமையாக இராமல்
தன் மானத்துடன் வாழ்வேன்.
கொடியாக இருப்பதில் எனக்கு விருப்பமில்லை.
பயன்மரமாக இருக்க என்னை வாழ்த்தியருளுங்கள்.

(யசுர் 36)







## மன்னிப்பு

எங்கள் வாழ்க்கைச் சிக்கல்களில் அமிழ்ந்து போய் தெய்வ
ஆற்றல்களுக்கெதிராக தீவினைகள் புரிந்திருக்கிறோம்.
இதை மாந்தர்கள், பெரியோர்கள், இவர்களுக்கு
எதிராகவும், மனச்சான்றுக்கு விரோதமாகவும்
பாவங்கள் புரிந்திருக்கிறோம்.
தவிர,தெரிந்தும், தெரியாமலும், எத்தனையோ
தீவினைகள் புரிந்திருக்கிறோம்.
எங்களை மன்னித்துவிடு, தலைவ! (யசுர் 8)

நெசவாளி நெய்த நூலை எலிகள் அறுத்திடுவதுபோல்,
கவலைகள் என் உள்ளத்தை அரித்தெடுக்கின்றன.
உன் அன்பனுக்கு அருள்புரிவாய். (இருக் 10)

கடவுளே, பரந்த வையகத்தின் பேரிறையே,
எங்களுடைய கண்கள் நெஞ்சம், மனம் இவற்றிலுள்ள
குறைகளைக் களைந்தெறிய
எங்களுக்கு உதவி புரிந்திடுவாய்,





எங்களிடம் கனிவு காட்டுவாயாக,
இரக்கம் கொள்வாயாக. (யசுர் 36)

தீய வன்முறை ஆற்றல்களால்
எங்களுக்குத் தீங்கு நேராதிருக்கட்டும்
நிலமகளே, ஏற்படக்கூடிய துன்பங்களிலிருந்து
என்னைக் காப்பாற்றிடுவாய்,
விசும்பே, வானத்தில் ஏற்படக்கூடிய துன்பங்களிலிருந்து
என்னைக் காப்பாற்றிடுவாய். (இருக் 7)

தலைவா, தீமை செய்வதிலிருந்து
என்னைத் தடுத்து நிறுத்திடுவாய்.
அல்லல்கள் நிறைந்த சுழித்தோடும் ஆற்றைப் படகில்
செல்வதுபோல், கடந்து செல்லத் துணை புரிக.
(அதர் 1)

பரிவிரக்க முடைய, மக்கள் யாவரும்
தவறு செய்வது போல்,
நாங்களும் தவறு செய்து, நாங்கள் செய்யும் வழிபாட்டில்
உன்னைக் களங்கபடுத்தி விடுகிறோம்.
எங்கள் மேல் இரக்கம் காட்டுவாய்.
உங்கள் சீற்றத்தில் எங்களைச்
சாகடிக்காமல் இருப்பாயாக. (இருக் 1)

தவறு செய்வது மாந்தர் இயற்கை,
ஆசைகளின் முழு உருவம் மாந்தர்.
எங்களுடைய பெரும் பிழைகளை மன்னித்துவிடுக.
(இருக் 1)



எங்கும் நிறைந்திருக்கும் தெய்வமே
மனத்தாலோ, வாக்காலோ, செயலாலோ உன்னை
இகழ்ந்திருக்கலாம். புறக்கணித்திருக்கலாம்.
நாங்கள் செய்தது மாபெரும் தவறு தான்.
உங்கள் மன்னிப்பைக் கோருகிறோம்.
எங்கள் பிழையை மன்னித்து ஆட்கொண்டிடுவாய்.
கடவுளை வெறுக்கிறவன் தவறான பாதைகளுக்கு
எங்களைக் கவர்ந்திழுக்க அணியமாகக் காத்திருக்கிறான்.
(இருக் 4)

பேருலகின் வீறிய, எங்களைக் கைவிட்டு விடாதே.
வெறுப்புற்ற நிலையில் நீ இருக்கும் பொழுது,
உன்னிடம் நாங்கள் உறவாடுவது காரணமாக எங்களைச்
சித்திரவதைக்கு ஆளாக்கி விடாதிருப்பாயாக.
உன்னை மனதாரத் தொழுவதில் எங்கள் பங்கு இருக்கட்டும்.
இயற்கை வளங்களை அளித்து எங்களை வாழ்த்திடு.
(இருக் 7)

தலைவ, உன் புகழை என்றும் பாடுபவனாகிய நான்
அப்படி என்ன எல்லை மீறி விட்டேன்?
எவரும் வென்றிட முடியாதவ,
உள்ளதைச் சொல்லிடுவாய்,
தீவினை எதுவும் செய்திடவில்லை என்ற உணர்வுடன்
அப்பொழுது தான் பற்றுடன் உன்னை நெருங்கமுடியும்.
பண்புடைய தலைவ, நாங்கள் தீவினையே
செய்கின்றோமென்றால்,
அது மனமொப்பிச் செய்யப்படுவதில்லை.
நாங்கள் வளர்ந்த சூழ்நிலையே அதற்குக் காரணம்



மதுமயக்கம், சீற்றம், கபடு, சூதாட்டம் அக்கரையின்மை,
ஆகியவையே எங்களை நிலை பிறழச் செய்கின்றன.
பெரியவர்கள் இளைஞர்களுடன் பழகும் தரக்குறைவான
தன்மை எங்கள் நன்னடைத்துக்கு ஒரு தடைக்கல்.
வெறும் கனவுகூட பொய்மைக்கு வித்திடுக்கிறது.
(இருக் 7)

உலகைக் காப்பவ, இறவா நிலையை எனக்களிப்பாய்,
பிறப்பு, இறப்பு என்ற சுழற்சியிலிருந்து
எனக்கு விடுதலையளிப்பாய். (இருக் 7)

அறத்தின் அண்ணலே, நான் என்கிற செருக்குடன்
சுற்றிதிரிகிற என்னிடம் இரக்கம் கொண்டு
கடைத் தேற்றுவாய். (இருக் 7)

உண்மையின் முகம் பொன்னால் வேயப்பட்ட
மூடியினால் மூடப்பட்டுள்ளது,
செங்கதிர் ஒளியில் மிளிர்ந்து கொண்டிருக்கிற வாழ்வின்
மூலாதாரமாகிய பண்பும் நானே
ஓம் என்கிற உன்னத நிலைக்கு
உரியவனும் நான் தான். (யசுர் 40)







## தெய்வ அறம்

அறத்தின் அண்ணலே, பேருலகின் முகட்டிலிருந்து
வையத்தை காக்கிறவன் நீ,
உன் கையிலிருக்கும் அம்பு மென்மையாகத்
தணிந்து இருக்கட்டும்,
உன் வில்லின் ஆற்றலும் அன்பின் விரைவும்
குற்றமற்ற மனிதனைத் தாக்கி,
அவனை மாய்த்து விடாமலிருக்கட்டும். (யசுர் 16)

தலைவ, உன் மேல் வைத்திருக்கும் முழு நம்பிக்கையே
உன் அன்பனை உறுதியுடன் செயல்படவைக்கிறது.
ஏமாற்றுகாரர்களும், கொடியவர்களும், பிறரைச் சுரண்டி
வாழ்பவர்களும் நேர்மையுடனும் நன்னடைத்தை
உள்ளவர்களிடம் தோல்வியடைய வேண்டும்.
உன் அடியார்களுடைய அறிவுவளம்,
உனது வாழ்த்துப் பெற்று மேலும் வளம்பெறட்டும்.
(இருக் 1)





பேரொளி பொருந்திய பெரும,
அருகிலிருந்தாலோ, தொலைவிலிருந்தாலோ,
ஏழைகளை அடிமைப் படுத்துகிறவன்.
உனது அடிகளால் நசுக்கப்படட்டும்.
எங்களுடைய முன்னேற்றத்திற்கும் வளமைக்கும் நீ தான்
எங்களுடனிருந்து உதவி புரியவேண்டும். (இருக் 1)

உன் நம்பிக்கையுடைய அன்பர்களின்
எதிரிகளுடைய செல்வத்தை அழித்துவிடு.
இடையூறுகளை யெல்லாம் கடந்து ஆற்றினூடே
மக்களை எவ்வாறு படகு ஏற்றிச் செல்லுகிறதோ
அதுபோல் நீயும் எங்களை
இடர்களிலிருந்து கரையேற்றுவாய். (இருக் 1)

எவனொருவன் பழிவினைச் செயல்களுக்குத்
தூண்டுதலாயிருக்கிறானோ,
அவன் தன் இனத்தாருடைய அன்பையும், ஆதரவையும்
மட்டுமின்றி, உன்னுடைய
அன்பையும் ஆதரவையும் இழப்பவனாகிறான். (இருக் 5)

எவரெல்லாம் மற்றவர்களுடைய உழைப்பின் மூலம்
செல்வமீட்டி
அதை அவர்களுடன் பகிர்ந்து கொள்ளும்
எண்ணமில்லாமல் இருக்கிறார்களோ,
அவர்களுடைய செல்வத்தைப் படிப் படியாகக்
குறைத்திடுவாய்,
நேர் வழியிலிருந்தும் நாணயத்திலிருந்தும்
தடம் மாறி செல்பவர்களுக்குச் செஞ்சுடர் ஞாயிறே
திருவருள் வழங்காதிருப்பாயாக,



அதே போன்று எவர் பொறிபுல இன்பங்களில் ஈடுபட்டுத் தேவையில்லாமல் மரபினரைப் பெருக்கிக் கொள்கிறார்களோ, அவர்களுக்கும் உன் அருளன்பு கிடைக்காமலிருக்கட்டும்.
(இருக் 5)

ஆற்றலும் விரைவும் கொண்ட மண்ணின் எல்லாப் பகுதிகளிலும் நீ நிறைந்திருக்கிறாய்.
உனது அளப்பரிய வலம் கொண்டு எங்களுடைய எதிரிகளிடம் போரிட்டு எங்களுக்குத் தீமை இழைப்பவர்களை எரித்துச் சாம்பலாக்கிடுவாய்.

உன்னுடைய கூரிய தீச்சுடர் கொண்டு
அழிவுமோதும் வலிகளை ஒதுக்கி அவற்றைப் பொசிக்கிவிடு.
(இருக் 6)

மற்றவர்கள் செய்யும் பழிகளுக்கு
நாம் இடறினை ஏற்க வேண்டா.
பேரண்டம் அளாவிய ஆற்றல்களே, உலகத்தைத் தன் ஆளுகையில் அடக்கி வைத்திப்பவர்களே,
எங்களுக்குத் தீங்கிழைக்கும் அந்த மனிதன் தன் தீயதிட்டங்களுக்குத் தானே பலியாகட்டும். (இருக் 6)

இறைவனிடம் நம்பிக்கையில்லாத மற்றவர்களை இகழ்ந்து தன்னையே உயர்ந்தவனாக எண்ணுபவனை
வான் செங்கதிர் சுட்டுப் பொசுக்கி
அந்த வெந்துயரை அவன் உணருமாறு செய்யட்டும்.
(இருக் 6)



பேரொளிச் சுடரே, பயனற்ற குப்பைக் கூளங்களை
எரித்தழிப்பது போல்
என்னிடமிருக்கும் தீயகுணங்களை உனது தீச்சுடரினால்
சுட்டெரித்து விடுவாய். (இருக் 7)

தலைவ, உன்னிடமுள்ள அச்சத்தினால் இருண்ட தீய
கொடுமைகள் யாவும்
கட்டுப்பாட்டில் இருக்கின்றன.
போற்றுதற்குரிய பொருளே,
மக்கள் யாவர் மேலும் உன் ஒளியைப் பரப்பி
அவர்களுடைய தீய ஒழுக்கங்களின்
வேரையே எரித்து விடுவாய். (இருக் 7)

இறைஅருள் பெற்ற உலகியலான, ஆன்மிக
உலக வலிமைகளே,
எங்களுக் கெதிராக திட்டம் தீட்டுபவர்களை
அழித்திடுங்கள்.
புலால் உண்ணும் மத நம்பிக்கையற்ற
கொடியவர்களுக்கு எதிராக
உன் வலிமையைக் காட்டிடுவாய். (இருக் 7)

தீயவர்கள் எல்லையற்ற இருட்டில் அழுந்தட்டும்.
ஒருவர் கூட மீளமுடியாத நிலை
அவர்களுக்கு ஏற்படட்டும்.
நல்ல மாந்தர்கள் நன்கு வாழ வேண்டும்
என்கிற உயிரார்வமே
எனது இந்தச் சீற்றத்திற்குக் காரணம். (இருக் 7)





நல்லவர்களுக்குத் தீங்கிழைக்கும் கெட்ட எண்ணம்
கொண்ட தீயவர்களைக் கொன்றழித்திடுவாய்.
தீயவர்களுக்கு மகிழ்ச்சியே இருக்கக்கூடாது. (இருக் 7)

இறைவனின் பார்வையில் உயர்ந்தவன் தாழ்ந்தவன்
என்கிற பாகுபாடே கிடையாது.
யாவரும் சமமே கடவுளின் அன்புக்கும் அருளுக்கும்
யாவரும் ஏற்றுக்கொள்ளப்படுபவர்களே. (இருக் 5)





## திருவெளிப்பாடு - அருண்மொழி

நமது அறிதிறனுக்கும் தெய்வீக மெய்ப்பொருட்கும்
தெய்வீகப் பண்பாட்டிற்கும்
ஒரு முழுமை தரும் தெய்வவாக்கு
நாம் தொடங்கியிருக்கும் குறையற்ற வேள்வியின் போதும்,
தொழுகை வேள்வியின் போதும்
நம்முடனேயே இருந்து
நமக்கு நன்மை நல்கட்டும். (இருக் 3)





## வாய்மொழி

முனிவர்களின் மனத்திலிருந்து திருவாய்மொழிகள்
பரந்து விரிந்து அருவிகள் போன்று கொட்டுகின்றன.
கடுங்காற்று போன்ற விரைவுடன் சரிவுகளில் சீறிப்
பாய்ந்து வரும் நீர்த்தொடர்களாகிக்
இந்த அலைகள் மெய்யறிவானவை,
எழுச்சிமிக்க போர்குதிரை போல்
எதிர்ப்புகளைச் சாடி நிலைத்து நிற்கின்றன. (இருக் 4)

திருவாய்மொழிகள் மெய்யறிவுக் களஞ்சியம்.
கடவுளிடத்து அவை தாமாகவே கூடுகின்றன.
ஆசை நிறைந்த அன்பு மனைவிகள்
புன்முறுவலித்தவாறே தங்கள்
கணவன்மாரை அணுகுவதுபோல்,
இந்த வீறார்ந்த மொழிகள் கடவுளின் சிறந்த
பண்புகளின் ஒவ்வொரு கோணத்தையும்
விளக்கமுறச் செய்கின்றன. (இருக் 4)





அழிவற்றவர்களின் மக்கள் யாவரும்
நாங்கள் கூறுவதைக் கேட்கட்டும்
நமது மகிழ்ச்சிக்குப் பிறப்பிடமாயிருங்கள். (இருக் 6)

செவ்வொளிமிக்க மெய்யறிவுச் செல்வத்தைத்
தமக்குள் அடக்கி வைத்திருக்கும்
மூன்று வேதங்களின் சாறத்தை
எங்களுக்கு விளக்குவாயாக.
மகிழ்ச்சியாகிற கலப்பற்ற தூய பாலை
எங்களுக்கு வழங்கும் பசுவின் மடியாகும் அது.
நமது விருப்பங்கள் யாவற்றையும் நிறைவேற்றி வைக்கிற,
விதைகளிலிருந்து கொடி தோன்றச் செய்கிற இறைவன்
நம்மிடம் குடிகொண்டுள்ளான்.
மேலும், தான் அவ்வாறிருப்பதைத் தம் திருவாய்மொழியால்
உரக்க நமக்குப் புரியவைக்கிறான். (இருக் 7)





# கலைமகள் திருவாய்மொழி

மொழி மகளாகிய கலைமகள்
மனம் சார்ந்த உயிரார்ந்த பல்கலை அறிவின்
ஊற்றுக் கண்ணாக விளங்குகிறாள்.
அவளே மனத்தைத் தூய்மைப படுத்துகிறாள்.
அந்தக் கலைமகள் வழிபாட்டுக்குப் பலனளிக்கிறாள்
தேவியே, நாங்கள் தொடங்கிடும் நற்பணிகளுக்கு
வாக்களித்து வெற்றியை அளிப்பாய். (இருக் 1)

எங்கள் உள்ளுயிர், அறிவு ஆகியவற்றின் ஆற்றல்களைச்
செயல்படச் செய்வது நீயே.
அறிவை நாடிச் செல்பவர்களுக்கு
ஆழ்ந்த அறிவை அளிக்கிறவளும் நீயே. (இருக் 1)

அவளிடமிருந்துதான் அருமறைகளாகிற ஆழிகள்
வீறி எழுகின்றன.
அவளுடைய அருளால்தான் உலக முழுவதும்
உயிர்த் துடிப்புடன் இயங்கிவருகிறது.
அவள் மூலமாகவே அழிவற்ற கடவுள் தன்னைக்



காட்டிக் கொள்கிறான்.
அவளிடமிருந்தே பேருலகெல்லாம் தன் செயல்பாட்டுக்கு
ஆக்கமும் ஊக்கமும் பெறுகின்றன. (இருக் 1)

வாய்மொழிகள் நான்கு வகைப்படும்.
படிப்பாளிகளும், அறிஞர்களும் அவற்றை நன்கறிவர்.
இவற்றில் மூன்று கமுக்கமாகக் காக்கப்படுகின்றன.
பொது மனிதனால் புரிந்து கொள்ள முடியாதவை இவை.
ஒலி மூலம் எண்ணங்களை வெளியிடச் செல்லும்
நான்காவது வகையையே மக்கள் பேசுகிறார்கள்.
(இருக் 1)

திருமொழியின் அன்னையே,
எண்ணங்களின் பெட்டகம் உன் நெஞ்சு.
நிறைந்த செல்வம், நல்லவை யாவற்றையும்
உள்ளடக்கியது.
இன்பத்தின் மூல ஊற்று உன் நெஞ்சம்,
உள்ளம் திறந்து அதிலிருந்து வாரி வழங்குவாய்,
நிறைந்த வாழ்வை எங்களுக்கு அருள்வாய். (இருக் 1)

நமது உணர்வாற்றல், தெய்வீக, மெய்யறிவு,
தெய்வீகப் பண்பாடு
ஆகியவற்றைத் தெய்வவாக்கு முழுமையாக்குகிறது.
நாங்கள் செய்யும் குற்றம் குறையற்ற வேள்வி வழிபாடு
இவற்றில் எங்கள் கூடவே இருப்பாய்.
எங்கள் நலனைக் காப்பாய். (இருக் 3)







அறியாமை இருளால் மூடப்பட்டிருக்கும் உண்மையின்
ஒளியை, எல்லாமறிந்த முனிவர்கள் கண்டு கொண்டனர்.
தெள்ளத் தெளிவாக இந்த உண்மையை
மறைகள் கூறுகின்றன. (இருக் 4)

தெய்வீக வாக்கைக் கடவுள் உண்டாக்கினார்,
உயிர்வாழிகளும் அதை உச்சரிக்கின்றன.
உணவு, வலிமை, புகழ், மகிழ்ச்சி, ஆகியவற்றை
அளிப்பவை எனது உலகத்தினரால் பாராட்டப்படுவது.
நமது விருப்பத்தை நிறைவு செய்யும் பசுவைப் போல
இந்த வாய்மொழி நம்மை வந்து அடையட்டும்.
(இருக் 8)

பெருந்தன்மை மிக்கதும் ஊக்கமளிப்பதுமான இந்தத்
தெய்வத் திருமொழி எல்லோருக்கும் கிட்டட்டும்.
அவர்களுடைய மெய்யறிவை விரித்துப் பெருக்கட்டும்.
(இருக் 10)

மொழித் தலைவீ,
மனிதர்கள் அந்த முதற் சொல்லைக் கூறும் பொழுது
மிக்கச் சிறப்புள்ளதும் தூய்மையாகவும்
உள்ள ஒன்றை ஒளிக்கு முன் கொண்டு வருகிறார்கள்.
தாங்கள் நெஞ்சத்தில் ஆழமாக இடம்பெற்றிருந்த
கமுக்கத்தை அன்பு வழியே கண்டு பிடிக்கிறார்கள்.
(இருக் 10)

முறத்தின் மூலம் நெல்லைப் புடைக்கும் பொழுது,
மாசு நீக்கப்பட்ட தூய தானியம் கிடைப்பதுபோல,
அறிவின் துணைகொண்டு அலசும் பொழுது மொழியின்



கடைத்தெடுத்த சாறத்தை மனிதர்கள் பெறுகிறார்கள்.
நட்பின் சின்னமான அன்பை
நண்பர்களும் உணர்கிறார்கள்,
அவர்கள் பேசும் பேச்சும்
அந்த அன்பின் வயமாக உறுதியாக அமைகிறது.

(இருக் 10)

கண்ணால் காணும் மாந்தர்கள் இருக்கிறார்கள்.
ஆனால் அவர்களுக்குத் தெய்வீக மொழியின்
ஊற்றுமூலம் புலப்படுவதில்லை.
நன்கு காது கேட்பவர்கள் உள்ளனர்.
ஆனால் அவர்களால் தெய்வீக மொழிகளின்,
உட் கருத்தைப் புரிந்து கொள்ள முடிவதில்லை.
கடமைபேணும் தூய உள்ளம் படைத்த
முனிவர்கள் இருக்கின்றனர்,
அவர்களுக்கே கலைமகள் தனது அழகிய வடிவை
வெளிப்படுத்துகிறாள்.

(இருக் 10)





## திடீர் மழை

உதவி கோரி கதறும்போது,
இறைவன் நம் பக்கத்திலேயே இருக்கிறான்.
நமது வழிபாடுகள் அவனைச் சென்றடையாதோ என்று
மயக்கமுறுகிறோம்.
நமது மருட்சியில் கவலையில்லை என்கிற
உறுதிமொழியை எதிர்ப்பார்க்கிறோம். கணப்பொழுதில்
இருண்ட அச்ச முகில்கள் கலைந்து விடுகின்றன.
வானார்ந்த மகிழ்ச்சியில் முங்கிக் குளிக்கிறது என் உயிர்.
மேலுலகம் தன் பங்கு எதுவுமில்லை என்று தன்
நிலையை வெட்ட வெளிச்சமாக்குகிறது.
எல்லாத் திசைகளிலிருந்தும் என்மேல்
வாழ்த்துகள் பொழிகின்றன.
பேரின்ப வெள்ளத்தில் நான் திளைத்தெழுகிறேன்.

(அதர் 19)

நட்பில் ஆர்வமில்லாத,
துணிவுடன் எந்தச் செயலிலும் ஈடுபடாது



யாதொரு பயனுமில்லாத எண்ணங்களில்
மூழ்கி இருப்பவனுமான
ஒரு மாந்தனைப் பற்றிய மொழிகள் இவை.
காதில் விழும் எந்தக் கருத்துகளினாலும்
இவன் பயன் ஏதுவும் பெறுவதில்லை. (இருக் 10)

நட்பில் நாட்டமுடையவனுக்கே
அறிவுக் கூர்மையுடைய
பொருண்மைகள் சொல்லப்படுகின்றன.
கடைசி வரை இந்தத் தொடர்பு இருந்து வருகிறது.
தங்களிடையே அவர்கள் வினா எழுப்பிக் கொண்டு,
விடை சொல்லிக் கொண்டு இருந்த போதிலும்
பலன் எதுவும் விளைந்துவிடப்போவதில்லை.
காரணம் சொற்கள் என்ன சொல்கின்றன
என்பதையே அறியாதவர்கள் அவர்கள்.
பூசாரிகள் இணைந்து போற்றிப் பாடல்கள் பாடும் பொழுது
அவை மனத்தினால் உந்தப்பட்டு
நெஞ்சத்தினால் பக்குவப்பட்டவையே
ஒரே வகையாகவே அவர்கள் சொற்கள் அமைகின்றன.
சமநிலையில் உள்ளவர்களாயினும் அவர்களில் சிலர்
விரைவாகவே முன்னேற்றம் காண்கின்றனர்
பலர் பின் தங்கிவிடுகின்றனர். (இருக் 10)

மொத்தத்தில் அவர்கள் முன்னேறுவதுமில்லை,
பின்னடைவதுமில்லை; அவர்கள் பூசாரிகளுமில்லை.
புனிதச் செயல்கள் புரிபவர்களுமில்லை



பொருளைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் தவறாகச்
சொற்களைப் பயன்படுத்தும் சூழ்ச்சிக்காரர்கள்
அவர்கள், அறியாமையால் தங்களைத்
தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள் (இருக் 10)

உள்ளொலிக் குரல்கள் இறையருளின்பத்தைப்
பெற்றுத் தரட்டும். (யசுர் 6)

பேருயர் ஒளி மிகுந்தவனே, எங்களுக்கு
அறிவுக் கூர்மை அளிப்பாய்.
எதிரியின் பொறாமையை முறியடிக்கும் வகையில்
எங்கள் எண்ணங்கள் கிளர்ந்தெழட்டும். (அதர் 7)

இறவா, உயிர்களின் புதல்வர்களே,
இறை வாக்குகளுக்குச் செவிசாயுங்கள். (யசுர் 11)

நன்மை பயக்கும் இந்த சொற்களை இங்கே
கூடியிருக்கும் அந்தணர்கள், மன்னர்கள், வேளாளர்கள்
வணிகர்கள் மற்ற அனைவருக்கும் சொல்வேன்.
(யசுர் 26)

திருவாய்மொழியின் தலைவ, நெகிழ்ந்த உள்ளத்துடனும்
ஆழ்ந்த நம்பிக்கையுடனும் உன்னைத் போற்றும் போது,
உனது அன்பு அழைப்பின் நோக்கங்களையும் புரிந்து
கொள்வோமாக. இந்தப் பற்றுப் பிணைப்பின்
துணை கொண்டும் உன் அருளன்பு கொண்டும்,
எங்கள் குறிக்கோளில் முன்னேறுவோமாக.



உனது உந்துதல் மனச்சான்றுக்கு மதிப்புக் கொடுத்து
அதற்கெதிராகச் செல்லாமலிருக்க உதவிடட்டும்
(அதர் 1)

என்றுமே இருந்திராத குரல்கள் இன்று
செம்பொருளிடமிருந்து கிளம்பி உண்மை பேசட்டும்.
படைப்பாளி நீ ஒருவனே.
உன்னிடமிருந்தே உயிர்கள் தோன்றுகின்றன,
உன்னிடத்திற்கே திரும்புகின்றன,
புதுக் குரல்கள் ஒவ்வொன்றும்
உன்னிடமிருந்தே தோன்றுகின்றன. (அதர் 10)

மேலான தலைவ, நீ என்றும் எங்களுடனேயே இருப்பாய்.
எங்களுடைய வழிபாடுகளின் விளைவாக விரைவிலேயே
கிடைத்த அமைதி எங்களுடனே நின்று நிலைக்கட்டும்.
மென்மையான இடத்தில் வீற்றிருக்கும் கலைமகள்
எங்களுக்கு நிறைவு அளிக்கட்டும்.
வலிமை வாய்ந்த தெய்வ ஆற்றல்கள் யாவையும்
எங்களுக்கு அமைதி அளிக்கட்டும்.
தூயமனம், நன்னடைத்தை இவை
எங்களை வழி நடத்த அருள் கிடைக்கட்டும். (அதர் 19)

ஓ, பாடகனே, தெய்வீக அன்பைப் பற்றிப் பண்ணிசைப்பாய்,
என்றென்றும் நிலைத்திருக்கும் நளினமும், மகிழ்ச்சியும்
அளிக்கின்ற தெய்வீக ஊற்று
உன் ஆன்மாவில் இடம் பெறட்டும்,



அங்கு இறைவன் என்றும் வாசம் செய்வானாக.
தனது தெய்வீகத் தன்மை பொருந்திய விரல்களால் அவன்
உன் உள்ளுயிரின் நரம்புகளை மீட்டட்டும்;
அதிலும் தான் இருப்பதை உணர்த்தட்டும்
உன் மேல் எங்களுக்கிருக்கும் அன்பை வெளிப்படுத்த
எங்கள் வாழ்வின் நரம்புகளை மீட்டி அருள்புரிவாய்;
தெய்வீகக் குரலை வழங்குவாய்.

(இருக் 1)





## முக்கால முழுமை

அழிவு என்றில்லாத பன்னிரண்டு ஆரக்கால்களையுடைய
கால உருளை வானுலகத்தை இடைவிடாமல்
சுற்றிச் சுழண்டு கொண்டிருக்கிறது.
இவ்வாறு சுற்றும் நிலையில் ஏழுநூற்று இருபது
ஆரங்கள் கொண்டது இது. (அதர் 9)

ஞாயிற்றின் வெளிச்சத்திலிருந்து பிறக்கிற தெய்வீகத் தீ
படைப்புகளிலேயே முதல் இடம் வகிக்கிறது.
தீயின் முக்கால முறைமைகளைப் பற்றி
நன்கு அறிந்துள்ளவன்
மலர்ந்து செழித்து நிற்கும்
மரத்தைப் போல முன்னேற்றம் காண்கிறான். (இருக் 2)

காலம் காலமாகத் தொடர்ந்து வரும் அண்ட ஆற்றலின்
செயல் முறையை நான் அன்பார்வத்துடன்
போற்றிப் பாடி வருகிறேன்.
இறைவ, அந்த ஆற்றலின் வியப்பளிக்கும்
செயல் முறையைப் புரிய வைத்திடுவாய்.



**த.கோ - தி.ஸ்ரீ**

பசுவின் நிறம் கறுப்பாயிருந்தாலும் அது அளிக்கும் பால்
மட்டும் வெளுப்பாய், சுவையாயிருக்கிறதே.
இதன் மறைபுதிர் உரைத்திடுவாய். (இருக் 4)

அழியாத உண்மையைப் பாராட்டிப் பேசு.
உன் செயல்முறைதான் அதற்குச் சான்று.
உன் செயல்களில் உண்மை ஒளிரட்டும். (இருக் 3)

முக்கால முழுமை உண்மையையே
விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருக்கும்
ஒருவன் முடிவில் உண்மையின்
உருவாகவே ஆகிவிடுகிறான்.
நிலையான நெறியைப் எதிரொலிக்கும் "ரீடா" வின்
ஆற்றல் எட்டாத் தொலைவில் உள்ளது;
அதைத் தேடுபவர்களுக்கு மெய்யறிவு கிட்டுகிறது.
தங்களது வாழ்வே 'ரீடா' அளித்ததுதான் என்பதை
மண்ணுலகும், விண்ணுலகும் நன்கறியும்.
'ரீடா'வின் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டே நிகரற்ற
ஆற்றல்களும் போற்றிப் பாதுகாத்து வைத்திருக்கும்
அமிழ்தத்திற்கு இணையான பாலைத் தருகின்றன.
(இருக் 4)

நிலையான சட்டங்கள் எண்ணற்றவை.
இவற்றின் வழி நடந்து கொள்ளும் ஒருவனை
எந்த துன்பமும் அணுகுவதில்லை.
என்றும் வாழ்வோம் என்ற ஆழ்ந்த எண்ணமே
துயரங்களை வேரறுக்கிறது.
இந்தச் சட்டங்களைப் புரிந்திருப்பது கூட
மக்களுக்கு நன்மை பயக்கக் கூடியது.



இந்த அறிவொளி, கேளாச் செவிகளைப் கூடச்
சென்றடைந்து தன் சிறப்பை எடுத்துரைக்கிறது.
(இருக் 4)

இயற்கையின் நெறிமுறைகளுக்கு உட்பட்டு
எண்ணுகின்றவன், அவற்றின் படி நடக்கிறவன்,
அவற்றின் படி வாழ்கிற மாந்தனுக்கு
மெய்யறிவு தானாகவே வந்து சேர்கிறது. (இருக் 10)

பொய் பேசுகிறவனைக் கடவுள் மன்னிப்பதில்லை.
(இருக் 10)

உண்மை, தவறற்ற அறங்கள், ஒழுக்கம், தூய்மை,
வழிபாடு, தியாகம் இவையே நிலத்தில் நிலை நிற்கின்றன.
முக்காலமும் எங்களைத் தாங்கி வரும் நானிலத்தாயே,
வளமையை எங்களுக்கு வாரி வழங்குவாய். (அதர் 12)

ஒளிமிக்க தலைவ, துறவிகளுக்கான ஒழுக்கத்தின் அடிச்
சுவட்டிலே பற்றார்வம், அறிவாற்றல், ஊக்கம் இவை
கொண்டு முன்னேற வழி காட்டுவாயாக. ஆசான்கள்,
எங்களை நேசித்திட வாழ்த்திடுவாய்,
நுண்ணறிவின் வலிமையோடு நிறைவாழ்வு
வாழ்த்திட வரமளிப்பாய். (அதர் 7)

அண்ட ஒழுங்குமுறையின் சீரான செய்கைகள்தாம்
நிலத் தாயைச் சம நிலையில் நிறுத்துகின்றன.
(அதர் 4)



அறிவொளி மிக்கவர்களான முனிவர்கள் விரும்பும்
நிறைந்த ஈறில்லாத மகிழ்ச்சிக்கு இட்டுச் செல்லும்
நல் வழியில் நடப்பாய். (அதர் 8)

நிறைந்த ஈறில்லா மகிழ்ச்சியிலேயே
கடவுள் நம்மை எப்பொழுதும் வைத்திருக்கிறான் என்று
புரிந்து கொள்ளும் உணர்வினை அளிப்பாய்.
எங்களுடைய ஆசைகள் யாவும் நிறைவேற
வழி செய்திடுவாய். (யசுர் 4)

என்றும் என்னருகிலேயே நீ இருப்பது ஒன்றே எங்கள்
நிலையான ஆசைகள் நிறைவேறும் என்பதன் அறிகுறி
என்பதை நாங்கள் புரிந்து கொள்ள வாழ்த்துக் கூறுவாய்.
(யசுர் 5)

முக்கால முழுமை மகிழ்ச்சி பெற்றிருப்பதே வாழ்க்கைப்
பயணத்தின் இறுதிக் குறிக்கோள். (யசுர் 7)

இயல்பிலேயே இறை சால்புடையவரே, அவனின்
மேன்மைக் குணங்களில் பங்கெடுத்துக் கொள்வீர்.
பெரு மகிழ்ச்சியின் எல்லையை எட்டிப் பிடிப்பீர்.
(யசுர் 9)

இறையின் பேரருளைப் பெற, மகிழ்ச்சி வெள்ளத்தில்
மூழ்கித் திளைத்து அவனுடைய திருவடிகளில் நமது
உடமைகள் யாவற்றையும் ஒப்படைப்போம்.
(யசுர் 11)



மற்றவர்களுக்காகத் தன்னை வருத்திக் கொள்பவனையும்,
ஆதரவு தேவைப் படுகிறவனையும் நோக்கி
இயற்கை அன்னை இறங்கி வருகிறாள்.
அதன் பின்னர் அவள் செம்பொருள் தலைவனிடம்
சிந்தையைச் செலுத்துகிறாள். (இருக் 5)





## தீத் தேவன்

உலகில் உதித்து உரம் பெற்றுள்ள தீத் தேவன்,
இறைவனால் படைக்கப்பட்ட பிற உலகங்களையும்
சென்றடைந்து பரவி நிற்கிற தீத் தேவன்,
இறைவனைத் தொழுபவன், பிறரைத் தூய்மைப் படுத்துபவன்,
அறிவில் சிறந்தவன், வணங்கத் தக்கவன்,
அவன் இயற்கை ஆற்றல்களுடன்
நமக்குத் தொடர்பு ஏற்படுத்திக் கொடுப்பானாக.

(இருக் 2)

உள்ளுயிரைத் தூய்மைப் படுத்துவது தவத்தின் ஆற்றல்.
தீயின் சுடர் பொன்னைத் தூய்மைப்படுத்துவதைப் போல்,
தூய உள்ளுயிரே பெருமைக்கு உகந்தது. (இருக் 10)

வேள்விகளில் இறைவனுக்கு அளிப்பப்படும் படையல்
விண்வெளியை அடைந்து
அங்கிருக்கும் காற்றுடன் கலந்து சூழலைப்
புனையா வனப்பாக்குகிறது.



செங்கதிர் கற்றைகளுக்கு உயர்ந்து நமது நலனுக்காக
மழை பொழிவிக்கிறது. (யசுர் 2)

நீ வேள்வி செய்யும்போது தூய தீயில்
நெய்யும் மற்ற உணவுப் பொருள்களையும் சேர்க்கிறாய்.
ஒன்றாகக் கலந்து அவை தூயகதிர்கள், தண்ணீர், காற்று,
இவற்றுடன் இணைந்து
வான்வெளி முழுவதும் பரவிச்,
சூழலுக்கு வல்லமை அளித்து மக்களுக்கு
வளம்பெருகும் மழையும்
இதமளிக்கும் ஒளியும், வெளிச்சமும் உயிரும் ஊற்றமும்
உள்ளுரமும் அளிக்கின்றன. (யசுர் 2)

ஒப்புயர்வற்ற பெருமை வாய்ந்த பெரும,
நீ எல்லையில்லாப் பரப்பகற்சியில் நிறைந்திருக்கிறாய்.
விருந்து வல்லமை வாய்ந்தவ,
நூற்றுக்கணக்கான நிலங்களும், செங்கதிர்களும்,
கண்ணுக்குத் தெரியும் கோள்களும்
பார்வைக்கு எட்டாத கோள்களும்
உன் ஆணைக்காகக் காத்திருக்கின்றன.
ஆனால், நீயோ இவை யாவற்றையும் கடந்தவன்.
தோன்றியுள்ள உலகமும், படைக்கப்படாத உலகமும்
பிறந்தும், பிறக்காமலிருப்பவையுமாகிய உயிர்களும்
காலத்தால் கட்டுப்படாத உனது படைப்புலகின் ஒரு சிறு
கூறே; உலகின் கோள்கள் யாவும்
உன்னையே சுற்றி வருகின்றன. (இருக் 8)





நேர்ந்தளிப்பு என்கிற பணிவன்புடனேயே
உன் பயணத்தைத் தொடர்.
உனது உயிர் மூச்சு நேர்ந்தளிப்பதிலேயே ஓங்கி உயரட்டும்,
உன் கண்களின் ஒளி நேர்ந்தளிப்பதிலேயே பெருகட்டும்.
உன் காதுகளின் கேட்கும் திறன்
நேர்ந்தளிப்பதிலேயே சிறக்கட்டும்.
உன் முதுகெலும்பு நேர்ந்தளிப்பதிலேயே
பலம் பெறட்டும்.
மேன்மையான உயரிய செயல்கள் யாவும் நேர்ந்தளிப்பின்
சிறப்பினாலேயே வெற்றி பெறட்டும். (யசுர் 9)

நேர்ந்தளிப்பின் அடிப்படையிலேயே வாழ்க்கையாகிற
எங்கள் வேள்வியைத் தொடங்குவோமாக. (யசுர் 11)

வழியில் எதிர்ப்படும் இடையூறுகளை எல்லாம் கடந்து
உலக மக்களின் நன்மைக்காகவே
நன்மை புரியும் இயற்கையின் வேள்வி நடைபெறுகிறது.
(சாம. 111)

நடத்தப்படும் வேள்வி உணவின்
விளைபொருள்களைப் பெருக்கட்டும்.
விண்ணகத்தைத் தூய்மைப்படுத்தி நமக்கு செல்வமும்
நல்வாழ்வும் அளிக்கப்படும்.
(சாம 1529)





கடவுளின் படைப்பின் ஊடுபாவுகளை எளிய ஆண் பெண்களாகிய மக்கள் புரிந்து கொள்வதில்லை.
இந்தப் பிறவியில் ஒரு தகப்பனாலும், அடுத்த பிறவியில் மகனாலும் சொல்லப்படப்போகிற சொற்களின் பிறப்பிடத்தை எவரும் புரிந்து கொள்ளப்போகிறதில்லை.
(இருக் 6)







## சோம மது

இன்பக் களிப்பளிக்கும் தெய்விக விருப்பாற்றல் என்கிற
அருள்பாலிக்கும் வலிமை தூக்கத்திலிருந்து எனது
உள்ளுயிர்ப்பை எழுப்புகிறது.
இறை அன்பாகிற சோம மது எவரையும் விட்டு வைக்காத
காமம், சினம், பேராசை, பற்று, செருக்கு, பொறாமை
ஆகிய ஆறு தீய குணங்களையும் அழித்து விடுகிறது.
(இருக் 6)

இறையன்பு அமிழ்தமாகிய சோம பானத்தை
வயமாக்கிக் கொண்டிருக்கிற காலைப் பொழுதின்
முகப்பில் மிடுக்குடன் சுடர்விடுகின்ற வண்ணங்களைக்
கண்டு களிக்கிறது.
மழை பொழிவிப்பவனும் காற்றை அனுப்பி
வைப்பவனுமாயிருக்கிற மேலுலங்களை வீறார்ந்த ஒரு
தூணின் தாங்குதலால் வல்லமை வாய்ந்த இந்த
அமிழ்தம் தாங்கிக் காக்கிறது. (இருக் 6)





பேரின்பமளிக்கிற தலைவ, தெய்வீக மகிழ்ச்சிக்கு இட்டுச்
செல்லுகிற ஆன்மிக களிப்பூற்றைத் தூய்மைப்படுத்தி
உயர்த்துகிற உனது அமுதத்தை
நெஞ்சுமுழுவதும் நிறைத்திடுவாய். (இருக் 9)

தீய எண்ணங்கள் யாவற்றையும் இந்த அமுதம்
ஒழித்து விடுகிறது.
உனது உயர்ந்த அன்பு எங்கள் உள்மனத்திற்குப்
புதியதொரு ஆற்றலை அளிக்கிறது. (இருக் 9)

மெய்யறிவின் மூல ஊற்றே இந்தத் தேவாமுதம்தான்.
எந்தச் செல்வம் தேவையோ,
அதையே நமக்களிக்கிறது. (இருக் 9)

கீழ்வானம் கோல வண்ணக் காட்சிக்குப்
பொன் அழகு சேர்ப்பது அந்த தெய்வீக அமுதமே.
மனித ஆன்மாவைத் தூய்மைப் படுத்தும் தெய்வீக
அமுதமாகிற சோம மதுவிற்கு
இந்த வண்ணக்காட்சி வணக்கம் செய்கிறது. (இருக் 9)

தெய்வீக அன்பின் அமுதமாகிற சோம மது
நம் யாவருடையவும் நெஞ்சிலுள்ள மாசு மறுக்களைக்
களைந்து தூய்மையாக்குகிறது.
இந் நிலையில் உள்ளுயிரானது அச்சம், துயர், அறியாமை,
ஆகியவற்றினின்றும் விடுதலை பெறுகிறது.
இவ்வாறு விடுபட்டுப் தெய்வ நம்பிக்கையோடும்
ஆன்மிக மகிழ்ச்சியுடனும் வீரம் மிகுந்த உள்ளுயிர்
இறைவனை அவனது முழு அழகுடனும் காண்கிறது.
(இருக் 9)



உயிர்ப்பூட்டி களிப்பளிக்கும் ஊக்க மூட்டும்
இந்த அமுதம்,
உண்மையான அடியார்கள் உள்ளத்தில்
ஆழ்ந்த மரியாதையைத் தோற்றுவிக்கிறது.
அவர்கள் உள்ளத்தில் தூய ஆழமான எண்ணங்களையும்,
எழுச்சிகளையும் ஊன்றுகிறது. (இருக் 9)

இந்தத் தெய்வீக வானக ஓடை, சோம மது பரந்த உலகின்
ஒவ்வொரு கால மணியிலும் பரந்து விரிந்திருக்கும்
கடலின் ஒவ்வொரு துளியிலும் உயிர்மூச்சை நிரப்புகிறது.
மகிழ்ச்சிப் பெருக்கில் அசைந்தாடிக் களிக்கும் அவை
இறை ஒளியின் புகழ் பாடுகின்றன. (இருக் 9)

தொடர்ச்சியான இந்த உயிர்ப்பாற்றலின் ஊற்று
நலமளிக்கும் ஆற்றல் போல் ஞாயிற்றின் பொன்மயமான
கதிர்களூடே ஊடுருவிச் சென்று இழைந்து பிணைகிறது.
நேர்மையான பாதையில் நல்ல நண்பன்போல்
நம்மை நடத்திச் செல்கிறது. (இருக் 9)

சோம மது தூய்மையான அறிவின் மூலம் மகிழ்வின்
பேரின்பத்தைப் பரப்புகிறது.
ஆன்மிகக் கழிபேருவகையில் திளைத்திருக்கும்
உள்ளுயிரை மேலும் மேலும் மேம்பாடான நிலைக்குக்
கொண்டு செல்கிறது. (இருக் 9)

ஆன்மிக ஒளியும் இறையன்புமாகிற உயிர் அமுதம்
பறவையைப் போல சிறகுகளை உடையது.
உலகிலுள்ள அனைத்துப் பொருள்களிலும் தன்
உயிர்ப்பாற்றலைப் பரப்பப் பறந்து செல்கிறது. (இருக் 9)



தெய்வீக இசையின் இனிய பாட்டு இணைந்து ஆற்றின்
அலைகளைப்போல் விரைவாய்த்
தவழ்ந்தோடுகிறது இந்த அமுதம். (இருக் 9)

வாழ்க்கைப் போராட்டத்தில் வெற்றி அடைந்திட
தனது துணிவு பொருந்திய
துணைவர்களுடன் ஒரு போர்வீரன் போலத் தன்
பயணத்தைத் தொடர்ந்து பாய்கிறது இந்த அருமருந்து.
(இருக் 9)

நிலைத்த வாழ்வின் முறைமை அசைக்கமுடியாத
உறுதியுடனேயே உள்ளது.
மானிட இனத்தின் நலன் கருதி இந்த முறைமை
பல்வேறு எல்லையில்லா அழகிய தோற்றம் கொள்கிறது.
நிலையான வாழ்வு என்பதன் காரணமாக எடுக்க எடுக்கக்
குறையாத உணவு குவிக்கப்பட்டிருக்கும்
என மனிதர்கள் நம்புகின்றனர்
நிலைத்த வாழ்வின் முறைமைப் படியே வேதங்கள்
நிலைத்திருக்கும் ஆற்றல்மிகு உண்மைகளைத்
தன்னுள்ளே அடக்கி வைத்துள்ளது. (இருக் 4)

தவழந்தாடும் பொழுதே
தேர்போல் அது பாய்ந்து செல்கிறது.
கடவுளன்பர்களுக்கு அருள்பொழிந்தவாறே விரைந்து செல்கிறது.
யாவரும் அந்த ஓசையை நன்கு கேட்கலாம். (இருக் 9)



இந்த ஆருயிர் மருந்து இறையடியார்களுக்கு
வழங்கப்பட அணியமாக உள்ளது.
கரடுமுரடான பாதைகளூடே தடையின்றி ஊடுருவி
மேலுலகம் வரை செல்கிறது. (இருக் 9)

உயர்ந்த எண்ணம் கொண்டவர்களை அடைந்து
அவர்களுக்கு வாழ்த்து வழங்குகிறது.
நேர்மையான எண்ணங்களுக்கும் செய்கைகளுக்கும்
உரமளிக்கிறது.
உலக நன்மைக்காகத் தெய்வீக
அறிவைக் காத்துப் பகிர்ந்தளிக்கிறது. (இருக் 9)





# தியானம், பரந்த பார்வை, மெய்யறிவு, நுண்ணறிவு

எவனொருவன் உருவம், வண்ணம், சொற்கள் ஆகிய
தொடர்புற்றவற்றை ஒருங்கிணைக்கும் முதன்முதல்
நூல் இழையை மட்டும் அறிந்திருக்கிறானோ,
அவன் உலகின் அமைப்பை மட்டுமே தெரிந்தவனாகிறான்.
அவன் தெரிந்து வைத்துள்ளது மிகக் குறைவே.
ஆனால்,
எவனொருவன் ஆழ்ந்து, புகுந்து உயிராற்றல்கள்
ஒற்றுமையாகிற நூல்கள் இரண்டையும்
மெல்லிய இழையுடன் சேர்க்கிறானோ
அவன் உண்மை முழுவதும் உணர்ந்தவனாகிறான்.
நெஞ்சத்தின் உள்ளேயும் உலகின் எல்லாப் பரந்த
பகுதிகளிலும் நிறைந்திருக்கும்
அனைத்து ஆற்றல் படைத்தவனும்
எங்கும் நிறைந்திருப்பவனுமான இறைவனை,
எவன் வணங்குகிறானோ அவன் இறைவனை
நன்கு உணர்ந்தவனாகிறான்.

**த.கோ - தி.ஸ்ரீ**



எது உண்மை என்றறிந்து கொள்ள இன்னும்
ஆழமாக புகுந்து ஆழ்வாயாக. (அதர் 10)

எல்லாம் வல்ல, எங்குமிருக்கிற
தன்னைத் தானே படைத்துக் கொண்டவன்.
மகிழ்வின்ப வடிவான இறைவன் திருவருளால் அவன்
புகழை என்றும் நினைத்து மகிழும் பேற்றினைப்
பெற்றிருக்கிறோம்.
அந்த இறைவன் உயர்ந்த செயல்களில்
நாம் ஈடுபட ஊக்கமளிப்பான். (யசுர் 36)

இயற்கையின் விளைவாகத் தோன்றிய நுண்புலன்களுக்கு
ஒளி வழங்க உன்னை மனம் நம்பியுள்ளது.
தெய்வீக உந்தல் பெற்றுள்ள நீ எல்லோராலும்
உயர்வாக மதிக்கப்படுகிறாய். (சாம 54)

மெய்யறிவு வளமும், தெய்வீகப் புகழும் இருக்கும் வரை,
அந்த நேர்பாதையிலேயே செல்வாய்.
இந்தப் பாதையையே தேவர்களும் விரும்புகின்றனர்.
கடினமான உழைப்பை மேற்கொள்ள தூண்டப்
படுகிறவர்களுக்கு இறைவன் துணை புரிகிறான்.
அவர்களுக்கே அவன்தன் அருள் வாழ்த்தை
என்றும் வழங்குகிறான். (இருக் 1)

ஆவிச் சுருள்களின் வழியே கிடைக்கப் பெறுகிற பேருலக
ஒளி வெள்ளத்தை அறிந்து கொள்கிறவன்.
படைப்பவனையும் நன்கு புரிந்து கொள்பவனாகிறான்.
(இருக் 10)



என்றும் மங்காமல் ஒளி வீசுவது இறைவனின் பெருமை. அவனுடைய பெருமையை நன்கு சிந்தித்து மகிழ்வார் மனத்திண்மையும் முற்றுணர்ந்த காட்சியையும் அவன் நமக்கு அருளட்டும். (சாம 1462)

இடைவிடாத ஆழ்ந்த உள்முகப்படுத்தலே இறைவனின் எண்ணப் போக்கைக் கண்டு கொள்ள உதவிடும் கருவி.
(இருக் 5)

இறைவனே ஒவ்வொருவரிடமும்
குறிப்பிட்ட பணிகளை ஒப்படைகிறான்.
உனக்கு அளிக்கப்பட்டுள்ள பணியை
நன்கு முடித்திட ஆற்றலைச் செலவிடுவாய்.
அவரவர்க்கிடப்பட்ட பணியை அவரவா் ஏற்று நன்கு
செய்யவேண்டுமென்பது அவனது விருப்பம்.
இறைவனின் ஆற்றலை நெஞ்சிலிறுத்தி அனைத்து
உலகங்களையும் காப்பவனும், வெற்றியின்
இருப்பிடமாகவுமுள்ள இறைவனின்
அருங்குணங்களை ஈர்த்து உட்கொள்வோம். (இருக் 5)

வெற்றியடையவும் மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்தவும்
உனது ஆற்றலை வளர்த்துக்கொள்.
உண்மையின் வழியே வாழ்ந்திட உறுதிகொள்.
உன் வாழ்க்கையை இறைவனுக்கு அளித்திடுவாய்.
(இருக் 6)

விரிபேருலகின் உண்மைப் பாங்கையும்
எங்கும் பரந்திருக்கும்
உள்ளுயிரைப் புரிந்து கொள்கிறவன்,



உள்ளச் சமநிலையை அடைகிறான்.
நன்கு அறிந்து கொள்ளும் திறனையும்,
என்றும் நிலைத்திருக்கும் புகழையும்
கடவுள் அவனுக்கு அருள்கிறான். (அதர் 10)

இறைவ, மேலானது, கீழானது, இடைப்பட்டது ஆகிய
உனது எண்ணற்ற வெளிப்பாடுகளைத்
தெரிந்து கொள்ள அருள்புரிவாய்,
அனைத்து வெளிப்பாடுகளிலும்
உன்னை நான் தொழவேண்டும். (இருக் 10)

அரும்பெருந் தலைவ, எந்த அருட்காட்சியால்
தொல்பழங்கால முனிவர்கள்
தெய்வீகத் தன்மை அடைந்தார்களோ,
அந்தப் பேற்றினை எனக்கு அளிப்பாய். (அதர் 6)

ஆன்மிகப் பேரறிவில் முழுவதுமாகத் தங்களை
ஈடுபடுத்திக் கொள்பவர்கள் இருண்மையிலேயே
அமிழ்ந்து போகின்றனர்.
அதேபோல் நீடித்து நிலைக்கும்
வாழ்விற்கு வழி காணாமல்
வாழ்வியல் ஆக்கம் தேடுவதிலேயே ஆழ்ந்து போகிறவர்கள்
இருட்டிலேயே தடுமாறுகிறார்கள். (யசுர் 40)

நிலையான உண்மையைப் பற்றிய மெய்யறிவு
நிலைபெற்ற அமைதியுடன்
பேரின்பத்தையும் அளிக்கிறது. (யசுர் 40)



இதோ, எனது உடல் மண்ணில் சேர்வதற்கு
அணியமாக உள்ளது.
இன்றியமையாத உயிர்ப்பும் உலகத்தின் உயிர்ப்பாற்றலுடன்
கலக்கப்போகிறது.
அழிவில்லாத உன் ஆன்மா
உலகத்தில் அழியாத ஆன்மாவுடன் இணையட்டும்.
தூய தொண்டனே, ‘ஓம்” என்கிற
மந்திரச் சொல்லை நினைத்திடு.
நீ நிறைவு செய்துள்ள செயல்களையும்,
தூய திட்டங்களையும் நினைவில் கொணர்வாய்.

(யசுர் 40)

வேதங்களில் காணப்படும் தெய்வீக மெய்யறிவு
உலகியலாகவும், ஆன்மிகமாகவும் முன்னேற வழிகாட்டும்.

(சாம 98)



## இயற்கை அன்னை

இயற்கையின் ஒத்திசைவுடன் முழுமையாக ஒன்றி வாழ்.
உலகின் ஒப்பற்ற ஒளியில்
கடவுளின் எல்லையற்ற அன்பைக் காண்பாய்.
கடவுளின் அருளால் பெரும்பேறு பெறுவாய்.
இனிய உதய ஞாயிறு உன்
உள்ளுயிர்க்கு இனிமை சேர்க்கட்டும்.
பளிச்சிடும் நடுப்பகல் உன் நெஞ்சத்தை
மகிழ்ச்சியால் துள்ளச் செய்யட்டும்.
உன் ஆன்மாவின் பெருமிதமான இசை அமைதிக்கும்
வளமைக்கும் வழி காட்டட்டும்.
உன் அன்றாடப் பணி முடிவு பெற்றபின் இயற்கை
அன்னையின் மடியில் துயில் கொள்வாய்.
தேவர்கள் யாவரும் உனக்கு
உறு துணையாக நிற்பார்கள். (யசுர் 34)



பெரு மகிழ்ச்சியான வாழ்வு பெற உனது நுண்ணறிவைத்
தீட்டிக் கொள்.
உன் உள்ளத்தை
ஒளிமயமான காட்சி மூலம் வளப்படுத்திக் கொள்.
(சாம 101)

தற்காப்புக்காகவும் வாழ்க்கையில் முன்னேற்றம் காணவும்
உனது மெய்யறிவையும்,
எதிர்நோக்குத் திறனையும் வளர்த்துக்கொள். (சாம 161)

மெய்மை, பொய்மை இரண்டையும் பிரித்தறியும்
தன்மை மூலம் உனது மெய்யறிவை
வளப்படுத்திக் கொள். (சாம 171)

வேதங்களின் மெய்யறிவு வழி நடந்து நல்ல
செயல்களைச் செய்;
நெறியுடன் நல் வாழ்வு வாழ். (சாம 176)

மெய்யறிவு வளமுறப் பெற்றுக் கடமையுணர்வுடன்
மேன்மையான வழியில் நடந்துகொள்.
சிறப்பான செயல்பாடுகளைப் புரி. (சாம 189)

காலை, நடுப்பகல், மாலை, இரவு, எந்தநேரமும் உனது
தெய்வீக அருள் காட்சியை எனக்களித்திடுவாய்.
உதய ஞாயிற்றின் ஒளியில் மூழ்கி செடிகொடிகள்
செழித்து வளர்வது போல்
உனது அன்பு காரணமாக எங்களது அறிவு விதைகள்
செழித்துக் கொழிக்கட்டும். (அதர் 6)



கண்ணுக்குத் தென்படுகிற நூலில்,
கண்ணுக்குத் தெரியாத இழையைப்பற்றி,
எவன் அறிந்திருக்கிறானோ, அவன்தான்
உண்மையைப் புரிந்து கொண்டவன். (அதர் 10)

உழைப்பு, பொறுமை, விடாமுயற்சி, ஆகியவற்றால்தான்
பேருலகு உருவாகிறது.
மெய்யறிவினால் புரிந்து கொள்ளப்பட்டும் உண்மையின்
பலம் கொண்டும் உருவாகிற இந்தப் புடவி
நிலைத்து நிற்கிறது. (அதர் 12)

நீடித்து நிற்கும் அமைதிக்காக எல்லாம் வல்ல இறையின்
பெருமையை ஆழ்ந்து எண்ணுவோம். (அதர் 19)

தெய்வீக விருப்பத்தின் தூதுவர்கள் நாங்கள் என்பதை
உணரச் செய்வாய். (யசுர் 2)

தெய்வீகத் திருக்காட்சியால் ஊக்கமடைவாய். (யசுர் 4)

பகுத்தறியும் ஆற்றலை மேன்மைப்படுத்திக் கொள்வாய்.
அப்படியே உன் உடலில் எவராலும் வெல்லமுடியாத
வீரத்தை ஊன்றிக் கொள்வாய். (யசுர் 6)

வேதங்களின் தெய்வீகத் துணை உனக்கு
அமைதியும் வளமையும் அளிக்கும். (யசுர் 7)

வாழ்முதல் பெரும நீ நிலைத்திருப்பவன்
எல்லாம் அறிந்திருப்புவன், அருளாளன்.
மங்காத உன் புகழை என்றென்றும் பாடுகிறோம்.
தெய்வீக வழியில் எங்களை வழிநடத்தி

எங்களுக்கு நுண்ணறிவு அளிப்பாய்.
மெய்மையையும், பொய்மையையும் நன்கு பகுத்தறியும்
வேறுபாட்டைக் காட்டி அருள்வாய். (இருக் 3)

தெய்வீக நிலையின் கொடுமுடியை அடைய
எனக்கு வலிமை அளிப்பாய். (யசுர் 9)

யோகப் பயிற்சிகள், தியானம் இவற்றின் மூலம்
எங்களுக்கு அறிவுத்திறன், ஆற்றல், அழகு, யாவும்
கிட்டுகின்றன.
உலகத்தைப் படைத்தவரும் கோவேந்தனாய்
இருக்கிறவனுமாகிய அனைத்தாற்றலுமுள்ள இறைவனின்
பேருலகில் எங்களுக்கு நிலையான ஒளி, வலிமை,
பார்வை யாவும் அருளப்பட்டுள்ளன. (யசுர் 11)

உயர்ந்த எண்ணங்கள் உன்
நெஞ்சத்தில் ஆட்சி செலுத்தட்டும். (யசுர் 12)

யோகத்தினாலும் இறையருளாலும் பொருள்
உலகிலிருந்து வெளிக்கிளம்பி மேலுலகின்
உயர்ந்த பகுதியை சென்றடைவேன்.
பின்னர் அங்கிருந்து புறப்பட்டு நிலையான மகிழ்ச்சி,
ஒளி, வாழ்நாள் இவற்றை அடையும் பொருட்டுத்
தெய்வீக அமைதி ஆட்சிப் பரப்புக்கும் செல்வேன்.
(யசுர் 17)



உன்னைப் பற்றிய அறிவு, தீவினை புரிவதிலிருந்து
எங்களைக் காத்தும்,
தீமைகளை விரட்டியடித்தும்
ஆன்மிகப் பாதையில் முன்னேறத் துணைபுரிகிறது.
(இருக் 1)

கொந்தளிக்கும் வாழ்க்கைக் கடலைக் கடந்து கரைசேர
அறிவாளிகளுக்கு உதவி புரிபவை
அறிவும் நம்பிக்கையுமாகிற துடுப்புகள் இரண்டும் தான்.
(சாம 782)

உனது உடலும் உள்ளமும் இணைந்து செயல்படட்டும்
உனது உள்ளமும் செயல்களும்
தொடர்புடையனவாகவே இருக்கட்டும்.
மனித உடல், உள்ளம் இரண்டுமிணைந்து செயல்படும்
வகையிலேயே உலகத் தலைவன்
அவற்றைப் படைத்திருக்கிறான். (அதர் 6)





## நிலையான வாழ்வு

தலைவ, தெய்வீக ஒளியுடன் நீ விடிந்தொளிர்கிறாய்,
அவியுணவுகளினால் நீ தொழப்படுகிறாய்.
நான் மரிக்கும் மாந்தன், இறப்புக்கு உட்பட்டவன்தான்.
எனினும் உன்னைப்போல நானும்
இறப்பற்றவனாக இருக்கக் கூடாதா? (இருக் 8)

தெய்வீகப் பெரு மகிழ்ச்சி நிறைந்த இடம் விண்ணகம்
இருண்மை என்பதே கிடையாது அங்கே.
எந்த ஓர் எண்ணமும், ஆசையும், கோரிக்கையும்
நிறைவேறுமிடம் அது.
ஆன்மிக விடுதலை பெற்று, வற்றாத மகிழ்ச்சி வாழும்
இடம் அது.
ஒளிக்கு மூல முதலாகிய ஒளிமயமான இறைவனின்
அருளைப்பெற என் மனம் அவனை நாடட்டும்.
ஓ மனமே, ஓடோடிச் சென்று நிலைத்த பேரின்பத்தின்
பிறப்பிடத்தை அடைந்திடுவாய். (இருக் 9)



அழிவில்லாத நிலைத்த மகிழ்ச்சிக்கு வழிகாட்டுகிற
ஒளியின்பால் என்னை அழைத்துச் செல்வாய்.
ஒளிப்பெருக்கைத் தோற்றுவிக்கும் ஒளிமயமான
தேவனின்பால் என்மனம் செல்லட்டும்.
ஓ, மனமே ஓடோடிச் சென்று நிலையான பேரின்பத்தின்
பிறப்பிடத்தை அடைந்திடுவாய். (இருக் 9)

எந்த இடத்தில் தலைவனின் அன்பும் அதன் தூய்மையும்
ஆட்சி புரிகின்றனவோ, அந்த உலகில்
எனக்கு இறப்பற்ற வாழ்வளித்திடுவாய்.
அந்த இடத்திற்கு முன்னால் துறக்கமேகூட
ஒரு சிறைச்சாலைதான்.
நல்ல பணிகள் அங்குத் தடையில்லாமல்
நடந்து கொண்டிருக்கின்றன.
ஓ, மனமே ஓடோடிச் சென்று நிலையான பேரின்பத்தின்
பிறப்பிடத்தை அடைந்திடுவாய். (இருக் 9)

விண்ணகத்தைக் காட்டிலும் ஒளிமிகுந்ததும்
நிலைத்த மகிழ்ச்சி நிலவுவதுமான அந்த இடத்தில்
எண்ணம், செயல் இரண்டிலுமே முழு உரிமை உள்ளது.
அங்கு வாழ்பவர்களின் உள்ளத்தில்
நிரந்தர ஒளி குடி கொண்டுள்ளது.
ஓ, மனமே, ஓடோடிச் சென்று நிலையான பேரின்பத்தின்
பிறப்பிடத்தை அடைந்திடுவோம். (இருக் 9)

அது ஒரு தனிஉலகம் நிலையான மகிழ்ச்சி
குடி கொண்டுள்ள இடம் அது.
மகிழ்ச்சி, இறையருள் இவற்றின் உறைவிடம் அது.



விரும்புகிற பொருள்களெல்லாம் கிடைக்குமிடம்,
எண்ணுகிற எண்ணங்களெல்லாம் நிறைவேறுமிடம் அது.
ஓ, மனமே, ஓடோடிச் சென்று நிலையான
பேரின்பத்தின் பிறப்பிடத்தை அடைந்திடுவோம்.
(இருக் 9)

மண்ணகமே மாந்தனின் விண்ணகம்.
நாம் வாழும் உலகமே மற்றயாவற்றையும் விட
நமது மனத்துக்கு உகந்தது.
இயற்கையின் அருள் வளங்களெல்லாம் செழித்துக்
கொழித்து நிறைந்தது அது.
மகிழ்ச்சியுடன் இரு.
உனக்கு வகுத்திருக்கும் வாழ்நாள் காலத்திற்குமுன்
மாண்டு விடாதே.
பிறந்தனவெல்லாம் ஒருநாள்
இறக்கவேண்டியவையே என்பதை நினைவில் கொள்.
ஆனால், உன் காலம் முடியுமுன்
ஆயிரம் தடவை இறந்து விடாதே. (அதர் 5)

அச்சம் அடையாதே மனிதர்கள், பறவைகள்,
விலங்கினங்கள் யாவையுமே இறப்புக்குட்பட்டவை.
ஆயினும் உன்னை நான் சாவின் பிடியிலிருந்து
காப்பாற்றுகிறேன்.
பயப்படாதே மனிதா, என்னை நம்பு
நீ இறக்கமாட்டாய்,
உனக்கு மனச்சோர்வில்லை. (அதர் 8)

இறப்பே, இறைபக்தி உடையவர்கள் செல்லும்
நெறியிலிருந்து விலகி உனது



அழிவுப் பாதையிலேயே செல்.
நான் பேசுவது கண்ணும் காதும் உள்ளவர்களிடம்,
பார்ப்பவர்கள், கேட்பவர்களிடமும் தான்.
இறைவனின் வாழ்த்துப் பெற்ற, அன்புள்ளம் கொண்ட,
நுண்ணறிவுள்ள மக்கள் நம்மைச் சுற்றிலும்
ஏராளமானவர் உள்ளனர்.
அவர்களுக்காகவே எழுப்பப்பட்டது இந்த மேட்டுநிலம்,
இறைவனின் அருள்பெற்று
அவர்கள் முழு வாழ்வு வாழட்டும். (அதர் 12)

மேலான வரம் அருளும் மூவுலகின்
தாயின் தாள் பணிகிறோம்,
எங்கள் உடலினின்று நீங்கும் ஆன்மாவின் பிரிவு
முழுமையான விடுதலைக்கு அடிவைப்பாகட்டும்.
காம்பிலிருந்து பிரித்தெடுக்கப்படும்
வெள்ளரிப் பழம் போல,
இறப்பின் பிடியிலிருந்து எங்கள் ஆன்மாவை
அவள் விடுவிக்கட்டும்.
எங்கள் இறப்பு இறவாமைக்குப் படிக்கல்லாகட்டும்.
(அதர் 14)

இறவாமையை அடைய முற்படும் நீ
தெரிந்து கொள்ள வேண்டியது ஒன்று உண்டு.
இறைவனிடம் முழு ஈடுபாடும், முழுப் புகலடைவுமே
இறவாமை என்ற நிலைக்கு உன்னை உயர்த்தும்.
இறப்பின்மையின் குழந்தையே நீ என்பதை
நினைவு படுத்திக் கொள்வாய். (அதர் 15)



தலைவனே, பிறப்பு, இறப்பு ஆகிய நிழல்களிலிருந்து எங்கள் ஆன்மாக்களை விடுவிப்பாய்.
இறவாமை என்கிற நிலையை அடையவேண்டும் என்கிற ஆர்வத்திலிருந்தன்று. (யசுர் 3)

துன்புறுகின்ற இந்த உடல் சார்ந்த ஆசைகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்திட எனக்கு உதவிடுவாய்,
இறைவா. அழிவில்லாத இறையன்பின் அமுதத்தைப் பருக என்னைத் தகுதியுடையவனாக்குவாய். (யசுர் 7)







## மனித உயிர்

அழகான சிறகுகளுடன் கூடிய கடவுள், உள்ளுயிர்
ஆகிய இரண்டு பறவைகள்
ஒரே மரத்தில் அன்புடன் இணைந்து அமர்ந்திருந்தன.
அவற்றில் உயிர் பழங்களைச் சுவை பார்த்து மகிழ்கிறது.
பழங்களைக் சுவைக்காமலே
மகிழ்ச்சியோடிருக்கிறான் கடவுள். (இருக் 1)

ஒளிமயமான ஆற்றல் படைத்த ஆன்மாவின் வீர தீரச்
செயல்களை ஏற்றுக்கொள்ளும் பக்குவத்தை
எனக்கருள்வாய்.
மூட நம்பிக்கை, இருண்மையான எண்ணங்கள்
என்கிற முகில் திரையை அகற்றி இடர்களைக் கடக்கும்
மெய்யறிவை இறைவன் அருள்கிறான். (இருக் 1)

இறைவன் மனிதனின் வல்லமையை மெய்சார்ந்த,
மனம் சார்ந்த ஆன்மிகம், ஆகிய
மூன்று வழிகளில் முறைபடுத்துகிறான்.



அவனுடைய மனத்திடத்தை அதிகரித்து கீழ்நிலையான
உடல்சார்ந்த ஆசைகளை அடங்கச் செய்கிறான்.
(இருக் 1)

ஆன்மா உறுதியுடனிருக்கும்போது கீழான உணர்ச்சிகள்,
புலர்ந்த எண்ணங்கள் ஆகிய கீழ்நிலை உணர்வுகள்
நமக்குக் கெடுதல் இழைக்கமுடியாது.
நமக்கும் போட்டியின் முடிவில் ஆன்மாவே தீய சக்திகளை
முறியடித்து வெற்றி காண்கிறது. (இருக் 1)

இயங்குதிணை இயங்காத்திணை, நமது உணர்ச்சிகள்,
எழுச்சிகள் வெற்றி கொண்டு,
பலம் பொருந்திய ஆன்மிக ஆற்றலைப் படைத்த
ஆன்மாவே தனிப் பேரரசாக விளங்குகிறது.
மக்கள் யாவருக்கும் ஒரே தலைவன் இறைவனே.
ஆழியின் ஆரக்கால்களையெல்லாம்
தன்னுள் அடக்கி வைத்திருக்கும் வட்டம் போலச்
செயல்கள் யாவும் அவனுடைய
ஆளுகைக்கு உட்பட்டவையே. (இருக் 1)

ஆன்மிக ஆற்றல் பெற்று உள்ளுயிர் தனது பெருமிதமான
ஆற்றலினால் எதிரிகள் யாவரையும் முறியடிக்கிறது.
கருவறைகளைத் தகர்த்தெறிந்து
மூட நம்பிக்கைகளின் நெஞ்சத்தை அடைகிறது,
தீய ஆற்றல்களை வேரறுத்து
வெற்றிக் களிப்பில் ஆழ்ந்து நிற்கிறது. (இருக் 1)



எங்கள் ஆன்மாவுடன் சேர்ந்து தொலைவிலிருக்கும்
நாங்கள் புகழ், அறிவுக் கூர்மை, அச்சமின்மை ஆகிய
தன்மைகளை உன்னிடம் வேண்டி நிற்கிறோம்.
கெட்ட எண்ணங்களிலிருந்து மீளும் நோக்குடன்.
முன்னேற்றம், சீரிய தன்மைகளைக் குறிக்கோளாக
முன்வைக்கப்பட்டு நமது வல்லமை வெளிப்படட்டும்.
(இருக் 1)

தேவியின் கடைக்கண் அருள்பெற, அத்தனை
உயிரினங்களும் காத்து நிற்கின்றன.
உன்மனம் ஒளிபெறும்போது, தெய்வீக ஒளி எதிரிகளைத்
தொலைவிலேயே தடுத்து நிறுத்திவிடுகிறது.
(இருக் 1)

இறைவன் அருள்பெற்ற ஆன்மாவே,
தீயவர்களையும் தீய எண்ணங்களையும்
உனது கூரிய நுண்ணறிவு பலத்தினால்
தனித்திருந்தே வெற்றி கொள்கிறாய்.
அவற்றினிடத்தில் உயர்ந்த மதிப்பிற்குரிய நல்லவர்களையும்,
நல்ல எண்ணங்களையும் இடம்பெறச் செய்கிறாய்.
எளிமையான உயர்ந்த நோக்கங்களின் துணைகொண்டு
உனது வலிமையினால் நிலையற்ற புல்லறிவுக்
கோட்டைகளைத் தகர்த்தெரிகிறாய். (இருக் 1)

அருள்பெற்ற ஆன்மாவே, வழி தவறும் புலன்களை
உன் ஆற்றலினால் வென்று,
அவற்றை நெறிப்படுத்தி உன் ஆளுமையை நிலை
நிறுத்துகிறாய். அசைக்கமுடியாத உன் உறுதியுடன் அறம்



என்கிற படையைக் கைக்கொண்டு அழிக்கும்
வன் பேராசைகளை அடக்கி வெற்றி கொள்கிறாய்.
(இருக் 1)

உனது தெய்வீகத் தன்மை மற்றெல்லா ஆற்றல்களையும்
விட வலிமை வாய்ந்தது.
செல்வத்தில் உன்னை விஞ்சுகிறவர்கள் மீதும்
நீ ஆட்சி செலுத்துகிறாய்.
இருட்டின் வல்லமைகளை முறியடிக்கிறாய்.
உனது இயல்பான ஆற்றல்,
தேடிக்கொண்ட பெருமை ஆகியவற்றால்,
புலன் வல்லமைகளை விடவும் மேலான
நிலையை நீ அடைகிறாய். (இருக் 1)

மரத்தில் வாழ்கின்ற பறவைகள்
மரத்திற்கே திரும்புகின்றன.
அங்கு அந்தப் பறவைகள் பழங்களைச் சுவைத்து
எவ்வளவு இனிப்பு என்று பேசிக் கொள்கின்றன.
ஆனால் கடவுளை உணராதவன்
அன்பார்வம் என்கிற பழச்சுவையை அறியமாட்டான்.
(இருக் 1)

உள்ளுயிர் அழிவற்றது.
அழியும் உடல் ஒவ்வொன்றும் முன் வினைகளுக்கு
ஏற்ப ஆன்மாவினால் ஊட்டம் பெறுகின்றது. (இருக் 1)



ஆன்மா என்கிற இறைவன் உடலில் உயிர் பெறுகிறான்.
ஆனால் அது அவனுக்குத் தெரிவதில்லை.
பார்க்கிறவன் அதனின்று மறைக்கப்பட்டுள்ளான்.
தாயின் கருப்பையில் உயிர் ஒரு சேர
இழைக்கப்பட்டிருக்கிறது.
ஆன்மா பல பிறவிகளுக்குட்பட்டது. இறுதியில் அது
அழிவற்ற நிலையில் ஒன்றி விடுகிறது. (இருக் 1)

அழியும் உடலுடன் தொடர்புள்ள அழிவற்ற ஆன்மா
முன்வினைப் பயன்களின் காரணமாக
மீண்டும் பிறப்பு, மறுபடி, பிறப்பு என்று
இடைவிடாத நிலையை எடுத்துக் கொள்கிறது.
அவை இரண்டும் எப்போதும் எங்குச் சென்றாலும்
ஒன்றாகவே செல்கின்றன.
உடல் தொடர்பற்ற ஒன்றை மானிடர்களாகிய
நாம் புரிந்து கொள்கிறோம்.
ஆனால், உடலிலிருந்து வேறான ஆன்மாவைப்
புரிந்து கொள்வதில்லை. (இருக் 1)

ஒளிவீசும் 'தான்" என்கிற உரு, பிறந்தவுடன் மற்ற
இயல்புகளிலிருந்து தனித்து நிற்கிறது.
தனது ஆற்றலின் காரணமாக உடல், மனம் என்கிற
இரட்டை அமைப்புச் சிறப்பாகவே செயல்படுகிறது.
(இருக் 2)



அல்லல் படும் உடலை நிலை நிறுத்தும் மின்கதிர் போல்
ஒளிரும் ஆன்மா.
கிளர்த்தெழும் புலன்களைச் சமன் படுத்துகிறது.
இடைப்பகுதியை அளந்தெடுத்துத்
தெய்வீகம் கமழும் மன அமைதியை அளிக்கிறது.
(இருக் 2)

தேனினும் இனிய ஆன்மிக அருளால் மகிழ்வின்பமுற்று
ஆன்மா அசைக்க முடியாத மன உறுதியை
கைக்கொள்கிறது.
நஞ்சு போன்ற கீழ்நிலையான எண்ணங்களை
ஒடுக்கி வைக்கிறது.
பறவைகள் தங்கள் தங்கள் கூட்டை நோக்கி விரையும்
சமயத்தில் இந்தப் பேரின்ப நலம் இழைந்தோடுகிறது.
(இருக் 2)

சிறு மனப்பான்மை, பேராசை, தீய எண்ணம் ஆகிய
கீழான குணங்களையெல்லாம்
திறமை வாய்ந்த ஆன்மா அழித்துவிடுகிறது.
(இருக் 2)

மன வளம்பெற்ற இறைவன், குறுகிய மனப்பான்மை,
பேராசை, கெட்ட எண்ணம் ஆகியவற்றை அழிக்கிறான்.
பத்தர்களும், அறிவாளிகளும் நலம்பெற,
வன்குணங்களை அகற்றுகிறான். (இருக் 2)

உள்மனமே, உன்குரல், தெளிவாகவும் உரத்தும்
இருக்கட்டும்.



த.கோ - தி.ஸ்ரீ

வாழ்க்கைப் படகின் துடுப்புகளாய் இருப்பாய்.
இடையூறுகளைக் கடந்து வாழ்க்கையாகிற
கொந்தளிக்கும் கடலினூடே சென்று
எங்களைக் கரை சேர்ப்பாய். (இருக் 2)

ஆறுகள் ஆழியை நிறைப்பது போல்
உணர்புலன்கள் தூய்மையற்றவற்றைக் களைந்து,
மகிழ்ச்சியைத் தேக்கி, அதை இறைவனுக்குக்
காணிக்கையாக எடுத்துச் செல்லட்டும். (இருக் 3)



# தோழமை

அண்டம் சார்ந்த ஆன்மாவுடன் இணைந்திடு..
இதுவே உனது மனத்தில் வைத்துள்ள முடிவான
ஆசையாய் இருக்கட்டும்.
இதுவே உனது கடைசி வழிபாடாக இருக்கட்டும்.
உனது தனித் தன்மையை உதறித் தள்ளிவிட்டு
உலகமளாவிய நிலையில் உன்னை
ஒருமைப்படுத்திக்கொள்.
தொலைவு என்கிற எண்ணம் வேண்டா,
எந்தவிதமான வேறுபாடும் பாராட்ட வேண்டா.
உடலிலுள்ள ஒவ்வோர் உறுப்பும் ஒரே உலகம் என்ற
எண்ணத்தில் எழும் வாழ்க்கையின் ஒரு பகுதியே.
படைப்பு என்பது
படைப்பாளியின் நிழலைத்தவிர வேறில்லை.
மனித முயற்சிகளின் ஒட்டுமொத்தமான பயன்தான்
ஒற்றுமை காணும் பட்டறிவு. (இருக் 8)



## உள்மனத்தின் எழுச்சி ஆர்வம்

இறைவனின் கோவில்தான் மனித உடல்.
உள்ளே உறைந்திருக்கும் புரிதலாகிய திரியைத்
தூண்டி விடுபவன்.
உண்மையாகிற ஒளியைப் பெறுகிறான்.
மனத்தை ஒருமுகப் படுத்துவதன் மூலம்
உள்ளொளி மலர்ச்சி அடைகிறது.
மனத்தை தூய்மையாக வைத்துக் கொள்ளாதவர்களுக்கு
வாழ்க்கையில் மகிழ்ச்சி கிடைப்பதில்லை.
காலமெல்லாம் மனத்தை விழிப்புடன்
வைத்திருப்பவனுக்கு வாழ்க்கையின் மறைபுதிர்கள்
புரிய வைக்கப்படுகின்றன.
உனது உள்ளக் கோவிலில் குடிகொண்டிருக்கும் புனிதச்
செந்தீச் சுடர் என்றும் பேரொளியாகச் சுடர் விடட்டும்.

(இருக் 8)





நுண்ணறிவாகிய சகடத்திற்கு
வேகமளிப்பது ஒளி வீசும் ஆன்மாவே
இன்றியமையாத புலன்களை அடக்கி யாண்டு உள்மனப்
போராட்டங்களிலிருந்து அவற்றைக் காப்பாற்றுகிறது.
மனக்குழப்பம், தடுமாற்றம் ஆகிய இருள் முகில்களுக்கு
இடமளிக்கிற பொழுது,
உடல் ஆற்றல் மனத் திண்மை இவற்றிற்கிடையே
சில சமயங்களில் முரண்பாடு தோன்றுகிறது.
அப்பொழுதெல்லாம் உள்ளொளி கொண்ட ஆன்மா
வழிகாட்டியாக மாற்றம் கொள்கிறது. (இருக் 4)

இயல்பாகவே ஆற்றலுள்ள நுண்ணறிவு மனதும்கூட
ஆன்மாவிற்கு அடிபணிந்து நடக்கிறது.
அடங்கி நடக்கிற மனைவிபோல உடலும் ஆன்மாவின்
கட்டளைக் கேற்பவே நடந்து கொள்கிறது.
அதன் வல்லமையை ஆன்மா
மற்ற உறுப்புகளுடன் பகிர்ந்து கொள்கிறது.
அவையும் ஆன்மாவிற்கு மதிப்பளிக்கின்றன. (இருக் 5)

இறைவன் வழங்கிய ஆன்மிக மகிழ்ச்சியாகிற
அமுதத்தை ஆன்மா சுவைத்துப் பார்க்கிறது.
பருந்து தனது இரையைக் கீறி எறிவதைப்போல்
ஆன்மா காமவெறியின் தலையை வெட்டி எறிகிறது.
தவறிழைக்கும் மனதிற்குக் கருணை காட்டி
ஆன்மா பாதுகாப்பளிக்கிறது.
புகழீட்டிட மனிதனுக்குத் தகுதியை அளிக்கிறது
(இருக் 6)





## ஆன்மிகத்தில் ஒழுக்கம்

என் கண்கள் உன்னைத் காணுமாறு
நாம் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வோம்.
என் நெஞ்சத்தில் குடிகொண்டிருக்கும் தெய்வீக ஒளி
உன்னைப்பற்றி அறிந்து கொள்ள விருப்பம் கொள்கிறது.
தொலைவிலுள்ள பொருள்களுக்கும் இடமளிக்கிற
என் மனம் அவனைக் காணத் துடிக்கிறது.
நான் என்ன பேசப் போகிறேன்?
நான் எவ்வாறு அவனைப் புரிந்து கொள்ளமுடியும்?
(இருக் 6)

மற்றவர்கள் பின் பற்றிய அதே வழித் தடத்திலேதான்
பெருவாரியான மக்கள் செல்கின்றனர்.
தங்களுக்கென்று தனிப்பாதை வகுத்துக் கொள்ள
வெகு சிலரே துணிகிறார்கள். (இருக் 9)





ஊருக்குப் புதியவன் உள்ளூர்க்காரனை வழி கேட்கிறான்.
அவன் காட்டிய வழியில் தன் பயணத்தைத் தொடர்கிறான்.
பின்பற்ற வேண்டிய முறை இதுதான்.
இதன் பயனாக நாம் சரியான வழியைத்
தேர்ந்தெடுக்க முடிகிறது. (இருக் 10)

தெய்வீக மெய்யறிவு பெற்ற, ஆன்மிகப் பயிற்சி பெற்ற
மாணவர் புரியும் செயல்கள்
இரு உலகையும் பலப் படுத்துகின்றன.
தெய்வீக ஆற்றல்கள் யாவும் தனது குறிக்கோளில்
அவன் வெற்றி பெற வாழ்த்துகின்றன.
மண்ணகம், விண்ணகம் இரண்டினுடைய
பண்பு நலன்களை அவன் பின்பற்றுகிறான்.
முனிவர்களின் எளிய வாழ்க்கை முறையைக் கடைப்பிடித்து
தெய்வீக ஆசானை நிறைவுறச் செய்கிறான். (அதர் 11)

எவ்வாறு ஒரு தாய் தன் குழந்தையை அரவணைத்துத்
தன் கருவில் சுமக்கிறாளோ,
அதே போன்று ஆன்மிக ஆசான், தன் மாணாக்கர்களுக்குக்
கற்பிக்கும் பொழுது தன் அன்பு உள்ளத்தில்
அவனுக்கு இடமளிக்கிறார்.
அதன் பின்னர் தெய்வீக ஆற்றல்களை யெல்லாம் அந்த
மாணாக்கனுக்கு அருள் செய்திட வாழ்த்துக் கூறுகிறார்.
(அதர் 11)

ஆன்மிகப் பயிற்சியையே நோக்கமாகக் கொண்ட இந்த
புனித வேள்வியில், நிலம், வான், நடுவெளி, ஆகியவற்றின்
தெய்வீகத் தன்மைகள் ஆன்மிகப்பயிற்சிக்கு இட்டுச்





செல்லும் பாதைக்கு ஒளியூட்டுகின்றன.
மாணாக்கன் தனது எளிய வாழ்க்கை முறை, கல்வி,
கடும் உழைப்பு ஆகியவற்றின் துணை கொண்டு
நானில ஆற்றல்கள், மற்றும் பிறருக்குப் பணிவிடை
செய்கிறான், மரியாதை காட்டுகிறான். (அதர் 11)

திடமான உள்ளத்தின் மூலம் ஆற்றலைத் தேடுபவன்
புனிதமடைகிறான்.
புனிதம் அடக்கத்தை அளிக்கிறது.
அடக்கம் பெருமதிப்பையும், நம்பிக்கையையும்
பெற்றுத் தருகிறது.
நம்பிக்கை மூலம் கிடைப்பதுதான் மெய்மையை அறிதல்,
உண்மையை அடைவதற்கான வழி இதுதான்.
(யசுர் 19)

எல்லாவற்றையும் உண்டு முடிப்பது எது?
உண்டு முடித்தது அத்தனையையும்
உமிழ்ந்து காட்டுவது எது?
அதன் வழியை விரைவாகக் கடந்து செல்பவன் யார்?
ஊர்ந்து சென்று அந்த வழியைக் கடந்து செல்வது எவர்?
தேவனே, எனக்கு விடை கூறுவாய். (யசுர் 23)

முடிவு நெருங்கிய காலத்தில் இயற்கை ஆற்றல்
உலகை விழுங்கி விடுகிறது.
படைப்பின் தொடக்க வேளையில் இயற்கை ஆற்றல்
உலகை உமிழ்ந்து விடுகிறது.
பின்னர் உலகை மறுபடியும் படைக்கிறது.





அறிவாளிகள் இந்தப் பாதையை
எளிதாய்க் கடந்து செல்கின்றனர்.
அறிவிலிகள் பாம்பைப்போல்
வளைந்து வளைந்து கடக்கின்றனர். (யசுர் 23)

நான் அவனைக் கண்டிருக்கிறேன்,
எல்லோருமே அவனைக் காணலாம்.
நிலத்துக்குமேல் தவழ்ந்து செல்லும் அவனுடைய
தெய்வீகத் தேரை நான் காண்கிறேன்.
வழிபாட்டுப் பண்களை அவன் ஏற்றுக்கொண்டு விட்டான்
என்பது எனக்கு நன்றாகவே புலப்படுகிறது. (இருக் 1)

கெடுதிகளிலிருந்து எங்களைக் காப்பாற்றும்
ஆடாமல் அசையாமல்
ஒளிவிடும் பேரொளி எங்களைச் சூழ்ந்திருப்பதாக
உணர்கிறோம். (யசுர் 2)

இந்த இணையற்ற ஒளியும் மகிழ்ச்சியும் எங்களுடன்
நிலையாகத் தங்கியிருக்கும் என்று உணர்கிறோம்.
(யசுர்)

இறைவா,.
இந்தத் தெய்வீகப் பேரின்பத்தில் நாங்கள் என்றென்றும்
திளைத்திருக்க நீ கருணை புரிந்திடுவாய். (யசுர் 2)

மனித குலத்திற்குச் சேவை புரிந்து இறையன்பு கிட்டும்
அளவிற்கு அவர்களை ஓங்கி உயர்ந்திடச் செய்ய
நாங்கள் உறுதி எடுத்துக் கொள்கிறோம். (யசுர் 5)



நடைமுறை உலகின் பிடியிலிருந்து விடுபட்டு
மண்ணகத்தின் கொடுமுடியை அடைந்து விட்டேன்;
அங்கிருந்து நடுவானை எட்டுகிறேன்.
பின்னர் அங்கிருந்து விண்ணகத்திற்குச் செல்கிறேன்.
இப்பொழுது நான் மட்டற்ற மகிழ்ச்சிக் கடலில்
திளைத்து நிற்கிறேன். (அதர் 4)

உண்மையைத் தேடுபவனே,
உன் ஆன்மாவின் நிலையைப் புரிந்து கொண்டு
அதனுடன் முழுவதுமாக ஒன்றியிரு. (யசுர் 8)

எனது புரிதல் சிறப்பானதாகவும் முழுமையானதாகவும்
இருக்கட்டும்,
செஞ்ஞாயிற்றைப் போன்று ஒளி வீசட்டும்.
(இருக் 10)

நன்குணர்ந்த முனிவர் கூறுகிறார்:
என் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பியுள்ளது
பொருளாசை எனக்கில்லை, புகழாசையும் தான்.
(இருக் 10)

இருண்மையின் எல்லையைக் கடந்து நிற்கும் விரிந்து
பரந்த பேரொளியை நான் அறிவேன். (யசுர் 31)

உண்மையைத் தேடுகிறவன் தனது விடாமுயற்சியால்
உயர்ந்த நிலையை அடைகிறான்.
புகழின் உச்சத்தை எட்டி செம்பருதிபோல்
ஒளிவீசி நிற்கிறான். (அதர் 13)



இயல்பாகவே நான் அமைதியை விரும்புகிறவன்.
உண்மையை அறிய விருப்பம் ஆர்வம்
என் ஆன்மாவிற்கு என்றுமே இருக்கட்டும்.
என் ஆன்மா ஒரு பொழுதும் தண்மை
(அமைதி)யை இழக்கக் கூடாது. (அதர் 16)









# அடிமைத் தளையும் விடுதலையும்

ஆன்மிகப் பேரின்ப நிலையை அடையும் பொழுது
மனிதனுடைய ஆன்மா உடல் தொடர்புடைய
அடிமைத் தளையிலிருந்து விடுபட்டுத் தெய்வீக
நிலையையும் மிஞ்சி நிற்கிறது. (இருக் 10)

பிரமத்துடன் ஒன்றிவிடுவதே முழுநிறை விடுதலை.
(அதர் 7)

நல்லது தீயது என்று பகுத்தறிந்து,
நல்லதையே தேர்ந்தெடுக்கும் உண்மையான அன்பர்கள்
பிறப்பு, மறுபிறப்பு, என்கிற நிலையிலிருந்து
விடுபடுகிறார்கள். (இருக் 4)

ஆயிரக்கனக்கான அடிமை நிலைகளை மனிதன்
தனக்குத் தானே ஏற்படுத்திக் கொள்கிறான்.
(இருக் 5)





குணக்குன்றே, அடுத்தடுத்து வருகின்ற பற்றிலிருந்தும்
உறவுகளிலிருந்தும் எங்களை விடுவித்து,
உடல் முழுவதையும் பிணைத்திருக்கிற
கட்டுகளைத் தளர்த்திடுவாய்.
என்றும் வாழ்ந்து கொண்டிருக்கிற அன்னையே, எங்கும்
நிறைந்திருக்கிற செம்பொருளே,
எங்களிடம் அன்பு காட்டுவாய்.
அவர்களுடைய தாய்ப்பற்று, அன்பு இவற்றின் கீழ்
மேலும் நாங்கள் பாவம் புரியாதவர்களாக
இருக்க வேண்டும். (அதர் 7)





## கடைத்தேற்றம் - பேரின்பப் பேறு

இறைவனுடைய தண்டனை அளிக்கும் ஆற்றலுக்கு
மதிப்பை அளி,
அது பிறப்பு, இறப்பு என்கிற நிலைகளைக் கூர்மையான
வாள் முனையின் மூலம் வெட்டி எறிகின்றது.
ஈரமான அன்புணர்வுகள்' கூரிய முனையுள்ள வாளின்
அடித்தளத்தில் மறைந்துள்ளன.
ஆசைகள், தூண்டுதல்கள், என்கிற பிணைப்பிலிருந்து
அது நம்மை விடுவிக்கிறது.
நேர்பாதையில் நம்மை வழி நடத்திச் செல்கிறது.
துடிக்கும் வலியளிக்கும் வாளின் கூரிய முனை
வாழ்க்கைச் சிக்கல்களாகிற முடிச்சை வெட்டி எறிகிறது.
காலனுக்கு நன்றி செலுத்து,
இறப்பளிக்கும் நோக்கம் பேரின்பப் பேறாகிறது.

(இருக் 6)



## வேட்கை

அளவற்ற செல்வம் மனிதனை
பேராசைக்கு இட்டுச் செல்கிறது;
இறுதியில் புலனின்பங்ளுக்கு அடிமையாக்குகிறது;
உள்ளொளியை அழித்துப்
புறச்சிந்தனையாளனாக மனிதனை மாற்றிவிடுகிறது.
நிறைவேறாத ஆசைகள் துயரத்திற்கு வழிவகுக்கின்றன.
ஆசைகள் நிறைவேறி விட்டால் பேராசை
தலை தூக்குகிறது.
ஆழம் காணமுடியாத கடல்போல் செல்வம் குவிந்திருக்கும்
போதும் மனிதன் தண்ணீருக்குத் தவிக்கிறான்.
செல்வமாகிற கொந்தளிக்கும் அலைகள் மாந்தனைச்
சுற்றிச் சூழ்ந்து கொண்டு
அவனது உணர்வுகளை அமுத்துகின்றன.
அவன் தன் ஆன்ம வேட்கையைத்
தணித்துக் கொள்ள முடிவதில்லை.
அமைதியாகிற நீரைத்தேடி அலைகிறான்.





ஆனால் அவனுடைய முயற்சிகள் பலனளிப்பதில்லை.
கடைசியில் தன் ஆசை நிறைவேறக் கடவுளின்
ஒரு துளி அன்பிற்காக வேண்டுகிறான்.
"அழித்தொழிக்கும் பொறிபுலனின்
இன் நலன்களைக் களைந்து
என்றும் நிலைத்திருக்கும் நிறைவை அருள்வாய்," என்று
இறைவனிடம் இறைஞ்சுகிறான். (இருக் 7)









## முற்றுணர்ந்த முனிவர்கள்

படைக்கும் ஆற்றல்பெற்ற அறிவுத்திறன் கொண்ட
அருளாளர்கள் அழகான இறக்கைகள் படைத்த
பறவைகள் போல்
தங்கள் வாழ்க்கையை இறைபணிக்கே தந்துவக்கட்டும்.
(இருக் 10)

உயர்ந்த நிலையை அடைய எண்ணும் தவயோகியர்
எடுத்த செயலில் முழு மனத்துடனும் அன்பின்
ஊற்றத்துடனும் ஈடுபடுகின்றனர்.
ஊற்றத்துடன் தம்தம் பணியில் ஈடுபட
மக்களை ஊக்குவிக்கிறார்கள்.
சமூகங்களும், தேசங்களும் இந்த முறையில்தான்
வலிமை பெறுகின்றன. (அதர் 19)

ஆசைகளைத் துறந்து, அன்பூற்றினில் திளைக்கும்,
உந்துதல் பெற்ற இந்த முனிவர்கள்
நிறைந்த புகழையும் நிலையான மன நிறைவையும்
பெறுகிறார்கள். (சாம 92





இறைவா, என்னையும் உன்னையும் போன்றே திண்ணிய
மனமுடையவனாகவும் முற்றுணரும்
நுண்ணறிவுள்ளவளாகவும் ஆக்குவாய்.
யாவரும் என்னை நட்புக்கண்ணுடனும், அதே போன்று
நானும் அவர்களை நட்புக் கண்ணுடனும்
பார்க்க அருள் புரிந்திடுவாய்.
எங்களிடையே முழுமையான இணக்கம் ஏற்படட்டும்.
(யசுர் 36)

எவனொருவன் யாவரையும் மிகவும் விரும்புகிறானோ,
அவன் அந்த உயிரினங்கள் யாவற்றிலும்
தன்னில் ஒரு பகுதியையே காண்கிறான்.
எவன் தன்னை உலகளாவிய ஆன்மாவின் ஒரு
பகுதியாகக் கருதுகின்றானோ,
அவன் எவரையும் தாழ்வாக எண்ணுவதில்லை,
அத்தகையவன் எவரையும் வெறுப்பதில்லை.
தானும் வெறுப்பு, மனக்கவலை, வருத்தம், ஆகிய
உணர்ச்சிகளுக்கு அடிமைப் படுவதில்லை.
யாவரையும் விரும்புபவனாக மாறுகிறான்.
மகிழ்ச்சியாகிற நீரோட்டத்தில் மிதந்து செல்கிறான்.
தன்னை விரும்பும் ஒவ்வோர்
ஆன்மாவினாலும் வளமை பெறுகிறான். (யசுர் 40)

மெய்யறிவு பெற்ற எந்தப் பற்றுடையவனொருவன்
பணிவன்புடன் தன் பணிகளைச் செய்கிறானோ,
அவன் கடவுளால் வாழ்த்துதலைப் பெறுகிறான்.
உலகின் பரந்த தொடுவானம் இறைவனின்



ஒளிவெள்ளத்தால் நிறைவு பெறுகிறது என்பதை
அவன் உணர்கிறான்
இவ்வாறு ஆழ்ந்தெண்ணும் மனம் மிகவும் உயர்ந்தது.
(இருக் 1)

தங்களுடைய வறள் நிலத்தில் மெய்யறிவு மிகுந்த
முனிவர்கள் முதல் ஆண்டில் சிறப்பான விதை விதைத்து
செழிப்பாக்குகிறார்கள்.
மேலும் உழைத்துப் பெயரும் புகழும் பெறுவதற்காக
விளைச்சலை அதிகப் படுத்துகிறார்கள். (இருக் 4)



# உழைப்பைப் போற்றும் புகழ்ப் பாடல்கள்

உலக மக்களே ஒற்றுமையுடன் வாழுங்கள்.
கட்டுப்பாட்டைக் காத்து ஒருவருக்கொருவர்
ஒத்துழைப்பைத் தாருங்கள்.
ஒரே குரல் எழுப்புங்கள்,
ஒரு மனமாகத் தீர்மானங்களை நிறைவேற்றுங்கள்.
நமது முன்னோர்களாகிய முனிவர்கள், தலைவர்கள்,
ஆசான்கள், நேர்மையான முறையில் தங்கள் தங்கள்
கடமைகளைச் செய்தார்கள்.
அது போன்றே நீங்களும் செயல்படுங்கள்,
நீங்கள் தவறிழைக்க மாட்டீர்கள். (இருக் 10)

# கரை சேர்தல்

உன்னுடைய கடமையைச் செய், பயனை இறைவனிடம் விட்டுவிடு. அவனது தீர்ப்பில் முழுமையான நம்பிக்கை வைத்திடு.
எரிதிடை, பகை, பூசல்களினால்
சின்னா பின்னப், படுத்தப் படுகிறது வாழ்க்கை.
வாழ்க்கைப் போராட்டமாகிய இந்த இருண்ட எழுச்சி மிக்க நீர்ச் சுழலில், இறைவன் ஒருவனே துன்பங்கள் நிறைந்த பேராழியிலிருந்து நம்மைக்
கரை சேர்க்க வல்லவன்.
அவன் ஒருவனே நாவாயின் தலைவனாயிருந்து, இறை இன்பமாகிற கரையில் சேர்க்கும் ஆற்றல் பெற்றவன்.
அவன் தலையசைப்பில் கொந்தளிக்கும்
கடலலைகள் அமைதியடைகின்றன.
ஆகவே உனது எண்ணங்களையும், ஆசைகளையும் முழு. நம்பிக்கையுடன் இறைவனுக்கு ஈந்துவந்திடு.
அவன் தனது அருளன்பினால் உனக்கு நேரிடும் இடையூறுகளை அகற்றி அருள்புரிவான்.

(இருக் 8)





## சமூக உணர்வு

நல்ல கண் பார்வையும் செவிநுட்பமும் உள்ள சிலர்
நம்மிடையே இருக்கத்தான் செய்கிறார்கள்.
ஆனால் அவர்களின் அறிவுத் திறனில் தான்
குறைபாடு உள்ளது.
சிலர் குளம், குட்டைபோல் ஒதுக்கப்
படுபவராயிருக்கிறார்கள்,
வேறு சிலர் தடாகம்போல் பரந்து விரிந்து நிற்கிறார்கள்.
(இருக் 10)

நம்மெல்லோருடைய வழிபாடுகளும்
ஒன்றாகவே இக்கட்டும்.
நாம் யாவரும் ஒரே குடும்பத்தைச்
சேர்ந்தவர்களாக இருப்போம்.
உயர்ந்த ஒரு குறிக்கோளை அடைய
நம் இதயங்கள் ஒன்று பட்டு இயங்கட்டும்.
பொதுவாக ஒரு குறிக்கோளை எட்டுதல்





நமது உந்தாற்றலாக இருக்கட்டும.
கூட்டாகச் சேர்ந்து நாங்கள் உன் புகழ் பாடுவோமாக.

(இருக் 10)

உங்கள் யாவருடைய உள்ளக் கிடக்கைகளும்
ஒரு முகமாகச் செல்லட்டும்.
உங்கள் யாவருடைய உள்ளத் துடிப்பும்
ஒரே சீராயிருக்கட்டும்.
உங்கள் உள்ளங்களில் எழுகின்ற
ஒற்றுமை நிலைக்கட்டும் என்றும்.
ஆழமான உடன்பிறப்பாண்மையும்,
ஒற்றுமையும் உங்களை ஒன்று சேர்க்கட்டும்.

(இருக் 10)

அவரவர்கள் ஈடுபட்டுள்ள துறைகளில் சிலர் உயர்ந்த
நிலையை அடைந்திருக்கலாம்,
சிலர் பொது நிலையை எட்டியிருக்கலாம்,
மற்றும் சிலர் தாழ்ந்த நிலையில் இருக்கலாம்,
ஆயினும் ஈட்டிய செல்வத்தில்
சமமாகப் பங்கு கொள்ளுங்கள்.
செழுமைப் படைப்புக்கான மூலப் பொருள்கள்
உங்களிடமே இருக்கும்போது
சமூகத்தில் மலிந்துள்ள
குறைகளைக் களைந்திடுவதிலும்,
மக்கள் நலனுக்காக எந் நேரமும் பாடுபடுவதிலும்
உங்கள் வாழ்கையை நேர்ந்தளியுங்கள்.

(இருக் 5)



மனித சமுதாயத்தில் உயர்ந்த, நடு நிலையான,
தாழ்ந்த என்கிற நிலையே கிடையாது.
ஈடுபாட்டுடன் உழைத்து, ஒவ்வொருவனும்
முன்னேற்றப் பாதையில் நடை போடுகிறான்.
நிலத்தாயின் இயற்கைச் செல்வங்களை
மக்கள் நல்வாழ்விற்குப் பயன்படுத்திக்
கூரிய அறிவுடையவர்களாயும், சிறந்த குணநலன்கள்
கொண்டவர்களுமாக உள்ள இந்த மனிதர்கள்
முன்னேற்றம் காண்கிறார்கள். (இருக் 5)

தான் ஈட்டிய பொருளைச்
சிறந்த காரியங்களுக்குச் செலவிடாமலும்
தம் நண்பர்ககளின் வளர்ச்சிக்கு உதவிடாமலும்
தன் தேவைகளை மட்டும் நிறைவு செய்து
கொள்பவனாயிருக்கிற செல்வன் தன்னலக்காரன்.
தீவினையின் கூலிதான் அவனுக்குக் கிடைக்கும்.
மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளப்படாமலும்
பயன்படுத்தப் படாமலும், ஒருவருடன் இருக்கும்
செல்வத்திற்குப் பொருள் இல்லை.
இவ்வாறு குவிக்கப்படும் செல்வம் முடிவில்
அவனுடைய அழிவிற்கே காரணமாகிறது. (இருக் 10)

ஏர் கொண்டு உழுகிற வேளாளன்
மக்களுக்காக உணவைச் செழிக்கச் செய்கிறான்.
ஒழுங்கான அடி எடுத்து வைப்பவன்தான்
தொலைவைக் கடந்து சேருமிடத்தை அடைகிறான்.



தனக்குத் தெரிந்ததை மாணவர்களுக்குக் கற்றுக்
கொடுக்கும் ஆசிரியர் அமைதி காக்கும் முனிவரைவிட
அதிகமாக மதிக்கப்படுகிறார்.
ஒரு பணக்காரப் பிசிறனைக் காட்டிலும்
தாராள மனமுடைய எளிய மனிதன்
எவ்வளவோ உயர்ந்தவன். (இருக் 10)

சமூகத்தின் அனைத்து மக்களும் பொதுவான ஒரு
குறிக்கோளை வைத்துக் கொள்ளட்டும்.
அவர்களின் நெஞ்சத்துடிப்பு
ஒரே நிலையில் இருக்கட்டும்.
அவர்கள் எண்ணங்களும் ஒரே நிலையில் இருக்கட்டும்.
இந்த நிலையில் அவர்களுடைய ஒருங்கிணைந்த
ஆற்றலும், வேறுபட்ட திறமையும், தங்கள்
இலட்சியங்களைத் திருப்தியுறும் வகையில்
அடைந்திட அவர்களுக்கு பெரிதும் உதவும். (இருக் 10)

உன் வாழ்க்கை முறையில் ஓர் ஒற்றுமையும்,
இணக்கமும் இருக்கட்டும் .
கட்டுப்பாட்டுடன் இரு. ஒத்துழைப்பவனாக இரு.
ஒரே குரல் கொடு. மன உறுதியுடன் முடிவெடு.
பழங்கால முனிவர்கள் அறிஞர்கள், தலைவர்கள்,
ஆசான்கள் ஆகியோர் தங்கள் தங்கள் கடமைகளை
எவ்வாறு அப்பழுக்கின்றி செய்து வந்தனரோ
அவ்வாறே நீயும் வழி தவறிச் செல்லாமல் உன்
கடமைகளை நன்கு செய்து முடித்திடு.

(இருக் 10)



வினைப்பயனின் சட்டத்தில் பிழை இருப்பதில்லை.
ஒதுக்கீடு கிடையாது.
நண்பர்களுடன் சேர்ந்து செய்யும் செயற்பாடுகள்
கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.
செயல்கள் அவற்றின் எதிர்விளைவுகள் ஆகியவற்றின்
முறையான கணக்கெடுப்புதான் அது.
எதைச் சமைக்கிறானோ அதையே மனிதன் உண்கிறான்.
அதாவது எதை விதைக்கிறானோ,
அதையே அறுவடை செய்திடுகிறான். (அதர் 3)

கேடு செய்யும் எண்ணத்திலிருந்து விடுபட்டு
எல்லோருடனும் நட்புணர்ச்சியுடன் பழகி
ஒற்றுமையாயிருக்க உனக்கு நான்
வாழ்த்துக் கூறுகிறேன்.
புதிதாய்ப் பிறந்த கன்றுக்குட்டியைப்
பசு விரும்புகிறாற்போல்
ஒருவரையொருவர் விரும்புங்கள். (அதர் 6)

உங்கள் எண்ண அலைகள் ஒரே சீராகயிருக்கட்டும்.
ஒரே குறிக்கோளை நோக்கிச் செல்லுங்கள்.
இடையூறுகளைக் கடக்க என் உதவி உங்களுக்கு உண்டு.
உங்கள் எண்ணங்களையும் செயல்களையும்
ஒன்றிணைக்கும் வழியை
நான் உங்களுக்குக் காட்டுகிறேன். (அதர்)

உலகத்தை விரும்பு, சமூகத்திற்கு மதிப்பளி.
பசித்தோருக்கு உணவளித்து, துன்பமுற்றோருக்கு
உதவி புரிந்து, சமூகத்திற்குப் பாதுகாப்பளி.



உயர்ந்த, நேர்மையான காரணங்களுக்காகப்
போராட நீ திறம் பெறுவாய்.
வேறுபட்ட குணம் கொண்ட வீரமுள்ள போராளிகளுடன்
தொடர்புள்ள நீயும் வலுவான படைகளைக்
கையிலெடுத்துக் கொள்.
எதிரிகளுக்கு என்றும் பணிந்துவிடாதே.
உயர்ந்த நோக்கத்தை ஆதரிப்பதில் உனது துணிவு
ஓங்கி உயர்ந்து நிற்கட்டும்.
உன் உள்ளத்தில் மறைந்திருக்கும் பெருமையைத்
தட்டி எழுப்பி, வழி தவறி அலைந்து திரியும் மக்களுக்குத்
தலைமை வகித்து வழிகாட்டிடு. (இருக்)

உங்களில் எவரொருவரும் புறக்கணிக்கக் கூடியவர் அல்லர்.
ஒருவர் கூட வல்லமையற்ற சிறு குழந்தை இல்லை.
நீங்கள் யாவரும் உண்மையிலேயே உயர்ந்தவர்கள்.
(இருக்)

எங்கு மக்களனைவரும் ஒன்றுபட்டு ஒரே
நம்பிக்கையுடன் இறைவனை வழிபடுகிறார்களோ
அந்த மக்களினத்தினர் மேல் எல்லாம் வல்ல இறைவன்
அன்புகொண்டு அருள் மாரி பொழிகிறான். (இருக்)

ஓ, மாந்தனே, உன் வாழ்க்கை முறையில்
ஒழுங்கு இருக்கட்டும்.
இயற்கை அன்னை அளித்திடும் உணவு, நீர்
ஆகியவற்றில் உங்கள் யாவருக்கும்
சம பங்கு இருக்கட்டும்.



சமூக நலனில் உங்களுடன் நானும்
கைகோர்த்துக் கொள்கிறேன்.
ஆழியின் ஆரங்கள் யாவும் மையப்படுத்தப் பட்டு
எதற்கு விரைவு அளிக்கின்றனவோ,
அதே போல் ஒற்றுமையும் சமன்மையும் முன்னேற்றப்
பாதையில் உங்களை இட்டுச் செல்லும்.

(அதர்)



# கடமையின் நெறி

செங்கதிர், வெண்கதிர் போல், தடுமாற்றம் ஏதுமின்றி,
கடமையின் நெறியில் செல்வோமாக.
சேவைக்கு ஊதியம் எதிர்பார்க்காமல் மாந்தரினத்திற்கு
என்றும் பணிபுரிந்திடுவாயாக.
பெருந்தன்மை, அன்பு, ஈகம், விருபபு, வெறுப்பு
இல்லாமை ஒத்துப்போகும் தன்மை
ஆகிய நற்குணங்களை என்றும் கடைப்பிடிப்போமாக.
அனைத்தையும் இறைவனுக்கு அளித்துவந்து விட்டு,
ஞாயிறு திங்கள் போன்று மாந்தர் இனத்துக்குப்
பணி செய்வோமாக. (இருக் 5)



# அமைதியான தன்னம்பிக்கை

வாரி வழங்கும் கொடை வள்ளலாகிய பரம்பொருள்
நமக்கு அனைத்துச் செல்வமும் வழங்கியிருக்கிறது.
அவ்வாறிருந்தும் நமது ஆன்மாவில் முழுமையில்லை
என்று எண்ணி,
மேலும் மேலும் ஆசைப்படுகிறோம்.
கடவுள் நமக்கு இணையற்ற திடம் அளித்திருக்கிறான்
அப்படியும் வலுவற்றவர்களாகவும்,
நீர்த்துப் போனவர்களாகவும்
நமக்கு நாமே எண்ணிக் கொள்கிறோம்.
வாழ்க்கைப் போராட்டங்களை அமைதியான
தன்னம்பிக்கையுடன் எதிர் கொள்ளும் வகையில்
இறைவனுடைய அன்பு நீரோட்டம் நமது நாடி நரம்பு
நாளங்கள், ஆன்மா இவற்றினுடே பாய்ந்து வரட்டும்.

(இருக் 8)



ஓ, மனித சமுதாயமே, உங்கள் யாவரையும் நான் ஒரு
குறிக்கோளோடு பிணைக்கப்போகிறேன்.
மனித நல்வாழ்வு தான் அந்தக் குறிக்கோள்.



ஒன்றிணைந்த அன்புடனும் நல்லெண்ணத்துடனும்
நீங்கள் சேர்ந்து பாடுபடுங்கள்.
இன்ப நலன்களைச் சமமாகப் பகிர்ந்து நுகருங்கள்.
மனமொன்றி உழைத்து
எடுத்த காரியத்தில் வெற்றி பெறுவீர்களாக.
உங்கள் குறிக்கோளில் வெற்றி பெற, என்றுமே
நல்லிணக்கத்துடன் ஒன்று சேர்ந்து உழைப்பீர்களாக.

(அதர் 3)

இறையருள் பெற்றவர்கள்,
தெய்வீகக் குணநலன்கள் கொண்டவர்கள்,
உலகில் தெய்வத் திருமொழிகளைப் பரவச் செய்கின்றனர்.

(இருக் 10)

எண்ணும் எண்ணங்களுக்கும் வெளிப்படும்
செயல்களுக்கும் சீரான தொடர்பு இருக்கவேண்டும்.

(அதர் 2)

நன்னடைத்தை, நேர்மை இவற்றைக் கடைப்
பிடிப்பவர்களின் வழி முறைகளை நன்கு கவனியுங்கள்.
முனிவர்கள் வகுத்துள்ள வழித் தடத்தில் செல்லுங்கள்.
மகிழ்ச்சிக்கு இட்டுச் செல்லும் பாதை இதுவே.
அறிவொளி பெற்ற ஆன்மாக்கள் மகிழ்ச்சியுடனும்,
தெய்வீக ஆசி பெற்றும் வாழுமிடம் இதுதான்.

(அதர் 19)

மக்கள் தலைவனே, உன்னிடத்தே தெய்வீக
குணநலன்களை இறுத்திக் கொள்வாய். (யசுர் 1)



நேர்மையான, உள்ளம் கொண்ட நாணயமான மனிதன் நிறைந்த புகழை எளிதாகவே அடைகிறான். (யசுர் 2)

மனிதர்கள் யாவரும் உடன்பிறந்தோர்களே, நிகரானவர்களே. சிறியவர், பெரியவர் என்கிற பாகுபாடு எதுவும் கிடையாது. (யசுர் 16)

தகுதியுள்ளவரிடையே உன் செல்வத்தைப் பகிர்ந்தளி. வாழ்க்கையின் விலை மதிக்கமுடியாத களஞ்சியமாகிய கடவுளின் கருணையை வேண்டி நின்றிடு.
(சாம 24)

உனது உள்ளத்தில் உறுதியான குறிக்கோளிருந்து அதை எட்டிடக் கடுமையாக உழைக்கையில்
இறைவன் உறுதியாக அருள் புரிவான். (இருக் 5)

உடலையும், உள்ளத்தையும் இன்னலமாய் வைத்துக்கோள். விரும்பும் குறிக்கோளை அடைய இவைதாம் முதற் படிக்கட்டுகள். (இருக் 8)

அச்சமின்றி உண்மையை வெளியிடும் அறத்தின் வல்லமை,
சமூகத்தை வழி நடத்தும்
தலைவர்களுக்கு இருக்க வேண்டும். (இருக் 8)

பிறவி மூதறிஞர்களும், அறிவாளிகளும் மட்டுமே உண்மையைப் பேசுகிறார்கள். (இருக் 9)



பகலை ஒட்டி அடுத்த பகல் தொடர்வதுபோல்,
அறு பருவங்கள் மாறி மாறி வருவதுபோல்,
அடுத்தடுத்து வருபவர்,
தனது முந்தியவரைக் கைவிட்டு விடக் கூடாது.
நல்ல பண்புகளை முன்னெடுத்துச் சென்று, நமது
பெரியோர்களின் எதிர்பார்ப்புகளை
நிறைவு செய்ய வேண்டும்.
உலகத் தலைவ,
இந்த வழி முறையே என்றும் நிலை பெற்று இருக்கட்டும்.
(அதர் 12)





# திருமணமும் இல்லறமும்

என்றும் நாம் ஒருவரையொருவர் அன்புடனும்,
பற்றார்வத்துடனும் பார்ப்போமாக.
வன்மம் பாராட்டாமல் நாம் நமது வாழ்க்கையை
மகிழ்ச்சியாக வைத்துக் கொள்வோம்.
நம் இருவரின் நெஞ்சத்திலும் ஒரே உள்ளுயிர் வாசம்
செய்யட்டும். (அதர் 7)

இணையர்களே, மணவாழ்க்கையின் இன்பங்களை
நுகர்ந்துக் கொண்டு, நெடுங்காலம் வாழ்வீர்களாக.
என்றும் ஒருவரை விட்டு மற்றவர் பிரியாதிருப்பீராக.
உங்கள் வீட்டில் உங்கள் குழந்தைகளுடனும்,
பேரக் குழந்தைகளுடனும் மகிழ்ச்சியாய் இருப்பீர்களாக.
(அதர் 14)

கணவன், மனைவியரே, ஒருவரையொருவர் ஒத்திணைந்து
கொண்டு அன்புடன் இருப்பீர்களாக.



கடமை முறைமை இவற்றின் வழி நடப்பீராக.
நல்ல வீரமிக்க குழந்தைகள் உங்களுக்குப் பிறக்கட்டும்.
உங்களுக்குரிய ஒரு வீட்டை கட்டிக் கொள்ளுங்கள்.
(அதர் 14)

மணமகளே, உன் குடும்பத்தினர் அனைவருடைய
நல்வாழ்வையும் கவனித்துக் கொள்.
அவர்களுடைய இன்ப துன்பங்களைப் பகிர்ந்து கொள்.
உன் வருகை உன் கணவன், மாமனார், மாமியார்,
குடும்பத்தில் அனைவருக்கும் ஆகூழ் ஆகட்டும்.
(அதர் 14)

மணமகளே, வீட்டில் அடி எடுத்து வைத்த பின்
குடும்பத்தின் ஒளிவிளக்காய்த் திகழுவாயாக.
அறிவுத்திறனும் புரிதலும் கொண்ட நீ குடும்பம் நன்கு
வாழ, நல்ல உடல் நலப்பாங்கான நெறிமுறைகளைப்
பின்பற்றுவாயாக. உன்னை இறைவன் வாழ்த்தட்டும்.
(அதர் 14)

இந்தப் பெண்ணின் தந்தையாகிய நான், எங்கள்
குடும்பத்துடன் உள்ள சகல தொடர்புகளிலிருந்தும்
இவளுக்கு விடுதலை அளிக்கிறேன்.
இனி இவளுடைய தொடர்பெல்லாம் இவளுடைய
கணவனுடைய குடும்பத்துடன்தான்.
அவர்களிடமிருந்து இவள் என்றென்றும்
பிரிந்து போகக்கூடாது.
அறியாப் பெண்ணாகயிருந்த என் மகள் இனித் தனது





அழகும், வீறியமுமுள்ளவனாகிய கணவனுடன்
பெருமகிழ்ச்சியுடன் குடும்பம் நடத்தி
நன்கல மக்களைப் பெறுவாளாக. (இருக் 10)

மணமாகா நிலையில் கடைப்பிடிக்க வேண்டிய
ஒழுங்குமுறைகளைப் பின்பற்றி வந்த இந்தப் பெண்,
இந்த வாலிபனைத் தன் கணவனாக
இப்பொழுது ஏற்றுக் கொள்கிறாள்.
வீட்டிற்கு மகிழ்ச்சியும் வளமையும்
இவள் கொண்டு வரட்டும்.
தன் கொழுநன் வீட்டிற்கு வந்தபின்,
மேன்மையான குழந்தைகளைப் பெற்றெடுத்து,
வீட்டில் அரசியாக மதிக்கப்படட்டும்
எல்லோருடைய மரியாதையும் நல் வாழ்த்துகளும்
இவளுக்கு வந்து சேரட்டும். (அதர் 2)

மணமகளே, உனது அழகு, உள்ளத்தின்
நற்பண்புகளையும் கண்டு,
உன்னை, நான் தழுவிக் கொள்கிறேன்.
வேறு எவரிடமும் நான் நலன் தேட மாட்டேன்.
அத்தகைய எண்ணங்களைக் கூட
என் மனத்தில் நுழைய விடமாட்டேன்.
அறநூல்களுக்கு ஏற்றபடி நான் நடந்து கொள்வேன்.
(அதர் 14)

ஓ, மாந்தனே, இல்வாழ்வாளின் கடமைகளைச்
செய்யத் தயங்காதே.
துணிவுடனும், மன உறுதியுடனும்





அறத்தின் வழி நடந்திடுவாய்.
வல்லமை, தன்மானம், வீரம், ஆகிய
சிறந்த குணங்கள் கொண்ட நீ
இறைவன் கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டு,
மகிழ்ச்சியுடனிருப்பாயாக. (யசுர் 3)

மணமக்களே, வாழ்க்கையில் அறிவுக்கூர்மையுடனிருந்து
பெருந்தன்மையைக் கடைப்பிடித்து
நல்வாழ்விற்கு வழி வகுக்கும் வேதங்கள் கூறும்
முறைகளை யாவரும் பின்பற்ற,
நீங்கள் எடுத்துகாட்டாக இருப்பீர்களாக. (யசுர் 2)

உனது பரிசுகளை நான் ஏற்றுக்கொள்வதைப்போல்.
நீயும் நான் அளிக்கும்
பரிசுப் பொருள்களை ஏற்றுக்கொள்வாய்.
ஏனெனில், ஏற்பு, அளிப்பு, என்கிற உயர்ந்த பண்பின்
அடிப்படையிலேதான் உலகம் தன் சமநிலையை
வகித்து வருகிறது.
வாழ்க்கையை மகிழ்ச்சியாக வைத்திருப்பதும்
இந்த நற்பண்புதான். (யசுர் 3)

இளம் இணையர்களே, பெருந்தன்மை, தியாகம் கொண்டு
இயங்கிவரும் வாழ்க்கைக்கு முட்டுக்கட்டை போடாதீர்கள்.
ஆன்மாவின் குரலுக்கு எதிராகச் செயல்படாதீர்கள்
மனது இடும் ஆணைகளுக்குக்
கட்டுப்பட்டு வாழ்வீர்களாக. (யசுர் 5)



வேதப் பேரறிஞர்கள் புரியும் வேள்வி மகிழ்ச்சியான
இல்லற வாழ்க்கைக்கு மனிதனுக்கு
வழிகாட்டியாக இருக்கிறது.
இறைவனுக்கு செலுத்தும் வழிபாடுகள்
எல்லோருக்கும் மகிழ்ச்சியைத் தரும். (யசுர் 8)

ஓர் உடன்பிறந்தான் மற்றோர் உடன்பிறந்தானை
வெறுக்காமலிருக்கட்டும்.
ஓர் உடன்பிறந்தாள் மற்றோர் உடன்பிறந்தாளை
வெறுக்காமலிருக்கட்டும்.
ஓர் இணக்கத்தோடும், இனிமையுடனும் நீங்கள்
யாவரும் பேசிப் பழகுவீர்களாக.
ஒத்த மனமுடையவர்களாகவும்,
ஒருமித்த குரல் எழுப்புபவர்களாகவும்
நீங்கள் அனைவரும் இருப்பீர்களாக. (அதர் 3)

பெரியோர்களுக்கு மதிப்பளியுங்கள்.
பெருந்தன்மையுள்ள நெஞ்சமுடையவர்களாக இருங்கள்.
பொதுவான இலக்கும், பொதுவான குறிக்கோளும்
கொண்டு முன்னேறுவீர்களாக.
ஒருவரிடமிருந்து ஒருவர் பிரிந்திராதீர்கள்.
ஒருவரிடம் ஒருவர் இன்மொழிகளைப் பேசுங்கள்.
என்னிடம் நெருங்கி வாருங்கள்.
ஒருமித்த கருத்துகளும், ஒரே குறிக்கோளுமுடைய
இணை பிரியாத தோழர்களாக உங்களை
நான் பிணைத்து விடுகிறேன். (அதர் 3)



தன் தாயார், தகப்பனாரை எவனொருவன் நன்கு
மதிக்காமல், முறையாகக் கவனிக்காமலிருக்கிறானோ,
அவன் துயர்களையும், துன்பங்களையும்தாம் நுகர்கிறான்.
எவனொருவன் தாயாரையும் தகப்பனாரையும் நன்கு
மதிக்கிறானோ, அவன் வாழ்த்தப்படுகிறான்.
தன் நண்பர்கள், நல்ல மனிதர்கள்
ஆகியோரால் பாராட்டப்படுகிறான். (இருக் 4)

அனைத்து வல்லமையுள்ள இறைவன் தனது உயிர்
வலுவினால் புது மணமக்களின் நெஞ்சங்களில்
தெய்வீக அன்பை நிறைக்கிறான். (இருக் 5)

திருமணமான பெண்கள், உயர்குலப் பெண்களாகவும்,
சிறந்த மனைவிகளாகவும் கண்களில் மையிட்டு,
உடலில் நறுமணம் பூசித் தங்கள் தங்கள்
இல்லங்களில் இருக்கட்டும்.
அணிகலன்கள் அணிந்து மகிழ்ச்சியாகவும்,
நல்ல உடல் நலத்துடனும் இருக்கட்டும். (அதர் 12)

நீ எப்படியிருக்கிறாயோ, நானும் அப்படியே இருக்கிறேன்.
நான் எப்படியிருக்கிறேனோ அப்படியே
நீயும் இருக்கிறாய்.
நான் இறைவணக்கப் பாடலாயிருக்கிறேன்,
நீ பாடகனாயிருக்கிறேன்.
நான் விண்ணகம். நீ மண்ணகத் தாய்.
மக்கள் பேற்றுக்காக நாம் இணைந்திருப்போம்.
(அதர் 14)





இணையர்களே, என்றும் நீங்கள் பெருந்தன்மை
யுடையவர்களாகவும், ஈத்துவக்கும்
உள்ளவர்களாகவும் இருப்பீர்களாக.
கமுக்க மனமே உங்கள் வாழ்கையின்
குறிக்கோளாயிருககட்டும்.

(சாம 257)





# அமைதியான திடநம்பிக்கை

எல்லா வல்லமையும் படைத்த இறையே,
என் நெஞ்சமாகிற தனி அறையில்
நீ துயில் கொண்டுள்ளாய்.
எனது உணர்புலன்கள் உனது பேருலக மாயமந்திரத்தால்
உரம் பெறுகின்றன.
உனது கைகளில் எனது எண்ணங்கள், செயல்கள்
யாவற்றையும் அளிக்கிறேன்.
எனது ஆன்மாவில் உறையும் மேன்மை ஒளியினால்
வாழ்த்தப்பட்டு, வாழ்க்கையில் எதிர்ப்படும் துன்பங்களை
எதிர்கொள்ள,
நான் தூய்மையை, ஆற்றலைப் பெறுகிறேன்.
நீ என்னுடன் இருக்கிறாய் என்ற நினைப்பே ஓர் அரணாக
இருந்து அமைதியான திட நம்பிக்கையுடன் எல்லாத்
துயரங்களையும் தாங்கிக் கொள்ளும்
வலிமையை எனக்களிக்கிறது. (இருக் 10)

## தாராள மனப்பான்மை

இறையனின் கருவியாக நாம் செயல்பட்டுச்
செல்வத்தை எளியவர்களுக்கும், தேவைப்படுவோருக்கும்
பகிர்ந்து வழங்குவோம். (இருக் 1)

நேர்மையாகச் சம்பாதித்து, தாராளமாக வழங்குபவர்கள்
உலகில் நிலையான இடம் பெறுவர்.
சமூகத்தில் மரியாதை பெறுவர்.
தங்கள் செயல்பாடுகாளை அவர்கள்
இறைவனுக்கு அர்ப்பணிக்கட்டும். (இருக் 1)

தாராளமாக அளிப்பவர் தெய்வீகத் தரத்திற்கு உயர்வர்,
தெய்வீகச் சக்திகளைப் பெறுவர். (இருக் 1)

வாரி வழங்குபவர்களுக்கு
இந்த வியப்புக்குரிய பரிசுகள் காத்திருக்கின்றன.
அழியா வாழ்வை அவர்கள் அடைவார்கள்.
நீண்ட, புகழ்பெறும் வாழ்வை இறை அவர்களுக்கு அருளும்.
(இருக் 1)



இறையே, உயர்ந்த புதையல்களை எமக்களிப்பாய்.
சீரிய மனம், ஆன்மிக ஒளி, நிறைந்த செல்வம்,
நல்ல உடல்நலம், இனிமையான வாக்கு,
வளமான நாள்கள் ஆகியவையே இந்தப் புதையல்கள்.
(இருக் 2)

தங்கள் செல்வத்தைத் தேவைப்படுவோர்களுக்கும்,
வறியவர்களுக்கும் பகிர்ந்தளிக்காத நாணயமற்ற
செல்வர்கள் மேல் இறை கருணை காட்டுவதில்லை.
இந்தப் பேராசை படைத்தவர்களின்
செல்வத்தை இறை பறித்துவிடும்.
பெருந்தன்மையாளருக்குச் செல்வத்தை வாரி வழங்கும்.
(இருக் 5)

மற்றவர்களின் உழைப்பில் பயன் பெறுபவர்களிடமிருந்து
செல்வத்தைப் பறித்துவிடு,
இறையே, இடருற்றுப் பயனீட்டுபவர்களுக்குரிய
பங்கை இவர்கள் அளிப்பதில்லை. (இருக் 5)

இறையே, உண்மையாக உழைத்துக் கிடைக்கும்
செல்வத்தை நான் அனுபவிக்க அருள் புரிவாய்.
(இருக் 8)

பணத்திற்கு மதிப்பளித்து ஒழுங்கான முறையில்
செல்வத்தைச் சேர்க்க
மனிதன் முயற்சி செய்யட்டும். தன் நுண்ணறிவுடன்
கலந்து ஆய்ந்து, மேலும் சிறப்பாக
உண்மையைப் புரிந்து கொள்ளட்டும். (இருக் 10)





ஒரு பொழுதும் சூதாடாதே. திருப்தியுடனிரு.
உண்மையான உழைப்பின் பலனை நுகர்.
வேளாண்மை செய், நன்கு அறுவடை செய்.
இவ்வாறு சேர்க்கும் செல்வமே
உண்மையான மகிழ்ச்சியளிக்கும்.
இறைவன் வகுத்த புனிதமான அறம் இதுதான்.
(இருக் 10)

பட்டினியால் வருந்தும் தன் உடன்பிறந்தானுடன்
உணவைப் பங்கிட்டுக் கொள்ளாமல்
தான் மட்டும் உண்டு களிக்கும் தன்னலமி நண்பனாக
இருக்கத் தகுதியற்றவனாகிறான். (இருக் 10)

செல்வனாயிருக்கும் பேறு பெற்றவன், எளியவர்களின்
தேவைகளை நிறைவு செய்யட்டும்.
வாழ்க்கையில் நீண்ட பாதையின்மேல்
அவன் பார்வை விழட்டும்,
செல்வமாகிற தேருருளைகள் சுழன்று கொண்டேயிருக்கும்.
இன்று ஒருவனுக்குச் செல்வம் வந்து குவியும்.
அடுத்த நாள் இன்னொருவனிடம் செல்வம் சேரும்.
என்றாவது ஒரு நாள் மற்றவனுடைய உதவி
தேவைப்படும் என்பதை ஒவ்வொருவனும் உணரட்டும்.
(இருக் 10)

தீயவழியில் சேர்ந்த செல்வம்
அழிந்து போகும் என்பதே இயற்கை அறம்.
நேர்மையாகச் சேர்த்த செல்வம் நிலைத்துப் பெருகிடும்.





நீதி நேர்மையற்ற முறைகளில் செல்வம் ஈட்டுபவர்
அழிந்துபடுவர். (அதர் 7)

நூறு கைகளினால் செல்வமீட்டி,
ஆயிரம் கைகளினால் செலவிடுங்கள்.
நல்ல செயல்களில் நீங்கள் ஈடுபடும் பொழுது
உங்களுடைய ஆக்கத் திறனும்
நூறுமடங்கு பெருகுகிறது.
நல்ல செயல்களுக்கு மனமுவந்து வழங்குபவர்கள்
இறைவனின் ஆசியை அடைவர். (அதர் 3)

ஓ, மாந்தனே, மகிழார்வத்துடன் திறன்பட உழைத்திடு.
வறுமை நோயாகிய கொடியதை விரட்டிவிடு.
மக்கள் நலனுக்காகப் பயனுள்ள செயல்களில் ஈடுபடும்
மாந்தர்களை,
நேர்மையாக ஈட்டிய உன் செல்வம் ஆதரிக்கட்டும்.
(அதர் 6)

எனது வீழ்ச்சிக்கு அடிகோலும் செல்வத்தை
என்னிடமிருந்து புறம் தள்ளிவிடு.
ஏனெனில், இத்தகைய செல்வம்
எனக்கு இகழ்ச்சி அளிக்கும்.
நாலா திசைகளிலிருந்தும் என்னைச் சுற்றி வளைத்திடும்
ஆதரவளிக்கும் மரத்தையே நச்சுச் செடி பட்டுப் போகச்
செய்து விடுவதைப் போல என்னை அழித்துவிடும்.
செல்வத்தின் தலைவ, உனது கைகள்
பொன்னிறமானவை, அந்தக் கைகளினால், நிறைவும்,
மகிழ்ச்சியும் அளிக்கும் செல்வத்தை
ஈட்ட என்னை வாழ்த்திடுவாய். (அதர் 7)





பசியினால் மட்டும் இறப்பு நேரிட்டு விடுவதில்லை.
வயிறு முட்டும்வரை உண்பவர்களையும்
இறப்பு விட்டு வைப்பதில்லை.
தன் செல்வத்தை மற்றவர்களிடையே பகிர்ந்து
கொடுப்பவன் இறைவனால் வாழ்த்தப்படுகிறான்.
தன்னிடமிருப்பதை மற்றவர்களுடன் சேர்ந்து
நுகராமலிருக்கிறவனுக்கு
நண்பனே கிடைக்க மாட்டான். (இருக் 10)

தானியத்தையோ, பணத்தையோ பதுக்கி வைத்து
வெற்றாரவார வாழ்க்கையை நடத்திக் கொண்டு
பட்டினி கிடந்து வாடும் ஏழைகளின் நிலையைப் பற்றி
கவலைப்படாமலிருக்கிறவன்.
ஒரு பொழுதும் உண்மையான
நண்பனை அடையமாட்டான். (இருக் 10)

அறிவொளிமிக்க முனிவன், எளிய பிச்சைக்காரன்,
முடவன், இவர்களில் எவராயிருந்தாலும் சரி,
அவர்களுடன் எவனொருவன் தன் உணவைப்
பகிர்ந்தளிக்கிறானோ,
அவன் புசிக்கும் உணவே புனிதமானது.
அத்தகைய எடுத்துக் காட்டானவன்
என்றென்றும் இறைவனால் வாழ்த்தப்படுகிறான்.
அவன் தன் எதிரிகளைக் கூட
நண்பர்களாக்கிக் கொள்வான். (இருக் 10)

அறம் செய்பவர்கள், அதன் மூலம் பிறர் நலனில்
அக்கறை காட்டுபவர்கள்
என்றும் மகிழ்ச்சியுடன் இருக்கிறார்கள். (சாம 285)





நேர்மையான தாராள குணம் படைத்த அன்பனொருவன்
என்றும் தாழ்வடைவதில்லை.
வறுமைக் காலங்களில் கூட
துயரம் அவனைத் தீண்டுவதில்லை.
அருளிரக்கக் குணம் படைத்த உண்மையான மனிதன்
செய்ததற்கு இரங்கப் பட வேண்டியதேயில்லை.
அவன் என்றும் நிலை குலைவதில்லை.

(இருக் 1)







## அரசுரிமை

ஓ, மன்னவ, மக்களால் தேர்ந்தெடுக்கப்படுபவன் நீ.
மக்களின் ஒரே தலைவனாகயிருந்து ஒளி விளக்காய்
மேன்மையுடன் ஆட்சி செய்திடுவாய்.
மக்கள் யாவரும் உனக்கு தலை வணங்குகிறார்கள்.
வானவர்கள் உன்னை வாழ்த்துகிறார்கள்,
அறந் தவறாமல் நடந்து கொள். இரக்கமுள்ளவனாக
இருந்திடு. மக்களுக்குப் பொருளுதவி செய்திடு.
நீ செய்யும் வள்ளன்மை வழிகள் எல்லாம் உனக்குப்
பெயரும், புகழும் பெற்றுத் தரும்.
வலிமை பொருந்திய, பரிவிரக்க முள்ளவனாக
நீ நூறாண்டு வாழ்ந்திடு.
நீ, தவறாமல் அதே வேளையில் உறுதியுடன் நடந்திடு.
உன் புகழில் எல்லோருக்கும் பங்களி. (அதர் 3)

கடவுளே, எங்கள் யாவருடைய தலைவனாகவும்,
மக்களுடைய அரசனாகவும் விளங்குகிறவனை



வல்லமையுள்ளவனாகச் செய்திடுவாய்.
அவனை வெற்றி வீரனாகத் திகழ்த்திடச் செய்வாய்.
செல்வம் யாவற்றையும் அவனுக்கு வாரி வழங்கிடுவாய்.
அவனின் எதிரிகளை அழித்திடச் செய்.
இளவரசர்கள் யாவருக்கும்
அவனே தலைவனாக இருந்திடட்டும்
அரிமா போல், தீய ஆற்றல்கள் யாவற்றையும்
அவன் விரட்டி அடிக்கட்டும்.
இறைஅருள் பெற்று, மக்கள் ஆதரவு பெற்று,
தூயவை யாவற்றினுடையவும் துணைபெற்று,
அவன் எதிரிகளை வென்றிடட்டும். (அதர் 4)

வீரம் செறிந்த இரத்தத்தில் உதித்த முதல் மாந்தன் அவன்.
மன்னர் குருதி ஓடும் போராளி அவன்.
மக்களை நெருங்கினான் அவன்.
உற்றார், சுற்றாருடன் தன் செல்வங்களைப்
பகிர்ந்து கொண்டான் அவன்.
இந்தப் பற்றும், பெருந்தன்மையும்
மக்களை அவன்பால் ஈர்த்தன.
அவன்தான் ஆண்டகை என்கிற
தொல்பழங்கால மனிதன். (அதர் 15)

அரசவைக்கும், படையிடமும் அவன்
பெருமிதமாக நடந்து செல்கிறான்.
மகிழ்வின்பங்கள் அவனைப் பின் தொடர்கின்றன.
அரச பரம்பரையின் மரபுகளை இவ்வாறு காத்துவரும்



அரசன், அரசவையினருடையவும், படையினருடையவும் பேரன்புக்கு ஆளாகிறான். (அதர் 15)

தீய செயல்கள், துயரம்,எதிரிகள் முகமன், செய்கிறவர்கள்,
இரண்டகக்காரர்கள் எங்குமே எவருமே
அரசனை அணுக முடியாது.
படைத்தலைவன், நம்பிக்கைக் கேடர்களையும் கேடு நினைப்பவர்களையும்
துரத்தியடித்து அரசனைப் பாதுகாக்கிறான்.
(இருக் 2)

இறையின் நல்லாசி பெற்ற முனிவனோ, தலைமையான அரசனோ ஒரு நாளும் தோற்கடிக்கப்படுவதில்லை,
கொல்லப்படுவதில்லை, அழிக்கப்படுவதில்லை,
எந்தத் துயரத்தாலும் தாக்கப்படுவதில்லை,
இறைவன் அளித்த பெருவளங்களும் குறைவதில்லை.
(இருக் 5)

ஓ, அரசனே, பாறை போன்று நிறைந்தவனாக,
உறுதியான உள்ளம் கொண்டவனாக
இருப்பாயாக.
கடமையைச் செய்வாய். (யசுர் 2)

பேரரசின் வல்லமை வாய்ந்த அரசன் நீ,
ஈடிணையில்லாத திண்மை உன்னுடையது.
தீய எண்ணம் கொண்ட எதிரிகளை அழிப்பவன் நீ.



உன்னைத் தன் நண்பனாக நினைப்பவன்
என்றும் தோல்வி அடைவதில்லை. என்றுமே
தோற்கடிக்க முடியாதவனாக விளங்குகிறான் அவன்.

(இருக் 10)





# வீறியமிக்க போர் மறவர்கள்

தீரமிக்க போர் மறவர்கள் எழுச்சி மிக்கவர்கள்,
கொடிய காட்டு விலங்குகளைப்போல்
வலிமை மிக்கவர்கள்,
உலகைத் தங்கள் ஆற்றலினால் அதிர்வுறச் செய்பவர்கள்.
நெருப்பைப் போன்று ஒளிர்பவர்கள்.
அத்துடன் இளகிய நெஞ்சமுடையவர்கள்.
ஓ, போர் மறவர்களே, எதிரிகளை முறியடித்து
மக்களின் செல்வத்தை
அவர்களிடமே சேர்ப்பித்து விடுங்கள். (இருக் 2)

நமது வில்லின் வலிமையால் எதிரிகளின்
உடைமைகளைப் பறித்திடுவோம்.
போர்க்களத்தில் நமது வில் நமக்கு வெற்றி தேடித் தரட்டும்.
கடும் போர்களில் நாம் வெற்றி பெறுவோமாக.
நமது எதிரிகளுக்கு நமது வில்
துன்பத்தையும், துயரத்தையும் அளிக்கட்டும்.
வில்லேந்திப் பகை நாடுகள் யாவற்றையும்
அடக்கி ஆள்வோமாக. (இருக் 6)



வில்லோடு அழுத்தமாகப் பிணைக்கப்பட்டுள்ள இந்த
நாண் போர்க்களத்தில் விரையும் பொழுது
ஒரு வகையான ஒலி எழுப்புகிறது.
வாளி ஆகிய தன் நண்பனை அணைத்து அரவணைத்து,
வில் ஏதோ இன்மொழிகள் பேசுவது போன்று
தோன்றுகிறது. (இருக் 6)

தாய் தன் மகவை மடியிலிட்டுப் புரத்தல் போல,
வில்லின் இரு முனைகளும் ஒன்றையொன்று
தழுவிய வண்ணமிருக்கின்றன.
வில்லும் அம்பும் மாறி மாறி, இயங்கி
எதிரிகளைத் துளைத்து விரட்டி அடிக்கட்டும். (இருக் 6)

பஞ்சு போன்ற சிறகு கொண்டது வாளி,
அதனுடைய முனை மானின் கொம்பு போன்றது,
பசுவின் தசை நாரினால் கட்டப்பட்டது அது.
தனது இலக்கை அடைந்ததும் தங்கி விடுகிறது.
எங்கெல்லாம் மக்கள் கூடுகிறார்களோ பிரிகிறார்களோ,
அங்கெல்லாம் இந்த அம்புகள் பாதுகாப்பு அளிக்கின்றன.
(இருக் 6)

நேர் முகமாய் பறந்து செல்லும், வாளியே,
எங்களைப் பாது காத்திடு.
எங்கள் உடலம் கல் போன்று திடமாயிருக்கட்டும்.
அருள்மிகு இறைவன் எங்களுக்கு ஊக்கமளிக்கட்டும்.
முழுமுதல் கொற்றவை எங்களுக்கு வெற்றியளிக்கட்டும்.
(இருக் 6)



திறமையுள்ள தேரோட்டிகள் குதிரையின் தொடைகள் மேலும், விலாப் பக்கங்களிலும் அடிப்பது சாட்டை கொண்டுதான். போர்க்களத்தில் குதிரைகள் பாய்ந்து முன்னேறச் சாட்டை தூண்டுதலாயிருக்கட்டும்.

(இருக் 6)

பளபளக்கும் படைக் கருவிகளைக் கையிலெடுத்து
மும்முரமாக விரைகின்றனர் போர் வீரர்கள்.
ஒளிவீசும் கவசம் அணிந்தவர்கள் அவர்கள்.
அவர்களுடைய உடலில் அது அழகொளியாய் உள்ளது.

(இருக் 7)

போர் வீரர்களின் உடலில் கவசம் மின்னுகிறது.
அவர்களது ஈட்டிகள் அழகாக ஒளி வீசுகின்றன.

(இருக் 8)

இந்தப் போர் மறவர்கள் முரட்டுத் தன்மையும், வேகமும் உள்ளவர்கள்.
சிறந்த படைகள் உள்ளவர்கள்.
எதிர்ப்புகளிலிருந்து தங்களைக் காத்துக் கொள்ள
அவர்கள் தொல்லைப் படுத்திக்கொள்ள வேண்டியதில்லை.
அவர்களுடைய வில்லும் அம்புகளும் தேரிலேயே உள்ளன.
எதிரிகளை வெல்லும்போது அவர்கள் அனைவரும்
புகழ் பெறுகிறார்கள். (இருக் 8)



# கைவினைஞர்களுக்கு வணக்கம்

திறமை வாய்ந்த கைவினைஞர்களே, நீங்கள் கட்டுமான
வேலைகளில் நல்ல பயிற்சி பெற்றவர்கள்.
நிறைந்த செல்வமும், சிறப்புரிமையும் படைத்தவர்கள்.
இறைவனிடமிருந்து நல்ல திறமை பெறும்
நற்பேறுடையவர் நீங்கள்.
எங்களுக்கு வெற்றி மேன்மையை வழங்கிடுங்கள்.
உங்களிடமுள்ள தன்னலமற்ற சேவை
மனப்பான்மையையும்
தாராள மனப்பான்மையும் நாங்கள் பாராட்டுகிறோம்.
(இருக் 4)

நிலம், விசும்பு, தகவல் தொடர்பு
முறைகளின் முன்னோடிகளே,
உயர்ந்த செயல்களால் எங்களுக்கு
ஊக்கமளிக்க முன் வாருங்கள்.
காலமெல்லாம் வளமை பெறுவதற்கான பயனுள்ள
வேலையில் ஈடுபடும் மரபை நிலைநிறுத்தும்
சிறந்த முன்னோடிகள் நீங்கள். (இருக் 4)



த.கோ - தி.ஸ்ரீ

சாலை, விசும்பின் தகவல் தொடர்பு முறைகளை
நடை முறையில் கொணர்ந்தவர்களே.
மக்களின் நன்மையைக் கருதி நீங்கள் அறிமுகப்படுத்திய
மூன்றுவழி போக்குவரத்துமுறை பாராட்டுக்குரியது.
ஆகவே, இந்தச் சிறப்பு நிகழ்ச்சியில் பங்கெடுக்கும் சிறந்த
மனிதர்களோடு கூட உங்களுக்கும் எங்கள் நெஞ்சம்
கனிந்த பாராட்டுகளை அளிக்கிறோம். (இருக் 4)

வான்வெளித் தகவல் தொடர்பு முறைகளின்
முன்னோடிகளே,
போர்க் காலத்தில் பயன்படும் போருக்கான ஊர்திகளைப்
படைத்துத் தருமாறு கேட்டுக் கொள்கிறோம்.
அவை விரைவாகச் செல்பவை, வலுவானவை,
வடிவமைப்பில் சிக்கலானவை,
நுட்பமான உறுப்புகள் பொருத்தப்பட்டவை.
(இருக் 4)





## படையல்

எல்லாம் வல்ல இறைவா, ஒளிவீசும் ஆன்மிக
மெய்யறிவு கொண்ட
தலை சிறந்த அறிஞர்கள்.
நமது நாட்டில் பிறவி எடுக்கட்டும்.
மக்களை ஆட்சி செய்யும் திறன் படைத்த மாவீர
மறவர்களும், அரசியல் வல்லுநர்களும்
நமது நாட்டில் தோன்றட்டும்.
திறன் படைத்த வில்லாளிகள்
நமது நாட்டில் தோன்றட்டும்.
தாராளமாகப் பால் கொடுக்கும் ஆவினங்கள்
பிறவி எடுக்கட்டும்.
அது போன்றே, கொழுத்த எருதுகளும்,
விரைவு வாய்ந்த குதிரைகளும் தோன்றட்டும்.
நன்னடத்தையுள்ள பெண்கள், வீர ஆடவர்கள்,
துணிவான இளைஞர்கள், தேரோட்டிகள்,
வெற்றியடைந்தே தீருவோம் என்கிற உறுதி படைத்த,



அவைகளில் நன்கு ஒளிரத்தக்கத் தகுந்த போராளிகள்
நம் நாட்டில் தோன்றட்டும்.
போதும், போதுமென்று நாம் சொல்லுமளவு
முகில்கள் மழை பொழியட்டும்.
பழம் தரும் மரங்கள் கனிந்து, குலுங்கட்டும்.
எமது வருமானத்தையும், சேமிப்பையும்
கட்டிக்காக்கும் ஆற்றலை எங்களுக்கு அருள்வாய்.

(யசுர் 22)





# உயர்ந்த சிந்தனைகளும், சிறந்த செயல்களும்

போதும் என்கிற நிறைவான மன நிலையை நீ அடைய வேண்டுமானால் இறைவனிடம் முழு நம்பிக்கை வைத்திடு. கூடவே சமுதாயம் பயனடையும் வகையில் முழு முயற்சிகளையும் செய்வாயாக. (இருக் 1)

உண்மையாகவும், பொறுமையாகவும் எவனொருவன் உழைக்கிறானோ, அவன்தான் விரும்புவதைக் கட்டாயம் அடைந்தே தீர்கிறான். (இருக் 1)

பொறுமையான தேடுதல், உள்ளொளி தேடிய அறிவின் வழி நடத்தல் ஆகியவற்றின் மூலம் கூரறிவுடைய மாந்தர்கள் தங்களை அழிவினின்றும் காத்துக் கொள்கிறார்கள். (இருக் 1)

இறைவ, எங்கள் உள்ளங்களையும் மனங்களையும் அன்பு என்கிற தேனமுத ஊற்றினால் நிறைந்திடுவாய். (இருக் 9)



உனது மனம் விண்ணுக்கும், மண்ணுக்குமாக
அல்லல் படுகிறது.
அதை உன்னிடமே அழைத்துக்கொள்;
அது உனது கட்டுப்பாட்டில் இருக்கட்டும். (இருக் 10)

கடந்த காலத்தில் நடந்து முடிந்து போன நிகழ்ச்சிகள், எதிர் காலத்தில் நடைபெறப் போகிற நிகழ்ச்சிகளுக்குமாக உனது மனம் மாறி மாறிச் செல்கிறது. அதை உன்னிடமே அழைத்துக் கொள்,
உனது கட்டுப்பாட்டில் அது இருக்கட்டும். (இருக் 10)

எல்லாம் உணர்ந்த இறைவ, படைப்பின் முதல்வனே,
உண்மையைக் கண்டறிய எங்கள் பார்வையைத்
தூய்மைப் படுத்திக் கொள்ளும் வழியைக் கூறுவாய்.
(யசுர் 4)

உறுதியாக நேராக நில்.
உன் கடமைகளை முறையாக நிறைவெற்ற,
உன் பொறுப்புகளை ஏற்று நடத்த,
உன் உடலைப் பாறைபோல் உறுதியாக்கிக் கொள்.
துன்பங்களிலிருந்து மீண்டு, செல்வமீட்டி, வளமை பெற்று திண்மையாக நலமாக நீ
நூற்றாண்டு வாழ்வது உறுதி. (அதர் 2)

தீவினையே, உன்னை நெருப்பு விழுங்கிடட்டும்.
புகை முகில்கள் உன்னை வெகு
தொலைவிற்குக் கொண்டு செல்லட்டும்.
பெருந்தன்மையுள்ள, தூய அடியார்களை
இறைவன் வாழ்த்தி அருளட்டும். (அதர் 6)



உன் வாழ்க்கையின் எந்தக் கால கட்டத்திலும் எந்த வகையிலும் கடன்பட்டிராதே. கட்டற்று இரு.

(அதர் 6)

ஓ, மனிதனே, எழு! வீழ்ச்சி என்பது உனக்கில்லை, தடைகளைத் தவிர்க்கும் கூரிய மதி நுட்பத்தை உனக்கு மாத்திரமே இறைவன் அருளியிருக்கிறான்.

(அதர் 8)

பொய் முகங்களை ஒதுக்கி விட்டு, நிலைத்திருக்கும் உண்மையான குறிக்கோள்களையே ஏற்றுக்கொள்ள உறுதி கொண்டிருக்கிறேன். (யசுர் 1)

கற்றுணர்ந்த முனிவர்களுக்கும், உன் பெற்றோருக்கும் போற்றுதல் செய்.
அவர்களை நன்மதிப்புடன் நடத்து. (யசுர் 2)

தெய்வீக ஒளி, மகிழ்ச்சி இவற்றின் வற்றாத பட்டறிவின் அடையாளமாக விளங்கும் "ஓம்" என்கிற ஓரெழுத்து மந்திரம் உன் நெஞ்சில் என்றும் நிலைபெறட்டும்.

(யசுர் 2)

நம்பிக்கையுடன் இரு.
உன்னை எங்கும் வெல்ல முடியாது.
எவராலும் வெல்ல முடியாத வீரனுடைய ஆற்றல் உன்னுடையது. (யசுர் 5)





கடும் சொற்களை என்றும் பேசாதே.
கடும் சொற்கள் எந் நேரத்திலும் உன் உதடுகளிலிருந்து வெளிவரக்கூடாது.
அவற்றை ஒதுக்கியே வைத்திடு. (யசுர் 5)

உன்னுள் உறைந்திருக்கும் ஆற்றலை உணர்ந்துகொள்.
பேருலகின் நற்குணங்கள் யாவற்றையும் உன்னுள் புகுத்த அந்த புரிதல் உனக்கு உதவிடும். (யசுர் 5)

தூய மகிழ்ச்சியின் உயர்ந்த ஒளி வட்டம் உன்னை அன்புடன் அரவணைத்து என்றும் நிலைத்திடட்டும்.
(யசுர் 6)





## இசைவிணக்கம்

உணர்ச்சிகளைக் காட்டிலும் அறிவுக்கு முதன்மையை அளி.
உணர்ச்சி வயப்பட்ட உனது நெஞ்சத்தையும், தருக்க
முறையான உனது மனதையும் ஒரே உடம்பில் தான்
இறைவன் வைத்திருக்கிறான்.
உணர்ச்சிகளால் ஊசலாடாதே,
வெறும் தருக்க நூலில் மட்டும் மயங்கிடாதே.
நெஞ்சத்திலிருந்து தூண்டுதல் பெறு, ஆனால்
மூளையிலிருந்து வழிகாட்டுதல் பெற்று உறுதியாக
அடியெடுத்து வைத்து முன்னேறு.
நெஞ்சத்தைக் காட்டிலும் அறிவின் இடம் உயர்ந்தது.
நுண்ணறிவுள்ள, உள் ஊக்கம் பெற்ற அறிவர்களின்
அடிச்சுவட்டில் உனது அறிவை வளர்த்துக் கொள்.

(அதர் 10)



# விழிப்புணர்வு

தெய்வீக மக்களே, விழித்தெழுங்கள், விழித்தெழுங்கள்.
விழித்திருப்பவன்
தலைவன்,"சோமா" வால் வாழ்த்தப்படுகிறான்.
விழிப்புடன் இருப்பவன் மட்டுமே இறை ஆற்றல்களின்
நட்பைப் பெறுகிறான். அவன் ஈடுபடும் உயர்ந்த
செயல்கள் யாவற்றிலும் கடவுள் அவனுடைய வெற்றிக்கு
உறுதி அளிக்கிறான்.
தெம்புடனும், ஊக்கத்துடனும் கடினமாக
உழைப்பவர்களுக்கு மட்டுமே கடவுள் துணை புரிகின்றான்.
சுறுசுறுப்பில்லாமல் தூங்கி விழும் மனிதர்கள்
இறைவனின் நட்புக்கு உகந்தவர்கள் அல்லர்.
வினைப்பயனில் நம்பிக்கை கொண்டு
செயலற்றிருப்பவனின் உதவிக்கு
எவரும் செல்ல மாட்டார்கள். (இருக் 5)

ஓ. மனிதனே, தன்னிறைவுடன் இரு.
பிறர் உதவிக்கு அடிமையாகி விடாதே. (யசுர் 6)





உன்னுள்ளே வாழும் எதிரிகளை வெற்றி கொள்ள
உதவிடும் மொழிகளையே கேட்பாய். (யசுர் 6)

வழி காட்டுதலைத் தேடி உன்னிடம் எல்லோரும்
வரும் அளவுக்குப் புகழ் பெற்றிடு. (யசுர் 6)

தன்னிறைவு உள்ளவன் நீ. உனது விதியை நீயே
உறுதிப் படுத்துக் கொள்ளும் கலைஞன் நீ.
(யசுர் 7)

ஓ, நமது நாட்டின் தலைவர்களே, நமது தாய் நாட்டின்
பாதுகாப்பின்மேல் மிகுந்த கவனமாயிருங்கள்.
(யசுர் 9)

நமது அறிவர்களின் அறிவாற்றல் உண்மையானது ,
பயனுள்ளது.
முழு நம்பிக்கையுடன் அவர்களுடைய அறிவுரைகளைப்
பின்பற்றுங்கள். (யசுர் 11)

ஓ. மாந்தனே, தன்னை நம்பியிருத்தல், ஈக மனப்பான்மை
இவற்றின் சிறப்புகளைப் புரிந்து கொள்.
(யசுர் 23)

இறைவழிபாடு, நற்குணங்களை வளர்த்தல் இவற்றின்
மூலம் கிடைக்கும் மகிழ்ச்சி நமக்கு நலம் தருகின்றது.
(சாம 194)



ஓர் உண்மையான அன்பனின் பேச்சில்
மென்மை இருக்கிறது.
பிறர் உணர்வுகளை மதிக்கிற தன்மை அவனிடமுண்டு.
(சாம 251)

தொடக்கம், நடு, முடிவு, ஆகிய
வாழ்வின் எந்த நிலையிலும்
முரட்டுச் சீற்றத்தின் தீய
விளைவுகளிலிருந்து ஒதுங்கி இரு. (சாம 358)

இறைவா, தெய்வீக நறுமணத்தை
எங்கள் மேல் தவழவிடு.
எங்கள் பேச்சை தூய்மைப்படுத்திடு
என்றும் எங்களை இனிமையாகப் பேசவிடு. (சாம)

அறக்கொடை செய்யும்போது,
நான் பிசிறனாக இல்லாமலிருக்க வேண்டும்.
தாராளச் சிந்தனை என் உள்ளத்தில் துளிர்த்தெழட்டும்.
(இருக் 2)

எவரெவர் கடுமையாக உழைக்கிறார்களோ,
நல்ல பணிக்காக உழைக்கிறார்களோ,
அவர்களுக்கே இறைவன் பாதுகாப்பளிக்கிறான்,
உதவி செய்கிறான். (இருக் 4)



நல்ல காரியங்கள் செய்பவர்கள்
வீரமும், வலிமையும் பெறுகிறார்கள்.
அவர்களுடைய உடலும், உள்ளமும்
தீவினை, நோய் இவற்றிலிருந்து விடுதலை பெறுகின்றன.
சினம் கொண்ட அரிமா யானைக் கூட்டத்தைத்
துரத்தியடிப்பதைப் போல,
அவர்கள் தங்களுடைய எதிரிகளை
முறியடிக்க உதவுகிறான். (இருக் 5)





## அழியும் உடல்

முடிவு வரையில் தீவினைகளுக்கு எதிராகப்
போர் தொடுத்துக் கொண்டிரு.
மனித உடலில் நற்குணங்கள், தீய குணங்கள்
இரண்டுமே காலங்காலமாக பிணைக்கப்பட்டுள்ளன.
படைத்தவன் மனித உருவத்தைத் திட்டமிட்டபோதே,
நற்குணங்களும், தீக் குணங்களும் அந்த அமைப்பில்
புகுந்து அதைத் தங்கள் உறைவிடமாக
ஆக்கிக் கொண்டன.
மெய்மை, அறிவு, நிறைவு, பெருந்தன்மை, நம்பிக்கை
இவற்றின் கூடவே, தீக்குணம், வேட்கை, பசி, ஆகிய
தன்மைகளும் அங்குக் குடி கொண்டுள்ளன.
மகிழ்ச்சி, துயரம், பொறாமை, பற்றார்வம், இருட்டு,
மகிழ்வளிக்கும் ஒளி இவை யாவும் மனித ஆத்மாவாகிய
துணியில் இழைக்கப்பட்டுள்ளன. கூடவே வாழும்
எதிர்மறை உணர்வுகளுமாகச் சேர்ந்து,
இந்த நிலை முழுமை பெறுகிறது.

மாந்த உடலில் உள்ளடங்கியுள்ள இந்த உயிர்தான்
பிரம்மன் என்று அழைக்கப்படுகிறது. (அதர் 11)

முற்போக்கு எண்ணம் இல்லாதிருப்போரையும்
விரித்த சிந்தனையில்லாதோரையும்
நான் இங்கேயே விட்டுவிடுகிறேன்.
பரந்துயர்ந்த சிந்தனையுள்ளோர்
முன்னேறிட நான் உதவுகிறேன். (இருக் 10)

அவன் ஆசையற்றவன், அமைதியானவன், இறப்பற்றவன்,
எவருடைய துணையுமின்றி தானே வாழ்பவன்.
பொருண்மைச் சாரத்தில் நிறைவு அடைபவன்,
எந்தக் குறைவுமில்லாதவன்.
இந்த அமைதியான, வயது ஏறாத என்றும்
இளமையோடிருக்கிற தலை சிறந்த ஆன்மாவை
எவனொருவன் நன்கறிகிறானோ,
அவன் எவருக்கும் அஞ்சாதவன், சாவிற்கும்கூட.
(அதர் 10)

நுண்ணிய கூரறிவு மிகுந்த மனிதர்களே,
தாழ்வுற்ற புறக்கணிக்கப் பட்ட,
தாழ்ந்த, கைவிடப்பட்ட மக்களை
மறுபடியும் தூக்கி நிறுத்துங்கள்.
புகழ் பெற்ற மாந்தர்களே, தீவினை புரிந்தவர்களை
உயர்த்திப் புது வாழ்வு தொடங்க அவர்களுக்கு உதவிடுங்கள்.
(இருக் 10)

முழுமையானவன் நான்.
முழுமையானது என் மனம்.
முழுமையானவை என் கண்கள்.
முழுமையானவை என் காதுகள்.
முழுமையானது என் உயிர்மூச்சு.
முழுமையானது என் உடல் முழுவதுமே.
மன அமைதியுடன் இருக்கிறேன் நான். (அதர் 19)

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு,
எத்திசையிலும் உனக்கு எதிரிகள் இருக்கக் கூடாது.
(அதர் 6)

உயர்ந்த செயல்பாடுகள் மேலும் சிறக்கப் பாடுபடு.
இப்பொழுது, கடின உழைப்பு, நல்ல செயல்களின் மூலம்
உன் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக்கொள்.
ஈகம் செய்திடும் மனப்பான்மையைக் கைக் கொண்டிடு.
(யசுர் 11)

ஓ, முனிவனே, இந்தப் புனித இடத்தில்
அமர்ந்து கொள்.
உங்களது ஆன்மிக அறிவிலும், நுகர்வறிவிலும்,
கேட்பவர்கள் பங்கு பெறட்டும். (யசுர் 2)

பிறர் பயன் பெறும் செயல்களில் ஈடுபடுத்திக் கொள்ள
உனது உடல் உறுதுணையாயிருக்கட்டும். (யசுர் 4)

உன்னுடன் வருவோர்களின் புண்களைக்
குணப்படுத்துங்கள்
அவர்கள் உள்ளங்களில் முழுமையான இணக்க
ஆர்வத்தை இடம் பெறச் செய்யுங்கள். (யசுர் 12)

உனது உயர்பண்பு, உயரிய செய்கைகளினால்
மகிழ்ச்சியடைவாய்;
மற்றவர்களையும் மகிழ்ச்சியடையச் செய்வாய். (சாம 52)

பெருந்தன்மை, அன்பு, பற்றார்வம், ஆகிய பண்புகளினால்
உனது நெஞ்சம் பொங்கி வழியட்டும்.
அது ஒடுக்கப்பட்ட மக்களைச் சென்றடைந்து அவர்களை
மகிழ்ச்சியுறச் செய்யட்டும். (சாம 55)

ஈகத்தின் அடிப்படையில், வேள்வியின் குறிக்கோள்களுக்கு
இணங்க உன் வாழ்க்கையை நடத்துவாய்.
(சாம 56)

தன்னலமற்ற ஈக மனப்பான்மை வழி நடந்து,
மனித சமுதாயத்திற்குச் சேவை புரிவாயாக. (சாம 63)

ஓ. மாந்தனே, உன் உடம்பைப் பேணி வளர்த்திடு.
உயிரூட்டமும் தெம்பும் கொடுக்கக் கூடிய
உணவின் மூலம் அதை உறுதியாக்கிடு. (யசுர் 6)

சுற்றும் முற்றும் நன்கு கண்காணித்துக் கொள்.
விழிப்புடனிரு, ஓ, தெய்வக் கூறு நிறைந்த வீரர்களே,
முரட்டுத் தனமிக்க, கொடுமையான, நம்பிக்கை
அற்றவர்களுக்கு எதிராக உங்கள்
படைகளைப் பயன் படுத்துங்கள். (இருக் 7)

வாருங்கள், துணிவாக முன்னேறுங்கள்.
இடர்பாடுகளைத் துணிவுடன் எதிர் கொள்ளுங்கள்.
நீங்கள் நேர் வழியில் செல்லும்பொழுது,
எந்த இடையூறுகளும் உங்களின்
முன்னேற்றத்தை தடுத்து நிறுத்த முடியாது. (இருக் 1)

போற்றத்தக்க அணைத்து வல்லமையுள்ள இறைவனே,
எங்களுக்கு மெய்யறிவினை அளிப்பாய்.
கடுமையான உழைப்பில் மகிழ்ச்சியடையும்,
அது பயனளிக்கும் என்று நம்பிக்கை கொள்ளவும்
செய்திடுவாய்.
உனது வாழ்த்துகளினாலும், பாதுகாப்புடனும்தான்
இவை கை கூடும்.
நீயே எங்களை வளர்ப்பவள், அனைத்தும் அளிப்பவன்,
கடினமாக உழைப்பவனுக்கு வழிகாட்டி, தனது
உழைப்பின் பலன்களை நுகருமாறு
அவனுக்கு அருள் புரிந்திடுவாய். (இருக் 1)

தளரா ஊக்கத்துடன் உழைத்திடும் அன்பார்வலர்கள்
நல்ல பலன் பெறுவர். (இருக் 1)

தங்களுக்கு தாங்களே உதவிபுரிந்து கொண்டு
இறை வழி காட்டுதலில் கடுமையாக உழைப்பவர்களுக்கே
இறை உதவிபுரிகிறது. (இருக் 4)

சீரிய பணிகளுக்குத் தங்களை அளித்துக்
கொண்டவர்கள், தங்கள் பணிவன்பையும் நன்மதிப்பையும்
வையகக் கடவுட்தன்மை படைதோர்க்குச் செலுத்துகின்றனர்.



ஆனால் ஒன்றை மட்டும் நினைவிலிருத்திக்
கொள்ளுங்கள். அன்பு செலுத்தினால் மட்டும் போதாது.
தொடர்ந்த கடின உழைப்பும், தளராத ஊக்கமும்
வெற்றிக்கு இன்றியமையாதவை.
அப்பொழுதுதான் இறைவன் உங்களுக்கு
அருள் புரிவான். (இருக் 4)

தன் முயற்சிகளினால் மட்டுமே ஒருவன் தனது
குறிக்கோள்களில் வெற்றி பெறுகிறான். (இருக் 5)

உனது முழு வாழ்நாளையும் நன்கு வாழ்ந்து விடு.
முதுமையை பெருந்தன்மையோடு வரவேற்றிடு.
என்றும் நீ சுறுசுறுப்புடன் செயல்படுவாயாக
ஒளிமிகு உலகைப்படைத்த இறைவன்
உனக்கு நற்பேறு அளிக்கட்டும். (இருக் 10)

குற்ற உணர்வு யாதுமின்றி நேர்மையான முயற்சிகளை
எடுத்து நாளுக்கு நாள், முன்னேறி புகழ், மகிழ்ச்சி
இவற்றின் கொடுமுடியை அடைவோமாக.
(இருக் 10)

விழித்திரு, எழுந்திரு, தீர்மானம் கொள், உழை,
உறுதியான கைகளில் உண்மையின் கொடி ஏந்தி
முன்னேறிடு.
பாம்புகளைப் போன்று கொடிய, கெட்டெண்ணம்
கொண்டவர்களை வேரறுத்திடு. (இருக் 10)



காலைப்பொழுது உன் வாயிலைத் தட்டி உள் நுழைகிறது.
ஓ, தெய்வீகப் பண்புகள் கொண்ட மனிதர்களே,
எழுமின், விழிமின்,
பெருமைவாய்ந்த கதிரவன் உதித்துவிட்டான்.
கிழக்கிலிருந்து, இருளின் கருமையைக் கிழித்து,
வீறிடிடும் ஒளி மிதந்து வருகிறது.
புதிதாகத் தோன்றிய பேரொளிக் கதிர்கள்
நம்பிக்கையைப் புதுபிக்கின்றன.
பேரார்வம் கொண்டு புதியதொரு நாள் பிறந்து விட்டது.
வாழ்க்கை, புகழின் பாதையில் முன்னேறிச் செல்கிறது.
ஒவ்வொரு விடியலும் புதியதொரு நம்பிக்கையையும்,
மகிழ்ச்சியான நாளையும் கொண்டு வருகின்றது.

(இருக் 10)

ஓ, உள்ளுயிரே, உனது, விரைவு புயலைப்போன்றும்,
பளபளப்பு பேரொளி வீசும் ஞாயிறு போன்றும்
திகழட்டும். உனது ஒளியை எவரும் மிஞ்சிட இயலாது.
உலகமனைத்தையும் ஒளி மணக்கச் செய்யும் வண்ணம்
கோடி மின்னலாய் ஒளி வீசுக. (யசுர் 1)

தங்கள் தங்கள் தன் முயற்சிகளாலும் இறைவனருளாலும்
அன்பர்கள் செல்வச் செழிப்பில் திளைக்கிறார்கள்.
ஆயினும் அவர்களுடைய செல்வச் செழிப்பிற்கு முதற்
காரணம் அவர்களுடைய பொறுமையும்,
இடைவிடா உழைப்புமே. (இருக் 1)



ஓ, உள்ளுயிரே, அரிமாப்போல் சீறியெழு,
உனது பகைவர்களை அடித்து வீழ்த்திடு. (அதர் 4)

எல்லா மக்களுடைய உள் மனத்திலும்
அனைத்து இறைமையுள்ள
இறைவன் குடி கொண்டுள்ளான். (யசுர் 5)

ஆன்மிக மகிழ்ச்சியின் உயர்ந்த முகட்டினை
எட்டுமளவுக்கு என் ஆன்மாவை
உயர்த்திட உறுதி கொண்டுள்ளேன். (யசுர் 22)





# செம்மாந்த மன அமைதி

உன் நீண்ட பயணத்தின் முடிவை நீ நெருங்கி விட்டாய்.
ஆகவே பூசல்கள், மோதல்கள், போராட்டங்கள்
இவற்றிலிருந்து ஒதுங்கிவிடு.
மண்ணும், விண்ணும் உன்னிடத்து
அருளிரக்கம் காட்டட்டும்.
உன் நெஞ்சத்தில் எவரிடத்தும்
பகைமை உணர்ச்சியை வைத்துக் கொள்ளாதே.
எவருக்கும் நீ அஞ்ச வேண்டியதில்லை.
எஞ்சிய காலத்தைக் கவலையற்ற நிலையில் கழித்திடுவாய்.
(அதர் 19)

# எல்லாம் • ஒன்றில், எல்லாவற்றிலும் ஒன்று

உன்னிடத்தில் நீ எவ்வாறு நடந்து கொள்வாயோ,
அவ்வாறே நீ மற்றவர்களிடமும் நடந்து கொள்வாய்.
உயிர்வாழும் அனைத்து மக்களையும் உன்
உயிர்த்தோழர்களாகக் கருதிடுவாய்.
ஏனெனில் அனைவரிடமும் ஒரே ஆன்மாவே வாழ்கிறது.
உலகளாவிய அந்த ஆன்மாவின்
ஒரு பகுதிதான் அனைவருமே.
எவனொருவன் யாவரையும் தன் ஆன்ம நண்பர்களாகக்
கருதி அவர்கள் யாவரையும் ஒன்றுபோல் விரும்புகிறானோ,
அவன் என்றுமே தனிமையில் இருப்பதில்லை.
மாண்புத் தன்மைகளாகிய மன்னித்தல், இரக்கம், சேவை
ஆகிய குணநலன்களைக் கொண்டவன்
எல்லோராலும் விரும்பப்படுகிறான்.
அத்தகையவன் தன் வாழ்நாள் முழுவதும்
மட்டற்ற மன மகிழ்ச்சியை நுகர்கிறான். (யசுர் 40)





# கட்டளைகள்

மனிதனாக நீ செய்ய வேண்டிய கடமைகளை மறக்கும் அளவுக்கு உன் ஆன்மாவின் சிறகுகள் அத்தனை உயரத்திற்கு உன்னை இட்டுச் செல்ல வேண்டா.

(யசுர் 5)

ஓ, மனிதா, வாழ்க்கையின் கீழ் மட்டத்திலிருந்து எம்பி
உயர் தளத்திற்கு உயர்ந்திடு.
இருண்மைக் குழியில் அழுந்திடாதே.
உன்னைப் பிணைத்திருக்கும்
தளைகளை உதறித் தள்ளிவிடு.
இறப்பச்சம் உன்னை அழுந்திவிடக் கூடாது.
உலக வாழ்க்கையில் வெறுப்படைந்திடாதே
கொழுத்துவிட்டெரியும் தீயின் நாக்குகளைப்போல்
ஒளிர்த்திடுவாய், செங்கதிர் போல்
களிப்பொளி வீசிடுவாய்.

(அதர் 12)





பாறைகளும், கூழாங்கற்களும் சிதறிக்கிடக்கும் கட்டுக் கடங்காத காட்டாறு போன்றது மனித வாழ்க்கை.
துணிவுள்ளவர்கள் அதற்குள் இறங்குகின்றனர்.
கரையிலேயே அமர்ந்து இடர்களைப் பற்றியே நினைத்திருந்தால், நீ ஒரு பொழுதும் கரை சேரப் போவதில்லை.
உனது அச்சங்கள், குற்ற உணர்வுகள், தளர்வுகள், சிக்கல் நிறைந்த உறுப்புகள் ஆகியவற்றைப் பின் தள்ளிவிடுவாய்.
இவ்வாறு எதிர்மறை ஆற்றல்களிலிருந்து விடுபட்டு, எளிதாய் ஆற்றைக் கடந்து செல்வாய். (அதர் 12)

ஓ, மானுட ஆன்மாவே, உனது வலிமையையெல்லாம் ஒன்று திரட்டு.
நிலைத்திருக்கும் வாழ்வாகிய ஒரு நீரோட்டம் கற்படுகையில் தவழ்ந்து செல்கிறது.
கொடிய ஆற்றல்களின் தன்மைகளைப் புறம் தள்ளிவிட்டு, உறுதியான அடி வைத்து முன்னேறிச் செல்வாய்.
நிலைத்திருக்கும் இன்ப வாழ்வை அடைவாய்.
(அதர் 12)

மாண்டுவிடாதீர் மாந்தர்களே, நெடுங்காலம் வாழ்ந்திடுவீர் உறுதியான மனவலிமை கொண்டு, வீரமுள்ள ஆன்ம வலுவுடன் வாழ்ந்திடுவீர்,
இறப்பச்சதிற்கு இடம் கொடாதீர். (அதர் 19)

வீரமிக்கவர் வெல்லப்படுவதில்லை. (அதர் 20)



எவனொருவன் வீரம்,உறுதி, அழுத்தம்
ஆகிய பண்பு நலன்களைக் கைக்கொள்கிறானோ,
அவனே போரில் வெற்றியடைகிறான். (அதர் 20)

இறைவனின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படியும்போது,
நீ மனவலிமை, உறுதியையும், கைவரப் பெறுகிறாய்.
ஒருக்காலும் அவற்றை எதிர்த்திடாதே. (யசுர் 1)

தெய்வீகக் கடமைகளைச் செய்திடவும்,
போலி மதிப்பீடுகளுக்குள் மறைந்திருக்கிற
உண்மை நிலையை வெளிக் கொணரவும்,
உனது அறிவுத்திறனுக்கு ஒளி சேர்த்திடுவாய்.
(யசுர் 2)

ஆன்மிக மகிழ்ச்சியின் களஞ்சியங்களில் அண்டை
அயலாரையும் முனிவர்கள் அனைவரும்
பங்கு பெறச் செய்யட்டும். (யசுர் 3)

இறைவா,
பொறுமை, விடாமுயற்சி ஆகியவற்றின்
துணைகொண்டு எமது
அறியாமையை விரட்டியடிக்க
நீ உதவிடுவாய். (யசுர் 3)

வீரம் நிறைந்த போர்வீரனே, கழுகுபோல் உன் எதிரியின்
மேல் தீடீரெனப் பாய்ந்து அவனை அழித்து விடு.
(யசுர் 4)



ஓ, யாவும் அறிந்த மெய் இறையே,
இறப்பின்மையை அளிக்கும் தெய்வீக ஒளி
எங்கு இருக்கின்றதோ,
மெய்யறிவொளி வழங்கும் ஞாயிறு எங்கு ஒளிர்கின்றதோ,
ஆழ்ந்த அமைதி எங்கு ஆட்சிபுரிகின்றதோ,
அந்த உரிமை உலகிற்கு எனக்கு வழி காட்டிடுவாய்.
இறைவா, உனது, தோள்கள் பரந்தவை, உறுதியானவை.
உனது எல்லையற்ற பரந்த நிழலில்
நாங்கள் பாதுகாப்பை உணர்வோமாக. (அதர் 19)

வானத்தை ஆய்ந்து நாடிச் செல்.
வாழ்த்துக்குரிய பேறு உனக்குக் கிட்டட்டும்.
(யசுர் 6)

துணிவுடன் அஞ்சாது முனைப்புடன் செயலாற்றித்
தீமைகளை வெற்றி கொள்.
உனது நெஞ்சுரத்தை நன்கு புரிந்துகொள்.
எவருக்கும் அஞ்சாதிரு.
தீர்மானமாக, உறுதியாயிருப்பாய். (யசுர் 6)

வீரமிக்க மாந்தனே,
எதிரியின் வல்லந்த ஆற்றல்களையெல்லாம்
நொறுக்கிவிடு. (யசுர் 9)

போர் மறவனே, விரைவாக முன்னேறி
எதிரியை அழித்துவிடு. (யசுர் 11)



முன்னேறிச்செல் உயர்ந்த புகழையும், நிறைந்த
செல்வத்தையும் பெற மேலேறி உச்சத்தை எட்டு.
நிலைத்த உறுதியுடன் முன்னேறு. (யசுர் 11)

புயல்காற்றைப் போல் இருக்கட்டும் உன் விரைவு.
முரட்டுக் குதிரையைப்போல் இருக்கட்டும்
உன் ஆற்றல். (யசுர் 11)

நன்கு முன்னேறு, உன் பெருமிதப் பாங்கு
குன்றாமல் குறையாமல் இருக்கட்டும். (யசுர் 13)

வீர உணர்வுடன் போரிட்டு மேலெழுந்து
எதிரிகளை முறியடித்திடு. (யசுர் 13)

ஓ, மனிதனே, ஒழுக்கம் உள்ளுரம்
ஆகிய இறக்கைகள் உடையவன் நீ.
நாநிலத்தில் உனது இடத்தை நிலைநாட்டிக் கொள்.
உனது ஒளி வானத்தை நிறைக்கட்டும்.
கோளத்தில் உனது பேரொளியைப் பரப்பிடு.
திசை எட்டும் உன் ஒளிவெள்ளம் சுடர் வீசட்டும்.
(யசுர் 17)

ஓ,மாந்தனே, தக்க நேரத்தில் நீ எடுக்கும் முடிவினாலும்,
மனமுவந்து நீ அளிக்கும் படையல்களினாலும்
உனது குறிக்கோள்களை அடைந்திடு. (சாம 47)

ஓ. ஆன்மாவே, விரைந்து, தாக்கித்
தீய ஆற்றல்களை அடக்கி ஆண்டிடுவாய்.
உறுதியான உன் தீர்மானங்கள் வீணாவதில்லை.



ஒளிவீசும் ஆன்மாவே, உறுதியே உனது வன்மை
கட்டுப்பாட்டுடன் செயல்பட்டு
அறியாமை இருளை அகற்றிடுவாய்.
இதன் மூலம் உனது ஆளுமையை வெளிப்படுத்திடுவாய்.
(சாம 413)

உணர்ச்சி ஓட்டங்கள் நமது நன்னடைத்தையை
அழித்துவிடக் கூடாது.
அவை தாங்களாகவே செத்து மடியட்டும். (இருக் 1)

உன்னை ஒருவன் சாவித்தாலோ,
உனக்குக் கேடு செய்தாலோ,
எதிருக்கு எதிராக நீயும் அவ்வாறு நடந்து கொள்ளாதே.
உனது வேண்டுதல்களின் மூலம் அவன் இறை அருள்
பெற்றிட வேண்டிடுவாய். (இருக் 1)

ஏமாற்ற உரைகளாடி, வஞ்சகப் புகழ்பாடி, நம்மைத்
தவறான பாதைகளுக்கு இட்டுச் செல்பவனுடைய
தவறான போக்கு அவனுள்ளேயே அழிந்து போகட்டும்.
(இருக் 2)

மாசற்றவரை அல்லல் படுத்துகிறவன் மனிதனேஅல்லன்.
அவனொரு ஓநாய். அவனிடமிருந்து ஒதுங்கியே இரு.
(இருக் 2)

தன்னைத் தானே புரிந்து கொள்ளும் நிலையில்
ஒருவனுடைய தீய ஆசைகள்
தாமாகவே கருகி அழிந்து போகின்றன. (இருக் 2)





பொறிபுலன்களை அடக்கியாள
மன வலிமையை வளர்த்துக் கொள். (இருக் 5)

அறியாமையாகிற இருள் திரையை அகற்றிவிடு.
(சாம 319)

பேராசை என்கிற கொடிய உணர்ச்சியை அழித்துவிடு.
காரணம் அது உண்மையில் ஓர் ஓநாய்.
(இருக் 6)

செருக்கு கொண்ட அன்பனின் வழிபாடு
அடக்கமாக்கப்படட்டும் (இருக் 6)

கேடு விளைவிக்கும் எண்ணங்களை எண்ணாதே;
செயல் படுத்தாதே. நேர் வழியிலேயே நட.
(இருக் 10)

அற அமைதி முறையில் மெய்யறிவைத் தேடுபவனே,
தீவிரமான பற்றாளனே, பொறாமை, பேராசை,
வேறு கெட்ட உணர்ச்சிகளைத் துடைதெறிந்து விடு.
(சாம 308)

சோம்பியிருக்கும் மனம் தீய எண்ணங்களுக்கு
எளிதில் இரையாகிறது. (இருக் 10)

கொடிய எதிரியுடன் போரிட்டு அவனை வெற்றிகொள்ளும்
வீர மறவர்களை அழித்துவிடவேண்டும் என்கிற கெட்ட
எண்ணங்கொண்ட மனிதர்களை நாம் முற்றிலுமாக
அடக்கி, ஒடுக்கிப், பொசுக்கிவிட வேண்டும். (அதர் 4)





வில்லிலிருந்து அம்பை எய்திடுவதுபோல்
உன் நெஞ்சத்திலிருந்து சீற்றத்தை அகற்றிவிடு.
இனி, நீங்கள் நண்பர்களாகி இணங்கி வாழ முடியும்.
(அதர் 6)

எழு ஞாயிறு மற்ற விண்கோள்களின் பேரொளியைப்
பறித்து விடுவது போல்,
நான் கெடுமதி படைத்தவர்களின்
பலத்தை உறுஞ்சி விடுவேன்.
கண்ணிமைக்கும் நேரத்தில் இருக்கிற இடம் தெரியாமல்
அவர்கள் மறைந்து போவார்கள். (அதர் 7)

இறந்தவர்களைப் பற்றி வருந்திக் கொண்டே இருக்காதீர்கள்.
அத்தகைய சிந்தனை உன்னைப்
பின்னுக்குத் தான் இழுத்துச் செல்லும்.
இருட்டிலிருந்து வெளிச்சத்திற்கு வருவாய்,
புகழ் உனக்காகக் காத்திருக்கிறது.
வா,வா, நாங்கள் உன் கைகளைப் பற்றிக் கொள்கிறோம்.
(அதர் 8)



# மெய்யுணர்வு

தேடித் திரியும் முதலும் முடிவுமற்ற பொருளை
உனது ஆன்மாவில் காண்பாய்.
உனது தேடுதலில் நெடுங்காலம் அலைந்து திரிந்து
விட்டாய். அறியாமையில் உழன்றும், உதவியற்ற
நிலையில் தவித்தும் உனது தேடுதலில் நீ கழித்த
நாள்கள் எத்தனை சோர்வையும் துயரையும் தந்தனவோ?
முடிவில் உன் பார்வையை உள் முகமாய் திருப்பும்போது,
நம்பிக்கையின் சுடரையும், நிலைத்திருக்கும்
ஆற்றலையும் உன்னைச் சுற்றிலுமே ஒளிவட்டமிட்டுக்
கொண்டிருக்கக் காண்கிறாய்.
உலகத்தின் ஆன்மாவை, நீ தேடி அலையும் பொருளை
பெரு மகிழ்ச்சியுடன் காண்கிறாய்.
இறுதியில் நீ அடையவிரும்பும் பொருளை உனது
துருவி ஆராயும் மனம்,
உனது உள்ளத்திலேயே உறைந்திருப்பதைக் காண்கிறது.
இந்தப் புதிய புரிதல்
உன் உள்ளத்தில் புத்தொளி பரப்புகிறது. (யசுர் 11)



உலகியலான பயன்களுக்காக அன்பு சார்ந்த இறை வழிபாட்டை, கைவிடுபவர்கள் கவலையையும், ஏமாற்றத்தையும்தான் தேடிக் கொள்கிறார்கள்.

(அதர் 12)

உனது கட்டற்ற ஆசைகளை உறுதி கொண்டு வென்றிடு. இவையே உனது எதிரிகள். (யசுர் 1)

கெட்ட எண்ணங்களை நெடுந்தொலைவு ஒதுக்கி வைத்திட எங்களுக்கு உதவிடுவாய், இறைவ.

(யசுர் 4)

ஏமாற்றுபவர்களை நசிக்கிடத் திண்ணிய உறுதிகொள். அல்லது தனது செய்கைகளினால் தன்னைத் தானே அரித்துக் கொள்ள விட்டுவிடு. (யசுர் 6)

எளிய பொது மனித ஆசைகளுக்கு அப்பாற்பட்ட தெய்வீக ஆன்மிகப் பாதையில் அடி வைத்திடுவாய்.
நிலைத்த மகிழ்ச்சிக்கு வழி காட்டிடும்
தெய்வீக ஒளியைக் காண்பாய். (யசுர் 8)

கடுமையான கட்டுப்பாடு, கண்டிப்பான நெறிமுறைகள் மூலம் கட்டுக் கடங்காத
ஆசை உணர்ச்சிகளையும் பொசுக்கிவிடு. (சாம 24)





எங்கள் உள்ளங்களில் என்றும்
உயர்ந்த சிந்தனைகளே இடம் பெறட்டும்.
எங்கள் நாவில் கடுமையோ, கசப்போ இருக்கக்கூடாது.
(சாம 140)

உனது நெஞ்சத்திலிருந்து பொறாமையை அகற்றிவிடு.
வன்முறையை ஒதுக்கிவிடு. (சாம 274)

எனது தாய்நாடு பொன்னின் சுடர்ஒளியை
எனக்கு அளிக்கட்டும். (அதர் 12)





## உயர்நிலைத் திருப்புகழ்

உலகின் கண்ணாகிய ஞாயிறு இறைவனளித்த வரம்.
எல்லையிலா வண்ணப் பேரொளி
பரப்பிக்கொண்டு மேலெழுகின்றது.
நூறாண்டுகாலம் அதைக் கண்டு மகிழ
நாம் உயிர் வாழ்ந்திருப்போமாக.

(இருக் 7)

# பேரண்டம்

யாவற்றையும் தன் கட்டுப்பாட்டிற்குள் வைத்திருக்கும்
பேரண்டமாகிற அழிவில்லாத ஆழி
பரந்த விண்வெளியில் சுற்றிச் சுழன்று கொண்டிருக்கிறது.
ஆற்றலுடன் சேர்ந்த இறைவனின் மதி நுட்பம்
முழுமையான இந்தப் பேருலகத்தைக் கட்டி ஆள்கிறது
அனைத்துலகங்களும் கோள்களும் இந்த
ஆற்றலைத் தான் சார்ந்திருக்கின்றன;
அடிப்படையாய்க் கொண்டுள்ளன. (அதர் 9)

இந்தப் பரந்த வெளியில் மனம், உயிர்ப்பாற்றலான
மூச்சு, பெயர் யாவும் இடம் பெற்றுள்ளன.
இந்த இயற்கை ஆற்றல்கள் யாவும் இறைவன்
நெருங்குகையிலேயே தங்களைத்
தாங்களே மகிழ்வித்துக் கொள்கின்றன.
இதே பரந்த வெளியில் கண்டிப்பு, பெருமிதம் விரிந்து பரந்த
பேரண்டம், வேத அறிவு எல்லாமே நிலை பெற்றுள்ளன.
இறைவன் எல்லோருக்கும் தலைவன். (அதர் 19)



பேரண்டத்தின் கண்ணாகிய பகலவன்
இறைவன் அருளிய வரம். (அதர் 10)

அவனிடத்தில்தான் தெய்வீகப்
பேரண்ட ஆற்றல்கள் யாவும் ஒன்றாகின்றன.
அனைத்துப் புகழ்ப் பாடல்களுக்கும் போற்றுதலுக்கும்
அவனே தந்தை.
தெய்வீகப் பண்புகள் எல்லாவற்றிற்கும் தூதுவன் அவனே.
நிலப்பரப்புகள் யாவற்றையும்
அவன் தூய்மைப்படுத்துகிறான்.
மேன்மையான இடங்களிலிருந்து கொண்டு
உயிர்ப்பவை, உயிர்ப்பற்றவை,
ஆகிய எல்லா உயிரினங்களையும்
அவன் கண் காணிக்கிறான்.
அவனிடத்தில் எல்லாக்
கடவுளர்களும் ஒன்றாக ஒன்றுகின்றனர். (அதர் 13)

ஆழ்ந்த தெய்வீக ஈடுபாடு, மனவுறுதியைப் பருப்பொருளின்
மேல் செலுத்துதல் ஆகியவற்றின் விளைவாகத்
தோன்றியதுதான் ஆற்றல் வாய்ந்த இந்தப் பேரண்டம்.
அண்டத்தைப் படைத்தவன் என்கிற முறையில் தான்
இங்கு எடுத்துக் கூறப்படுகிறான் இறைவன்.
முதலில் ஆழிகள் தோற்றுவிக்கப்பட்டன.
அதன் பின்னர் தோன்றியதுதான் வையகம்.
இந்த வகையில் கோளாற்றல்களை வெவ்வேறு மாறுபட்ட
அமைப்புகளில் பேரண்டப்
பெருமானாகிற சிற்பி செதுக்கியுள்ளான்.
அவனவன் செய்த நல்வினை தீவினைப் பயன்களைப்



பொறுத்து இந்தக் கோள் அமைப்பில்
மனிதன் பிறவி எடுக்கிறான். (இருக் 10)

இறைவன் உயிரின்றி இருக்கிற தொடக்க காலம் தொட்டு
இருண்மை நிலையைக் கடந்துள்ளான்.
அவன் பெரிய வலிமையுடையவர், அனைத்து அறிவையும்
உள்ளடக்கியவன் பல இடங்களிலும் ஒரே நேரத்தில்
இருப்பவன், கண்ணைக் கூச வைக்கும் ஒளி உள்ளவன்.
உள்ளுணர்வு மூலம் இறைவனை அறிந்த மனிதன்
இறப்பச்சத்தை வெற்றி கொள்கிறான்.
இவை நீங்கலாக பிறப்பு, இறப்பு
என்ற சுழற்சியிலிருந்தும், பல்வேறு இன்ப, துன்ப
நிலையிலிருந்தும் மனிதனுக்கு விடுதலையே கிடையாது.
(இருக் 10)

பேரண்டம, உயிர்வாழும் இனங்கள் ஆகியவற்றை,
அண்டத்தைப் படைக்கும் முன்பாகத் தொடக்க காலம்
தொட்டு உள்ள பேரொளிப் பிழம்பான கோளம்
ஆகியவற்றைப் பல்வேறு வகைகளில் படைத்த
அனைத்து வல்லமையுள்ள இறைவன்
படைப்பு என்கிற கருப்பையில் செய்தபோதிலும்
அவன் ஒரு பொழுதும் பிறப்பதில்லை.
அறிவாளிகள், கடவுளைப் பற்றிய சிந்தன்னயில்
இருந்தபோதிலும் இறைவன் கருவில் வாழ்கிறான்.
என்பதை உள்ளுணர்வு மூலம் அறிகிறார்கள்.
விண்மீன் கூட்டம், பேரண்டச் செங்கதிர்கள்,
விண்கோள்கள், உலாவரும் வீதி, இவை போன்றவை



படைப்பவனில் உள்ளடங்கியவையே என்பதும்
அவனுக்கு நன்றாகத் தெரியும். (இருக் 10)

இந்தப் பேரண்டம் முழுவதும் அனைத்து இடங்களிலும்
ஒரே நேரத்தில் பரவியிருக்கிறவனும்
முழு வல்லமையுள்ளவனாகவுமுள்ள
இறைவனின் ஆணைக்குட்பட்டது.
இறைவனை நாம் வெவ்வேறு உருவங்களில்
காண்கிறோம்.
இந்த உலகங்கள் அத்தனையையும்
அவன் நம் கண்முன் நிறுத்துகிறான்.
பரந்த வானை ஊடுருவிச் செல்லும் அளந்து
முடியாத காலம் என்று இறைவனை
அவர்கள் அழைக்கிறார்கள். (அதர் 19)

எல்லாம் வல்ல இறைவனுக்குத் தடம் பிறழாத
அன்பார்வமுடன்
எங்கள் மனமார்ந்த வணக்கத்தை அளிக்கிறோம்.
அவன் அனைத்தையும் அறிந்தவன்.
உயர்ந்த நிலையில் உள்ளவன்.
ஒளி வெள்ளத்தால் சூழப்பட்டவன்.
பேரண்ட ஆற்றல்களை வெளிப்படுத்துகிற
நிலம், நீர், நெருப்பு, செங்கதிர், வெண்கதிர், விண்மீன்
கூட்டம், ஆகியவை தோன்றுவதற்குக் காரணன்
அனைத்தையும் அறியும் வல்லமை படைத்த இறைவன்.
அறிவாற்றல் பெற்ற அன்பானவர்கள், வாழ் நாள்
முழுவதும் வழிகாட்டியாயிருக்கும் இறைவனை



எண்ணித் தொழுகிறார்கள். அவன் ஆற்றல் மிக்கவன்.
ஒளிவீசும் பேரண்டத்தையும், மற்ற தெய்வீக
ஆற்றல்களையும் படைப்பதற்கு முன்னரே
புகழ்பெற்றவன் அவன்.
இவ்வளவு உயர்ந்த செம்பொருளை அறிந்து புரிந்து
கொள்ளும் மனிதன் நற்கதி அடைகிறான்.

(இருக் 10)

பேரருளறிவு பெற்ற அறிவாளிகள் அன்பையே
வீடு பேற்றுக்கு வழி என மொழிகின்றனர்.
உள்ளுணர்வு மூலம் செம்பொருள் உணரும் பேறு
பெற்ற பொருளறிந்த அறிவாளிகள் தங்கள் உடல்
வல்லமைகளைக் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ளும்
சிந்தனை ஆற்றலை நெறிப்படுத்திக்கொள்ளும்
திறம் பெறுகிறார்கள். (இருக்)

ஆன்மிகநெறி, உலகியல் வாழ்முறை என்பவை
இறைவனின் இரண்டு சிறப்பான
குணநலன்களைக் குறிக்கின்றன.
பகலும் இரவும் அவனது இரண்டு மாறுபட்ட நாள்களைக்
குறிப்பிட்ட போதிலும், ஞாயிற்றாலும் விண்மீன்
கூட்டங்களாலும் ஒளியூட்டப்பட்ட வெளி விண்வெளி
அவனது பேரண்ட நிலையிருந்தலைப்
பறை சாற்றுகின்றன.
வெளிவிண்வெளியும், மண்ணகமும் வாயின் இரண்டு
தாடைகளைப் போன்றவை.
அவனது தெய்வீக விருப்பத்தின் பலத்தினால் பேரண்டம்
படைக்கப்பட்டது.



அவனது ஆற்றலை உணர்ந்தே
நாம் இவ்வாறு தொழுகிறோம் :
"எல்லாம் வல்ல இறைவனே, உயர்ந்த இன்பத்தை
அடைய வழிகாட்டிடு, ஊக்கம் ஊட்டிடு.
இந்த அண்டத்தில்
ஒவ்வொரு முயற்சியிலும் முன்னேறுவோமாக.
உன் அன்பின் அமுதத்தை எங்களுக்கு அருள்வாயாக.
இந்த உலகம் அற்புத அழகுடன் விளங்கட்டும்.
இறுதியாக, எல்லா வகைகளிலும் நிலைத்திருக்கும்
அமைதியையும், மகிழ்ச்சியையும் வழங்குவீராக."

(இருக் 10)

முதலில் படைக்கப்பட்டது விண்ணுலகம் சார்ந்த பகுதி.
படைப்பில் மிகவும் ஆற்றல் வாய்ந்தது செஞ்ஞாயிறு.
அண்டத்திற்குக் கிடைத்த மிகவும் பேரொளியான
பகுதி, நிலம்
எல்லாவற்றையும் விழுங்கி நிற்பது இரவு.

(யசுர் 23)



## பொன்னிற வைகறை

வானகமும், மண்ணகமும், நாம் உயிர் வாழ்வதற்கான
மழை நீரைத் தருகின்றன.
பனித்துளிகள் மின்னிட கொடை வள்ளவான பருதி
மறையும் மாலைக் காலங்கள்
நமக்காகப் பாடுபடுகின்றன.
மனிதகுலம் தழைத்தோங்குவதற்காக,
அவை தெய்வீகப் களஞ்சியங்களை அனுப்புகின்றன.
(இருக் 5)

நடையழகு, மொழிநடை, நிறைவுக்குக் கட்டுப்பாடு,
செந்நிறம், ஒளிவெள்ளம், இத்தனையும் கொண்டு
செங்கதிர் ஒளிவெள்ளத்தைப்
பரப்பிக்கொண்டு தோன்றுகிறது.
முனிவர்கள் அவளுக்குப் புகழ்ப் பாடல்கள் பாடுகிறார்கள்.
(இருக் 5)



அழகிய காலைப்பொழுது மக்களைத் துயிலெழுப்புகிறது.
நடப்பதற்கு ஏற்றதாக வழியினைச் சீராக்குகிறது;
மேலே வழி நடக்கிறது.
ஊக்குவிக்கும் சிறந்த ஆற்றலாகிய அவன் தன்
மேன்மை மிக்க தேரைச் செலுத்திச் தனது ஒளியைப்
பகலின் தொடக்கத்திற்கு முன்னே பரப்புகிறான்.

(இருக் 5)

கருஞ்சிவப்பான எருதுகளைத் தன் தேருக்குப் பூட்டி,
எவரையும் நோகச் செய்யாமல் என்றும் நிலைத்திருக்கும்
செல்வத்தை அளிக்கிறான்.
மகிழ்ச்சியான வாழ்க்கைக்கு நெறி அமைக்கிறான்.
எல்லோராலும் போற்றிப் புகழப்பட்டுத் தான் அளிக்கும்
ஒவ்வொரு வாழ்த்துடனும்
தன்னை மெருகேற்றிக் கொள்கிறான். (இருக் 5)

காலைப் பொழுதின் பொன் ஒளிக்கீற்று ஒருவனின்
வாழ்க்கையில் தெய்வீக ஒளியை நிரப்புகிறது.

(சாம 303)

நிறம் மாறி ஒளி பெருகித் தோற்றமளிக்கும் அவன்
கிழக்குத் திசையிலிருந்து தன் உடல் வண்ணத்தை
வெளிபடுத்துகிறான். செல்லவேண்டிய வழித் தடத்தை
செம்மையாகப் பின் பற்றுகிறான். பொருண்மைகளை
நன்குதெரிந்து வைத்துள்ளவன்போல்,
வழி மாறிச் செல்வதில்லை. (இருக் 5)



நீராட்டத்திற்குப் பின் ஒருவன் புத்துணர்வை நுகர்வதைப்போல்,
தன் உடல் புதுப்பொலிவு பெற்றிருப்பதைக் கண்டு
அவன் நம் கண் முன்னே தோற்றமளிக்கிறான்.
இருண்மை நீக்கி, வெறுப்பை ஒதுக்கிக்,
காலைப்பொழுதில் அவன் துறக்கத்தின் புதல்வனாய்
ஒளிமயமாய்க் காட்சியளிக்கிறான். (இருக் 5)

சமூகத்தில் சிறந்த விண்ணகத்தின் புதல்வன்
மகளிர் முன் தலை நிமிர்ந்து நிற்கிறான்.
தன்னைப் புகழ்பவனுக்கு வரங்கள் வழங்கி, என்றும்
இளமையோடிருக்கும் காலைப்பொழுதின்
ஒளியை தன்னுடனே கொண்டு வருகிறான்.
(இருக் 5)

ஒளி வீசும் காலைப் பொழுதின் வெள்ளை,
இளஞ்சிவப்பு, வண்ணங்கள் கடலலைகள்போல
உயர்கின்றன.
எல்லா வழிகளையும் பயணம் செய்யத் தெளிவாக்குகிறான்.
அன்புள்ள, தோழமையுள்ள தன் சீர்த்தியை
வெளிப்படுத்துகிறான். (இருக் 5)

தெய்வீகம் பொருந்திய காலைப் பொழுதே,
பறவைகள் கூட்டிலிருந்து வெளிக் கிளம்பி பறந்து
செல்லும் போது, மக்கள் வேலைக்குப் புறப்பட்டுச் செல்ல
வேண்டும்;.
தங்கள் வாழ்க்கைக்குத் தேவையானவற்றை
நிறைவேற்றி கொள்ளவேண்டும். (இருக் 6)

வானகத்தின் இந்தத் தெய்வ மகள் இருளை
விரட்டியடிக்கும் அதே நேரத்தில் மனித இனத்தைத்
தூக்கத்தினின்றும் எழுப்புகிறாள்.
பேரொளி ஆற்றலினால் இருட்டின் கூர்மையை
ஊடுருவிச் சென்று சோர்வை
அகற்றுகிறாள் என்று அறியப்படுகிறாள். (இருக் 6)

காற்றின் விரைவுடன் வந்து காலைப் பொழுதுகள் நமது
வழிபாட்டை வாழ்த்தட்டும்.
கூடவே,தெய்வீக அழகையும், செழுமையையும்
கொணரட்டும். (இருக் 6)

மங்களமான காலைப்பொழுது
நாம் செல்லும் பாதைக்கு வெளிச்ச மூட்டட்டும்
நமக்குச் செல்வம், ஆற்றல், அறிவு, நிலைத்திருத்தல்
ஆகியவற்றை அளிக்கட்டும்.
செழிப்பையும், அன்பையும் கொண்டு வரட்டும்.
தெய்வீக ஆற்றல்களுடன் இணைந்து நமக்கு அருளை
வழங்கிக் கொண்டேயிருக்கட்டும். (இருக் 7)

தீங்கு உண்டாக்காதவையாகவும் சிறப்பாகவும் இந்தப்
பாதைகளை நான் காண்கிறேன்.
அவை நம்மைத் தெய்வீக ஆற்றல்களிடம் இட்டுச் செல்கின்றன.
காலைப் பொழுதின் அழகொளி கிழக்கில் கட்டற்றுச் சுடர்
விடுகிறது, மேற்கு முகமாக நகர்கிறது,
அதி உயரத்திற்குச் செல்கிறது. (இருக் 7)

இரவுகள் நமக்கு நலமளிக்கட்டும்,
காலைப் பொழுதுகள் நம்மை ஊக்குவிக்கட்டும்,
மண்ணுலகின் தூசு மென்மையாயிருக்கட்டும்,
விண்ணவர் உலகம் நம்மிடம் பரிவு காட்டட்டும்.
(இருக் 7)





# இரவும் விடியலும்

புதையல் அடங்கிய ஒரு மரத்தை
இரண்டு ஆர்வலர்கள் நெருங்குவதைப் போல,
அவையை நோக்கிப் புகழப் பாடல்கள் பாடிக்கொண்டு
வருகிற இரட்டை அந்தணர்களைப் போல
பல இடங்களுக்கும் சென்று வருகிற
மக்களின் இரட்டை தூதுவர்களைப்போல,
இரவு பகலாகிற தெய்வீக இரட்டை ஆற்றல்களே,
பொதுவான ஒரு குறிக்கோளுடன்
இணைந்து நெருங்கி வாருங்கள். (இருக் 2)

காலைப் பொழுதில் தேரில் பவனிவரும் இரண்டு
போர் வீரர்கள் போல,
தங்களை நன்கு அலங்கரித்து வருகிற இரண்டு
அணங்குகள் போல,
மக்களிடையே, அறிவுக்கூர்மையுள்ள புதுமண
இணையர்களைப் போல, எங்களை நெருங்கி வாருங்கள்.
(இருக் 2)



த.கோ - தி.ஸ்ரீ

இரண்டு கலைமான் கொம்புகள் போல எங்களிடம்
இங்கே நெருங்கி வாருங்கள்.
விரைவான நடை கொண்டு வீறுடன் பறக்கும்
இரண்டு குதிரைக் குளம்புகள் போல,
காலைப் பொழுதில் வருகிற
இரண்டு அன்றில் பறவைகள் போல,
தேரில் வரும் இரண்டு திறன் வாய்ந்த
போர்வீரர்களைப் போல எங்களிடம் நெருங்கி வாருங்கள்.
(இருக் 2)

சுழல்வீச்சு கொண்ட இரண்டு காற்றின் ஆற்றலைப்போல,
ஒன்றிணையும் இரண்டு ஆறுகள் போல,
விரைந்து உற்றுக் காணும் இரண்டு விழிகள் போல,
எங்களிடம் நெருங்கி வாருங்கள்.
உடலுக்கு மிக்க உதவியாயிருக்கும் இரண்டு கைகள்
போல, நெருங்கி வாருங்கள்.
இரண்டு கால்கள் போல,
எங்கள் நல் வாழ்வுக்கு இட்டுச் செல்லுங்கள்.
(இருக் 2)

வாய் வழியே இனிமையாகப் பேசுகிற
இரண்டு இதழ்கள் போல,
நமக்கு உயிரூட்டும் கொங்கைகள் போல,
நமக்கு உயிராற்றலளிக்கும் இரண்டு மூக்குத் துளைகள்
போல, நன்கு கேட்கும் இரண்டு காதுகள்
போல, எங்களுடனேயே இருங்கள். (இருக் 2)



விண்ணுலகும், மண்ணுலகும் வளிமண்டலத்தை
அழுத்தி விடுகின்றன.
இரண்டு கைகளும் எங்களுக்கு உரமளிக்கின்றன.
ஓ, இரட்டைத் தெய்வீக வலிமைகளே, உங்களை நோக்கி
புறப்பட்டு வரும் எங்கள் பாடல்களை,
கோடாலியைச் சாணைக்கல் கூராக்குவது போல,
செழுமைப்படுத்துங்கள். (இருக் 2)

ஓ,இரட்டை தெய்வீக ஆற்றல்களே, உங்களை உயர்த்திப்
புகழ்பாடும் இந்தப் புகழ்ப் பாடல்கள் பாவல்ல
முனிவர்களால் செம்மைப்படுத்தப்பட்டவை.
அவற்றினால் நீங்கள் மகிழ்ச்சி அடையுங்கள்.
வீரர்களே, இங்கு வாருங்கள். அவையில் குழுமியிருக்கும்
வீரர்களுடன் நாங்கள் உறுதியாகவே பேசுவோம்.
(இருக் 2)

இரண்டு படகுகள் போல, எங்களை அக்கரை சேர்த்திடுவீர்.
இரண்டு கழிகள் போல,
ஆழியின் அச்சுகளைப்போல, எங்களைத் தூக்கிச் செல்க.
எங்கள் உடலுக்கு எந்தத் துன்பமும் நேராதவாறு,
இரண்டு நாயகனைப் போலக் காப்பாற்றுக.
நாங்கள் கீழே விழுந்து விடாமலிருக்க இரண்டு ஊன்று
கோல்களாயிருந்து எங்களைக் காப்பாற்றிடுக.
(இருக் 2)





## ஞாயிறு

உலகைப் படைத்த மேலானவனுக்கு நாங்கள் வணக்கம் செலுத்துவது போல,
செம்பருதிக் கதிர்களினால் முத்தமிடப்படும் ஆற்று நீருக்கு நாங்கள் நன்றி செலுத்துகிறோம்.

(இருக் 1)

ஞாயிற்றின் தேர்ச் சகடங்களுக்கு
இரண்டு பணிகள் உள்ளன;
ஒன்று அறிவைப் புகட்டுகிறது,
மற்றொன்று தீமைகள் யாவற்றையும் அழிக்கின்றது.

(இருக் 5)

தனது ஒளிமிக்க விரைவுள்ள தேரை அணியமாக்கிய உடனேயே, ஞாயிறு பேரொளிமயமான வானகத்தின் மேல் செல்கிறான். பெருங்கடலூடே கப்பல் செல்வது போல், இறைவன் அவனை இயங்கச் செய்கிறான்.

(இருக் 5)





செங்கதிர் சீரொளி வீசுகிறான்.
கூடவே ஒளி படாத பகுதிகளையும் மிளிரச் செய்கிறான்.
என்றும் நிலைத்திருக்கும் புடவியின் ஒழுங்குகளுக்கேற்ப
காலைப் பொழுதுகளுக்கு ஒளியூட்டுகிறான்.
அண்டத்தின் அறங்களுக் கேற்பத்
தெய்வீகக் கதிர்களுடன் கூடவே அவன் நகர்கிறான்.
மகிழ்ச்சியடையச் செய்யும் நரம்பு மையங்களை
அவன் மாந்தர்களுக்கு அருள்கிறான். (இருக் 6)

மாந்தர்களின் நல்ல, தீய செயல்களைக்
கண்காணித்து வரும் பகலவன்
அவர்களுடைய எண்ணங்களை எதிர்ரொலிக்கிறான்.
(இருக் 6)

தனது பாதுகாப்பைக் கதிரவன்
நமக்கு அட்டியில்லாமல் அளிக்கட்டும்.
ஆறு முகில்கள், மருந்துச் செடிகள், பசுமை,
இவை யாவும் நமக்கு மகிழ்ச்சியைத் தரட்டும்.
தீத்தெய்வம் நமது தந்தையாக
இருக்குமாறு வேண்டுவோம். (இருக் 6)

செங்கதிரோன் தனது பொன் மயமான தோள்களை
நம் பக்கம் நீட்டுவானாக.
சிறந்த ஒரு பேச்சாளனைப்போல்
நமக்கு உந்தாற்றல் ஊட்டுவானாக. (இருக் 6)

செங்கதிர்த் தேவன் ஒளி வட்டத்திலிருந்து
தனது பொன்னிறப் புத்தொளியை
வானகத்தின் மேல் பாய்ச்சுகிறான்.



உண்மையிலேயே, பரிவுள்ள ஞாயிறு
எல்லோராலும் போற்றப்படுகிறான்.
காரணம் அவன் பெரும் செல்வன். அன்புடன் அதை
மற்றவர்களுக்கிடையே பகிர்ந்தளிப்பவன். (இருக் 7)

விலைமதிக்க முடியாத செல்வத்தை உடையவனும்
விண்ணகத்தைத் தன் ஒளியினால் நிறைப்பவனுமான
செங்கதிர்த் தேவன் தன் ஒளிக் கோடுகளினால்
தாங்கப்பட்டுச் செல்வம் கொழிக்கும்படி
நாம் விளக்க நம்மை வாழ்த்தட்டும்.
இருள் சூழும்போது
அவன் அனைவரையும் உறங்க வைக்கிறான்.
அதேபோல், பொழுது விடிகையில்,
அவர்களை எழுப்பி விடுகிறான். (இருக் 7)

விரிந்து பரந்துள்ள ஞாயிற்றின் பொன்மயமான
தோள்கள் விசும்பின் உச்சத்தை எட்டட்டும்.
ஒளிவீசும் ஞாயிறு
நமது உளளுயிர்களுக்கு வலிமை ஊட்டட்டும்.
(இருக் 7)

ஆற்றல் படைத்த செல்வத்திற்கு அதிகாரியான
செஞ்சுடர்த் தேவன்
நம் மீது செல்வங்களைப் பொழியட்டும்
ஒளிபரப்பும் அவன் நம் யாவருக்கும் ஊட்டமளிக்கட்டும்
(இருக் 7)



கதிரவனைப் போன்றே ஒளி மிக்கனவாகவும், நெருப்புப் போன்ற சுடர்கள் உள்ளனவாகவும் இருக்கிற தெய்வீக ஆற்றல்கள் பல உண்டு.
அவை யாவும் நமது போற்றுதலுக்கு உரியவை.
தங்களுடைய பெரும் வலிமை மூலம் உலகளாவிய வேள்வியாகச் செயல்களை நடத்தி வைக்கிறான்.

(இருக் 7)

இயற்கையின் நலமிக்க பேறுகளில் கண்போன்றவனும்,
கதிரவன் மண்டல அமைப்பின் தலைவனுமாகிய
செங்கதிர்த் தேவன் அழிவற்ற அனைத்து
நலன்களும் அளிக்கும்
ஒளியை எங்கும் பரப்புகிறான்.
படைப்பின் முழு முதலாகிறவன் அவன்,
எல்லா இடங்களையும் தெளிவாகத் தெரியவைக்கிறான்.

(இருக் 7)

முடிவுகாண முடியாத அன்னையின் குழந்தையாகிய
தங்களுக்குத் தாங்களே ஒளி அளித்துக் கொள்ளும்
செங்கதிர்த் தேவர்கள் நோய்களை அகற்றட்டும்;
பகை மனப்பான்மையை விரட்டட்டும்.
துயரங்கள், துன்பங்கள்
நம்மை நெருங்காதிருக்கச் செய்யட்டும். (இருக் 8)

இருந்த இடத்திலேயே இருந்தாலும் சரி,
நகர்ந்து கொண்டே இருந்தாலும் சரி,
ஞாயிறே உலகின் உள்ளுயிர். (அதர் 13)





பிறப்பு, இறப்பு ஆகிய தளைகளிலிருந்து
உதய ஞாயிறு நம்மை விடுவிக்கட்டும். (அதர் 17)

ஞாயிற்றின் கதிர்கள் நோய் நொடிகளை
விரட்டியடிக்கின்றன.
முரண்பாடுகளைச் சிதறடிக்கட்டும்.
தீவினைகள் செய்வதிலிருந்து தடுத்து நிறுத்தட்டும்.
(சாம.397)

ஓ, செங்கதிர்த் தேவனே,
நீ வருகை தருகையிலேயே,
உயிரினங்கள் யாவும் விழித்தெழுகின்றன.
பறவைகள் கூட்டம் கூட்டமாகத்
தங்கள் தங்கள் இருப்பிடத்திலிருந்து கிளம்பி
உன்னை வரவேற்க ஒன்றிணைகின்றன. (இருக் 1)







# முழு நிலாக் காலம்

ஒளிமயமாய் ஒளிரும் உவாமதி இரவே,
நான் நன்கு ஆக்கியிருக்கும் புகழ்ப் பாடல்களால்
உன்னை வழிபடுகின்றேன்.
அவர் நம் வேண்டுதல்களுக்குச் செவி சாய்க்கட்டும்;
அவற்றை ஏற்றுக் கொள்ளட்டும்.
நமது எண்ணங்களையும், செயல்களையும் உலகம்
மயங்கும் இன்னிசையாக ஒன்றிணைக்கட்டும்.

(இருக் 2)

வாரி வழங்கும் பண்பு படைத்த முழு நிலவே,
அழகும், கவர்ச்சியும் கொண்டுள்ள நீ,
எங்களுக்கு மன அமைதியையும் செழிப்பையும்
அளிப்பாய்.
உனது வாழ்த்துகளை
ஆயிரம் மடங்கில் எங்களுக்கு அருள்வாய். (இருக் 2)



மூலை முக்கிலிருந்தெல்லாம் வெளிப்பட்டுச் சிறந்த
வனப்பான ஆடையணிந்த, இரவணங்கே,
நீ வருக, வருக.
தங்கள் கூடுகளில் ஓய்வெடுத்துக்
கொண்டிருக்கும் பறவைகளைப்போல்
நாங்கள் உனக்கு நல்வரவு கூறுகிறோம்.
நிலத்தில் நடப்பன, வானில் பறப்பன அனைத்தும்
மாலை நேரத்தில் தங்கள் தங்கள் வீடுகளுக்கும்
கூடுகளுக்கும் திரும்புகின்றன.
ஓ,இரவே, உனது, உன்னதமான புகழுடன் வந்திடுவாய்.

(இருக் 10)





# தெய்வீக முகில்களும், காற்றுகளும்

பேரண்டத்தின் ஒழுங்கினால் காப்பாற்றப்படும்,
ஒளிமயமான, விரைவுள்ள ஆற்றலுள்ள,
முதன்மையான காற்றுகளே,
வறண்ட நிலங்களுககு மழையை அனுப்பி வையுங்கள்.
(இருக் 1)

தன் நலமளிக்கும் கைகளினால் தடவி,
தவழ்ந்து வரும் இளந்தென்றல்
நமக்குப் புத்துணர்ச்சி தந்து தெம்பு அளிக்கட்டும்.
அதே போன்று அருள் பாலிக்கட்டும்
நிலத்தாயும், செங்கதிர்த் தந்தையும்.
செடி கொடிகளின் மருத்துவ குணங்கள்
நமக்கு உயர்ந்த உடல் நலம் அளிக்கட்டும்.
(இருக் 1)

கொடுமையாய் காட்சியளிக்கிற கொண்டல்களும்:
நமக்கு உதவி செய்பவையாகவே வருகின்றன. (இருக் 5)



த.கோ - தி.ஸ்ரீ

அனைத்து வலிமையுள்ள இறைவன் அன்பர்களின்
வேண்டுதல்களைத் தெய்வீகக் காற்றுகளுக்குத்
தெரிவிக்கிறான்.
அவை நிலத்திற்குப் பனித்துளிகளை அனுப்புகின்றன.
(இருக் 5)

ஓ, கொண்டல்களே, மழை பொழிபவைகளே.
விண்ணிலிருந்து மண்ணிற்கு நீங்கள் நீர்த் தாரைகளை
அனுப்பிவீர்களாக. உலகை வாழச் செய்பவர்களே, நல்ல
மனிதர்களின் செல்வத்தை வளரச் செய்யுங்கள்.
(இருக் 6)

கார் முகில்களைத் தாங்கிச் செல்லும் காற்றுகளே,
மழை பொழிபவர்களே,
விண்ணிலிருந்து நீரைப் பொழிவீர்களாக.
அடிப்படையான கொள்கை வைத்திருப்பவர்களே,
புகழுரைகளைக் கேட்டு மகிழ்வடைபவர்களே. உலகத்தை
வாழ வைப்பவர்களே, உங்களைப் பாராட்டுகிறவர்களின்
செல்வத்தைப் பன் மடங்காகச் பெருகச் செய்வீர்களாக.
(இருக் 6)

நம்மை மேலெழச் செய்வதற்காக அன்புடன் முகில்கள்
கீழிறங்கி வரட்டும். நமது இன்னல்களில், அவை
பெரியவையோ, சிறியவையோ
எப்படி இருந்தாலுமே, உதவி செய்யட்டும். (இருக் 6)

கொள்கைப் பிடிப்புள்ள உனது தேர்,
கெட்ட எண்ணமில்லாமலிருக்கட்டும்.
ஒட்டுபவன் இல்லாத, குதிரைகளில்லாத அவற்றிற்கு



தீவனத்தின் தேவையில்லாத எந்தக் குறிப்பிடத்தக்க
அடையாளமுமில்லாத நீரைப் பரவலாகிற, உதிர்க்கிற,
விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்கிற இந்தத் தேர்
விண்மீன் இடைவெளி எங்கிலுமாக ஊர்ந்து
செல்லட்டும். (இருக் 6)

தென்றலின் மூச்சுக் காற்றில்
வானத்தில் ஊர்கின்ற முகில்கள்
விண்ணிலிருந்து மண்ணுக்கு இறங்கி வருகின்றன.
பல்வேறு வண்ணங்களில், அழகு மிளிர இங்குமங்கும்
ஆடி அசைந்து, பொங்கிப் பெருக்கெடுத்து
இந்த முகில்கள் மழைபொழிந்து உயிரளிக்கும் அமுத
துளிகளினால் நம் நிலத்தை நனைக்கின்றன.

(இருக் 7)

ஓ, கொண்டல்களே, மின்னி ஒளிரும் உங்கள்
அணிகலன்கள் உம் தோள்களில் தவழட்டும்.
ஒளிரும் ஆரங்களான அவை மதாணிகளாக
உங்கள் மார்புக்கு அணி செய்கின்றன.
மழைத்துளிகளால் மின்னிக்கொண்டு ஒளிச்சிதறல்களாய்
நீங்கள் உங்கள் மின்னொளிப் படைகளைச் சுழற்றி
மழைத் தாரையை எங்கும் பொழிகிறீர்கள்.

(இருக் 7)

விரைவாய் நகர்ந்து கொண்டிருக்கின்ற இந்தக் காற்றுகள்
ஆர்வமாகத் தொழுபவனுக்கு மகிழ்ச்சியளிக்கின்றன.
வலிமையாளரின் வலத்தை அடிபணிய வைக்கின்றன.



தங்களை வணங்குபவர்களைத்
தீமை செய்யும் தீயவர்களிடமிருந்து காக்கின்றன.
கெடுமதியாளர்களிடம் தங்கள்
நிறைவின்மையை வெளிக்காட்டுகின்றன. (இருக் 7)

தெய்வீக விரைவாய் விளங்கும் வளி இறையே,
உலகெங்கிலும் நிறைந்திருக்கும்
படைப்பாற்றலுக்கு அடிப்படைப் பண் நீ. (இருக் 7)

ஆற்றல் வாய்ந்த காற்றுகளே,
அண்ட வேள்வியின் தலைவர்களே,
பாய்ந்து வரும் பருந்துகளைப் போன்று சீறி வருவீர்களாக,
வலுவான குதிரைகள் பூட்டிய தேரிலமர்ந்து
அருவியாக மழையைக் கொட்டச் செய்வீர்களாக.
(இருக் 20)

புயலைப் போன்று முழக்கம் செய்பவையும்,
மின்னல் போல சடசடவென வெடிப்பவையும்,
ஆழியின் அடி ஆழங்களைச் சீறிச் செல்பவையுமாகிற
முகில்களைத் தாங்கிச் செல்கிற காற்றுகளை
நான் தொழுகின்றேன். (இருக் 8)

புகழ்ப் பாடல்கள் மூலம் நேர்வழியில்
சிந்தனை செய்யும் முனிவர்கள் போல,
தங்கள் காணிக்கைகளின் மூலம் தெய்வங்களை
வழிபடுகிற பக்திமான்கள் போல,
நகைகளினால் அலங்கரிக்கப்பட்டு வியப்புக்குரியதாய்க்



காட்சி தரும் மன்னர்கள் போல்,
மக்கள் தலைவர்களாகப் பணிபுரியும்
போர் வீரர்கள் போல.
மார்பில் அணிந்திருக்கும் தங்க அணிகலன்கள்
நெருப்பு போன்று ஒளிவீசும்,
தங்களைத் தாங்களே நுகத்தடி பூட்டிக்
கொள்ளும் காற்றுகளே,
அவர்கள் உடனுக்குடன் உதவி கொண்டு
வருபவர்கள்.
உயர்ந்த வழிகாட்டிகள்,
சிறந்த அறிவாளிகள் போல,
நெறிமுறைகளுக்குக் கட்டுப்பட்டு
நடக்கிறவனுக்கு சோமமது
தகுந்த புகலிடம் அளிப்பது போல. (இருக் 10)

காற்றுகள் போல், அவர்கள் மற்றவர்களை ஒடுங்கச்
செய்பவர்கள், விரைவாகச் செல்பவர்கள், தீயின்
நாக்குகளைப் போல அவர்கள் ஒளிமயமாய்
மிளிர்பவர்கள் கவச மணிந்த வலிமை வாய்ந்த
போராளிகள் போல், தொல் பழங்கால முனிவர்களில்
போற்றிப் பாடல்களாகிற பரிசை பெற்றவர்களைப் போல,
(இருக் 10)

ஒரு முனையில் ஒன்றாய் இணைந்திடும்,
தேராழியின் ஆரங்கள் போல்
விண்ணுலகத்து வெற்றி வீரர்கள் போல்



அழகான பொருள்களை அள்ளி வீசும் மணமகளுக்குப் போட்டியிடும் இளைஞர்கள் போல், அவை யாவும் தொழுகைப் பாடல்கள் பாடும் கலைஞர்களைப் போல் ஒரே பண்ணில் இசைபாடுபவர்கள் போல்.

(இருக் 10)

ஒரே குரலில் சாமகீதம் இசைக்கும் சாம ஓதிகளைப்போல், உயரத்திலிருந்து, கீழ்நோக்கிப் பாய்ந்து வரும் நீர்போல், பரிசுக்குப் போட்டியிடும் கொடைத் தன்மை வாய்ந்த தேரில் வரும் வீரர்களைப் போல, சுழற்காற்றாய்ச் செல்லும் உயரின புரவிகளைப் போல, திகழ்பவர்கள் அவர்கள்.

(இருக் 10)

தோரணையுடன் முன்னேறிச் செல்லும்
பெருவள்ளல் போல்,
அழகான அன்னையர்களின் விளையாட்டுக்
குழந்தைகள் போல்,
துண்டு துண்டாய்ச் சிதறிப்போகும் கற்களைப்போல்,
காட்டாறுகளின் அடியில் சிதறிக் கிடக்கும்
சிறுகற்களைப் போல்,
அவை யாவும் இளங்கோக்களே. (இருக் 10)

காலைப்பொழுதின் கதிர்களைப்போல வேள்விகளில்
கனன்றெழுந்து, ஒளிமயமாய்த் திகழவேண்டுமென்றே
ஆர்வத்தால் அணிகலன்கள் அணிந்து
அவை ஒளிர்கின்றன.
மின்னும் ஈட்டிகளைக் கையிலெடுத்து ஆறுகள் போன்று
விரைந்து பரந்த விரிந்த தொலைவை
அவை அளந்தெடுக்கின்றன. (இருக் 10)



ஓ, தெய்வீக ஆற்றல்களே, செல்வத்தின் அதிகாரிகளே,
உங்கள் புகழ்பாடி, முகில்கள்
எங்களை நெருங்கி வருகின்றன.
நாங்கள் உங்களைப் போற்றிப் புகழ்ந்து
நமது நட்பையும், இயற்றிய பாடல்களையும்
நினைவு படுத்திக் கொள்ளுங்கள்.
நெடுங்காலந் தொட்டே நீங்கள் எங்களுக்குப் பரிசுப்
பொருள்களை அளித்து வந்தீர்கள். (இருக் 10)

ஓ! தெய்வீகக் கொண்டலே, அழிவற்ற மகிழ்ச்சிக்
களஞ்சியம் உன்னுடன் ஒளிந்து வந்துள்ளது.
அதில் ஒரு சிறிது எனக்கு வழங்குவாய்,
மகிழ்வின்பத்தில் நான் வாழ வழி செய்வாய்.
(இருக் 10)









## தாய் நிலம்

வாய்மை என்றும் நிலைத்திருக்கும் உயர்ந்த
உறுதியான ஒழுங்குமுறை, தன்னளிப்பு, எளிமை,
வழிபாடு, சமயத் தொடர்பான வினைப்பாடுகள்
இவை யாவும் நிலத்தைத் தாங்கி நிறுத்துகின்றன.
இது வரையும் இருந்த இனியும் இருக்கப் போகிற
அவள் நமக்கு விரிந்த இடமளிக்கட்டும். (அதர் 12)

நானிலம் பற்பல ஏற்றங்கள், சரிவுகள், மனிதர்களை
ஒன்றாக இணைக்கிற எல்லையற்ற
சமவெளிப் பகுதிகள் கொண்டது.
நோய்களைத் தீர்க்கும் மருத்துவப் பண்புள்ள
செடிகள் பலவுண்டு அவற்றில்,
நமக்கு விரிந்த இடம் அவள் தருவாளாக.

(அதர் 12)

கடல், ஆறு, நீர், நிலைகள் நிலவுலகில் உள்ளன.
உணவு, கூல வயல்கள் ஆகியவை





உள்ளன அவளிடத்தில்.
இயங்காத்திணை, இயங்குதிணை
யாவையும் அவளிடத்து வாழ்கின்றன.
தனது அறுவடைகளில் சிறந்தவற்றை
அவள் எங்களுக்கு அளிப்பாளாக. (அதர் 12)

நானிலப் பகுதிகளுக்கும் மண்ணகமே தலைவி.
உணவு, கூல வயல்கள் ஆகியவை
உள்ளன அவளிடத்தில்.
உயிர்ப்பவையும், நகர்ந்து கொண்டிருப்பவையுமாக
உள்ள வகை வகையான உயிரினை
அவள் உண்டாக்குகிறாள்.
ஆடு, மாடுகள், கூலம் ஆகியவற்றை
அவள் எங்களுக்கு அளிப்பாளாக. (அதர் 12)

தாய் நிலத்தில் நமக்கு முன்னரே, மக்கள் வாழ்ந்ததுண்டு.
பல வகையான வேலைகளையும்
அவர்கள் செய்துள்ளனர்.
தீய ஆற்றல்களை வென்றிருக்கின்றனர்.
குதிரைகள் பறவைகள் ஆகியவற்றின் இருப்பிடமான
தாய் நிலம் வாழ்வின் பொருளை நமக்குப் புரியவைத்து,
அதற்கு ஒளியேற்றட்டும்.
புதையல் அடங்கிய, வாழ்விற்கு அடிப்படையாயிருந்து
அதை நிலை நிறுத்துகிற இடங்களையும்,
பொன்னிறமான, வாழ்வு இயங்கிக் கொண்டிருக்கிற
இருப்பிடத்தையும் தன்னிடத்தில்
கொண்டுள்ளது தாய்நிலம்.





புனிதமான உலகப் பேரொளியைக்
கொண்டுள்ளது தாய் நிலம்.
அனைத்து வல்லமையுள்ள இறைவனும்,
அறிவில் சிறந்த முனிவர்களும்
எங்களுக்குச் செல்வமளிக்கட்டும். (அதர் 12)

உறக்கமற்ற எப்போதும் விழித்திருக்கிற பேருலக
ஆற்றல்களால் நெறி மாறாமல் பாதுகாக்கப்படும்
நிலத்தாய் பலவகையான செல்வங்களை
நமக்கு அளிப்பாளாக.
நமக்கு ஒளியூட்டுவாளாக. (அதர் 12)

அழிவற்ற மெய்மைக்குள் நிலை பெற்றிருக்கிறது
துறக்கம், கடல் நீரின் உயிர்நாடியே இதுதான்.
முதன் முதலில் நிலம்
இந்த கடல் நீருடன் இணைந்து கொண்டது.
இந்தத் தாய் நிலம் நமக்கு
ஒளியையும் ஆற்றலையும் அருளட்டும். (அதர் 12)

இரவு பகலாக எல்லாப்பக்கங்களிலும்
ஓடிக்கொண்டிருக்கிற யாவருக்கும் பொதுவான
ஆறுகள் மண்ணகத்தில் உள்ளன.
இந்த நிலத்தாய் பலவகையான செல்வங்களையும்
நமக்கு அளிப்பாளாக, நமக்கு ஒளியூட்டுவாளாக.
(அதர் 12)

ஓ, நிலத்தாயே, உனது, அழகிய குன்றுகள், பனிபடர்ந்த
மலைகள், கானகங்கள் இவை யாவும்





மகிழ்ச்சி தருபவையாயிருக்கட்டும்.
பழுப்பு, கறுப்பு, சிவப்பு வண்ண வண்ணக் கோலங்கள்
ஆகிய நிறங்கள் கலந்த வனப்புமிகு நிலத்தாயே,
உனக்குப் பாதுகாப்பளிப்பவர்
வல்லமை வாய்ந்த இறைவன்.
இந்த மண்ணில் தோற்கடிக்கபடாதவனாகப்
புண்படுத்தப் படாதவனாக
நான் நிமிர்ந்து நிற்கிறேன். (அதர் 12)

ஓ, நிலமே, உனது மையமான தொப்புழ்ப் பகுதியில்
உடலிலிருந்து வெளிப்படும் உரமளிக்கும் ஆற்றல்
இவற்றுக்கு இடையே இருக்கும் பகுதியில்
என்னை நிலைநிறுத்தி விடு.
எல்லாப் பகுதிகளிலிலிருந்தும்,
என்னைத் தூய்மைப் படித்திடுவாய்
இந்த மண் என் தாய்; நான் அவளுடைய மகன்.
வரையற்ற நிலப்பகுதி என் தகப்பனார்; அவர் எனக்குத்
தேவையானவற்றை எல்லாம் அளித்திடட்டும்.
(அதர் 12)

நிலத்தின் மேல் உயரமான திருவிடம்
அமைக்கப்பட்டுள்ளது.
வெவ்வேறு துறைகளில் பயிற்சிபெற்ற தொழிலாளிகள்
வேள்வியின் வலையைப் பின்னுகின்றனர்.
புகழ்ப் பாடல்களைத் தொடங்குவதற்கு முன் இரண்டு
உயரமான பளபளப்பான தூண்கள் நடப்படுகின்றன.
தன் செழித்து வளரும் நேர்த்தியிலேயே எங்களுக்கும்
நிலம் வளமருளட்டும். (அதர் 12)



ஓ, நிலத்தாயே, நம்மை வெறுக்கிறவன்
நமக்கெதிராகச் செயல்படுகிறான்.
தன் சிந்தனையினாலும், படைகளினாலும்
அச்சுறுத்துகிறான்.
முன்னைப் போலவே, ஓ, நிலத்தாயே
அவனை வென்றிடுவாய். (அதர் 12)

உன்னிடமிருந்து தோன்றியவர்கள் உன்மீதே நகர்ந்து
செல்கின்றனர். அழியும் இந்த உயிரினங்களை அந்த
இரண்டு கால், நான்கு கால் உயிரிகளை
நீ தாங்கி நிற்கிறாய்.
ஓ, நிலமே, உன்னுடையவர்கள் ஐந்து மரபினைச்
சேர்ந்தவர்கள். அழியும் இந்த மனிதர்களுக்கும் ஞாயிறு
தான் உயரே கிளம்புகையில்
அழியாத தன் ஒளியைச் சென்றடைகிறது. (அதர் 12)

எல்லா உயிரினங்களுமாக ஒருங்கிணைந்து
வாழ்த்துகளை வழங்கட்டும்.
ஓ, அன்னை நிலமே, தேன் போன்ற பேச்சுத் திறனை
எனக்கு அளித்திடுவாய். (அதர் 12)

விரிந்து பரந்தது உனது இருப்பிடம்.
உன் விரைவு, நடை, அதிர்வு,
எவையும் சொல்லிலடங்கா. வல்லமை வாய்ந்த
இறைவன் என்றும் உன்னைக் காத்தருள்கிறான்.
ஓ, நிலத்தாயே, பொன் போன்ற பளபளப்புடன்
எங்களை மிளிரச் செய்திடுவாய்.
எங்களை எவரும் வெறுத்திடாமலிருக்கட்டும். (அதர் 12)



நிலத்துக்குள் தீ உள்ளது
அதேபோல் செடி கொடிகளிடமும், தண்ணீர்.
அதை எடுத்துச் சுமக்கிறது.
கல்லிலும் நெருப்பு உள்ளது.
மாந்தர்களுக்குள்ளிலும் ஓர் ஆழத்தில் தீ இருக்கிறது.
பசுக்களிடமும் குதிரைகளுக்குள்ளும் ஒரு தீ இருக்கிறது.
(அதர் 12)

விண்ணுலகில் எரிகிற அதே நெருப்பும்
நடுவானில் எரிகிற அதே நெருப்பும்
இந்தத் தெய்வீகத் தீய்க்கு உரியதே.
தேவர்களுக்கு அளிக்கப்படும் அவிர்பாகத்தை தாங்கிச்
செல்லும் உருகிய வெண்ணையை விரும்பும்
இந்த நெருப்பை மனிதர்கள் தூண்டுகிறார்கள்.
(அதர் 12)

நெருப்பின் நிறங்கொண்ட மேலங்கி அணிந்துள்ள
நிலமகள் தழும்பேறிட முழங்காலிட்டு என்னில்
உள்ளார்வத்தைக் கொழுந்து விட்டு
ஓங்கி எழச் செய்யட்டும்.
என்னை அவள் பேரொளியாகச் செய்வாளாக.
(அதர் 12)

எந்த நிலத்தின் மேல் காடுகளில்
தலைவர்களாகிய மரங்கள் உறுதியாக நிற்கின்றனவோ,
ஆதரவு தரும் அந்த நிலத் தாயை
நாங்கள் வழிபடுகிறோம். (அதர் 12)





செய்யும் வேள்விகள் பல்வேறு தெய்வீக
ஆற்றல்களுக்காக அளிக்கப்படும்.
தேவருணவின் பங்கு ஆகியவற்றைத் தாங்கி நிற்பது
தாய் நிலமே. மக்களுக்கு உணவு, தண்ணீர், அளிப்பதும்
நிலமே. மூச்சு, உயிர் எங்களுக்கு அவள் அளிக்கட்டும்.
நீண்ட வாழ்நாளை அவள் எங்களுக்கு வழங்கட்டும்.

(அதர் 12)

ஓ, தாய்நிலமே, உன்னிடமிருந்து தோன்றும்
நறுமணத்தைச் செடி கொடிகளும், தண்ணீரும்
பல இடங்களிலும் பரப்புகிறது.
ஞாயிற்றின் கதிர்களும் இந்த மணத்தைப்
பகிர்ந்து கொள்கின்றன.
என்னையும் இனிய இயல்புடையவனாக மாற்று.
என்னை எவரும் வெறுக்காதிருக்கட்டும்.

(அதர் 12)

ஓ, தாய்நிலமே, தாமரை மலரில் புகுந்துள்ள
இந்த நறுமணம் அழிவற்ற தேவர்களால் முதன் முதலில்
சடங்குகளில் பயன்படுத்தப்பட்டது.
என்னை இனிய இயல்புடையவனாக மாற்று.
என்னை எவரும் வெறுக்காதிருக்கட்டும்.

(அதர் 12)

உனது நறுமணம் ஆடவர்களிடமும் பெண்களிடமும்
பரந்துள்ளது.
அந்தப் பெருமிதமும் ஒளியும் ஆடவர்களிடமும் அந்த
வீறியம் காட்டு விலங்குகளிடமும், யானையிடமும்
உள்ளது.





ஓ. தாய்நிலமே அந்தப் பேரொளி எங்களை இவர்களிடம் இணைக்கிறது. என்னை எவரும் வெறுக்காதிருக்கட்டும்.
(அதர் 12)

பாறை, மண், கல், தூசு தும்பு இவைகளால் ஆனதே நிலம். இவற்றுடன் உறுதியாய் பிணைக்கப்பட்டுள்ளது இது. பொன்மயமான மார்புடைய நிலத் தாய்க்கு என் வணக்கங்கள். (அதர் 12)

எழுந்தாலோ, அமர்ந்தாலோ, நின்றாலோ, நடந்தாலோ
எங்களுடைய வலது காலோ, இடது காலோ
நிலத்தில் என்றும் தடுமாறாதிருக்கட்டும். (அதர் 12)

தூய்மைப்படுத்தும், ஆன்மிக வன்மையினால் உறுதி
பெற்றுள்ள பொறுமையின் சின்னமாகிய தாய்நிலமே,
உன்னை நான் வேண்டிக்கொள்கிறேன்,
ஆற்றல், செழிப்பு, எங்களுக்குண்டான உணவு
ஆகியவை உள்ள நிலத்தாயே.
உன்மீது நாங்கள் சாய்ந்திருக்க இடமளிப்பாய்.
(அதர் 12)

எங்களது உடலங்களை மாசு படுத்தும் அழுக்கை நீக்கி
தூய தண்ணீர் பாய்ந்து வரட்டும்.
எங்களுக்கு எதிராயிருப்பவர்களுக்கு நாங்கள் நல்வரவு வழங்கமாட்டோம்.
ஓ, நிலத்தாயே தூய்மைப்படுத்துவதைக் கொண்டு, நான் என்னைத் தூய்மைப் படுத்திக்கொள்கிறேன்.
(அதர் 12)



உனது, கிழக்கு, வடக்கு,தெற்கு, மேற்குப் பகுதிகள்
நாங்கள் நடந்து செல்வதற்கு ஏற்ப, நலமாய் இருக்கட்டும்.
நான் உலகில் வாழும் காலம் வரை,
தடுமாறி விழாமல் இருப்பேனாக. (அதர் 12)

ஓ, நிலம் என்னும் நல்லாளே, ஞாயிற்றைத் துணையாகக்
கொண்டு உன்னைச் சுற்றும் முற்றும் பார்க்கும் காலம்
வரை, ஒன்றன்பின் ஒன்றாக ஆண்டுகள் தொடரும்
வரை, எனது பார்வை மங்காதிருப்பதாக.
(அதர் 12)

ஓ, நிலத்தாயே, நான் அள்ள அள்ளக் குறையாமல்
உனது செல்வம் சற்றும் குறையாமல், மேலும் மேலும்
வளர்வதாகத் தூய்மைப்படுத்துகிறவளே,
உனது உள்ளத்தை நாங்கள்
என்றுமே புண்படுத்தாமலிருப்போமாக. (அதர் 12)

ஓ, நிலமங்கையே, உனது கோடைக்காலம், மழைக்காலம்,
பனி மாதங்கள், குளிர்காலம், வேனிற்காலம்
இலையுதிர்காலம் ஆகிய ஆண்டின் இரவு பகல்களை
உருவாக்குகிற இத்தனைப் பருவகாலங்களும் எல்லா
வளங்களையும் எங்கள் மேல் பொழியட்டும்.
(அதர் 12)

நிலத்தின் மேல் புனிதமான
இடமும் கொட்டகையும் கட்டப்பட்டுள்ளன.
கம்பங்கள் எழுப்பப்பட்டுள்ளன.



யசுர்வேதத்தில் ஆழ்ந்த மெய்யறிவுள்ள பார்பனர்கள்
இருக், சாம வேத புகழ்ப் பாடல்களால் தொழுகின்றனர்.
தாங்கள் அளிக்கும் தெய்வீகப் பழச்சாற்றை இறைவன்
ஏற்றுக் கொள்ளும் வகையில் புரோகிதர்கள் மந்திரங்கள்
சொல்வதில் ஆழ்ந்திருக்கிறார்கள்.
உலகத்தை உருவாக்கவல்ல
அந் நாளைய முனிவர்கள் மந்திரம் ஓதுகின்றனர்.
மந்திரங்களைப் பொழிகிறார்கள், வேள்விக்கான அந்த
நிலமங்கை நாங்கள் நாடும் செல்வத்தை
எங்களுக்கு நல்கட்டும்.
இந்தப் பொறுப்பை இறைவன் நிலத்தாயாருக்கு
அளிக்கட்டும்.
எங்களை வழி நடத்தட்டும். (அதர் 12)

இறைவன் புகழ் பாடி மக்கள் ஆடிப்பாடி மகிழ்வது
நிலத்தாயின் மடியில்தான்.
போர் ஆரவாரங்கள் முழங்க களபேரிகை கொட்டப்
போர்க்களத்தில் வீரர்கள் காட்டுவது
நிலத்தின் மடியில்தான்.
அந்த நிலத்தாய் நமது எதிரிகளை விரட்டியடிக்கட்டும்
நமக்கு எதிரிகளே இல்லாதபடி செய்யட்டும்.
(அதர் 12)

வரங்கள் பல வழங்கி, அழகும் ஒளித் தோற்றமும்
கொண்டு நாம் விளங்க, இயற்கை அன்னை
நமக்கு அருள் புரியட்டும். (அதர் 12)

உணவுக் கூலங்கள், அரிசி, வரகு யாவும்
நிலத்தில் விளைகின்றன.



எல்லா வகையான மக்களும் நானிலத்தில் வாழ்கின்றனர்.
மழையுடன் கூட தானும் நனைகின்ற அவளுக்கு
எங்கள் வணக்கங்கள். (அதர் 12)

புதையல்களைப் பல இடங்களில் பதுக்கி வைத்திருக்கிற
மண்மகள் எனக்குச் செல்வம், மணிகள், பொன்
ஆகியவற்றையும் அளிக்கட்டும்.
தாராள குணமுள்ள தாய் எங்களுக்குச்
செல்வமளிக்கட்டும்,
அதனையும் அன்புடன் அளிக்கட்டும். (அதர் 12)

அரிமா, வேங்கை, சிறுத்தை, கழுதைப்புலி, ஓநாய், கரடி
ஆகிய வன விலங்குகள் காட்டில்
சுற்றித் திரிகின்றன.
ஓ, நிலத்தாயே இவற்றை என்னிடமிருந்து
வெகு தொலைவிற்குத் துரத்திவிடு. (அதர் 12)

அன்னமும், கழுகும்,வெவ்வேறு வகையான இரு கால்
பறவைகள் நிலத்தில் உள்ளன.
தும்பு தூசியை வாரி இறைக்கும் சுழற் காற்று,
வளைந்துள்ள மரங்கள் இவை யாவும் நிலத்தில்
உள்ளன.
தீக் கனலைக் கக்கிக் கொண்டு நெருப்பு,
பெருங்காற்றை முன்னும் பின்னுமாகத் தொடர்கிறது.
இரவும், பகலும் நிலத்தில் அடங்கியுள்ளன.
மழை நிலத்துக்கு மேல் கட்டியாய் விளங்குகிறது.
வீடு தோறும் உள்ள எங்களை வாழ்த்துவிப்பாயாக.
(அதர் 12)



விண்ணுலகம், மண்ணுலகம், நடுவானம், ஆகியவை
எனக்குப் பரந்த இடத்தையளித்துள்ளன.
பேரண்ட ஆற்றல்கள் யாவும் ஒருங்கிணைந்து
மெய்யான கூரறிவை அளித்துள்ளன. (அதர் 12)

வெற்றிபெற்றவன் நான்.
உலகில் மேன்மையான இடத்தைப் பெற்றவன்
என்று கருதப்படுகிறேன்.
எங்குமே எனக்கு வெற்றி, எதிலுமே எனக்கு வெற்றி.
எத்திசையிலும் நான் ஒரு வெற்றி வீரன்தான்.
(அதர் 12)

சிற்றூர்களில் காட்டில், குழுக்களில் வழிபாட்டுக்
கூட்டங்கள், ஆய்வு அரங்கங்கள், எல்லா இடங்களிலும்
உன்னைப் பற்றிப் புகழ்ந்து பேசுவோம். (அதர் 12)

குதிரை புழுதியை வாரி இறைப்பது போல்.
பிறந்த நாளிலிருந்து நிலம் தன்னிடத்து வாழ்பவர்களை
வெவ்வேறு இடங்களில் பரவலாக வாழச் செய்கிறது.
உலகத்தைக் காப்பவள், காட்டிலுள்ள மரங்களையும்
செடி கொடிகளையும் பாதுகாப்பவள்
என்ற மகிழ்ச்சியில் துள்ளி விளையாடுகிறாள்.
(அதர் 12)

நான் எது பேசுகிறேனோ,
அது இனிமையாகவே இருக்கும்.
நான் எதைக் கண்டாலும்,
அது என்னுடன் ஒட்டி உறவாடுகிறது.
அந்த வேளையில்



நான் நெருப்புப் போன்றவன், தீவிரமானவன்.
என்னிடம் சீறி வருபவர்களை
நான் அடித்து நொறுக்கி விடுகின்றேன். (அதர் 12)

நிறை அமைதி, இனிமை மணம், அருள்நிறை
மண்ணகம், மார்பில் பால் நிறைந்த அமிழ்தம் ஆகிய
அருங்குணம் கொண்ட நிலத்தாய் தன் அருள்
வாழ்த்துகளை எனக்கு வாரி வழங்கட்டும் .
(அதர் 12)

அன்னை நிலமே,
உனது நெஞ்சத்தில் சோர்வுக்கும், அழிவுக்கும்
இடமளிக்காதே நெடுங்கால வாழ்வில் நாங்கள்
ஊக்கத்துடனும், எச்சரிக்கையுடனும் இருந்து,
பற்றார்வத்துடன் உன்னைத் தொழுது நிற்கவேண்டும்.
(அதர் 12)





# தண்ணீரும் ஆறுகளும்

நோய்களைக் களைந்து நமது உடலை நலத்துடன்
வைத்திருப்பதற்கு உதவிடும் மருத்துவப் பண்புகள்
கொண்டது தண்ணீர்.
பளிச்சிடும் பகலவனைக் கண்டு நெடுங்காலம் வாழ
இந்தத் தண்ணீர் பயன்படுகிறது.

(இருக் 1)

தண்ணீரில் அமுதம் உள்ளது,
வலி நீக்கும் மருந்து உள்ளது,
மருத்துவ குணமுள்ள மூலிகைகள் உள்ளன.
இதை நீ நன்கு தெரிந்து கொள்.
அதன் அருமையை உணர்ந்து,
முறையாகப் பயன்படுத்துவாய். (இருக் 1)

வலிமை வாய்ந்த தண்ணீரே,
தெரிந்தோ, தெரியாமலோ,
அசட்டுதனத்தினாலோ, துடுக்குத்தனத்தினாலோ,



நான் இயற்கையின் முறைகளை மீறியிருக்கலாம்.
என் தவறுகளைக், குறைகளை மறந்து மன்னித்து விடு.
(இருக் 1)

சில நீர் நிலைகள் தாங்களாகவே
ஒன்றாய் விடுகின்றன.
மற்றவை ஒன்றுடன் ஒன்று கலந்து விடுகின்றன.
இணைந்து ஓடிக் கடலில் கலக்கின்றன.
நீர் சார்ந்த இயக்க விசையைச் சுற்றித்
தூய்மையான இந்தத் தண்ணீர் ஒன்று சேர்கின்றது.
(இருக் 2)

மலைகளின் மடியிலிருந்து ஆர்வம் கொண்ட இரண்டு
பெண் குதிரைகள் தனித்தனியே மகிழ்ச்சியுடன்
நகர்ந்து செல்வதைப் போல்,
இரண்டு வெண் பசுக்கள்
தங்கள் கன்றுகளை நக்கிக் கொடுப்பதைப் போல்,
அந்த இரண்டு கால் வாய்களும்
சலசலவென்று கூத்திட்டு ஓடுகின்றன. (இருக் 3)

ஒளிர்ந்து மிளிரும் நீரோட்டங்களே, இறைவனால்
உந்தப்பட்டு அவன் உங்களை ஊக்கி விடட்டுமென்றே
வழிபாட்டின் பயனாக நேரில் செல்வதுபோன்று கடலை
நோக்கி நீங்களிருவரும் ஒருவருடன் ஒருவர்
துணைகொண்டு அலைகளை எழுப்பிக் கொண்டு
பாய்ந்து செல்கிறீர்கள். (இருக் 3)

ஆறுகளின் அன்னையிடம் நான் வந்து சேர்ந்துள்ளேன்.
பரந்த வாழ்த்துப் பெற்ற ஆற்றை



நான் அடைந்துள்ளேன்.
தாய்ப்பசு கன்றுக் குட்டியை நக்கிக் கொடுப்பதுபோல்,
நானும் எனது துணை நீரோட்டத்துடன் சேர்ந்து
கரைகளை நக்கிக்கொண்டு
எங்கள் பொதுவான இருப்பிடத்திற்குச் செல்கிறோம்.
(இருக் 3)

அலைகளைக் கிளப்பிக் கொண்டு, பொங்கியோடி
இறைவன் நமக்கு அளித்த இருப்பிடத்தைச்
சென்றடையும்பொழுது எங்கள் உள்ளத்தில் கனிந்து
கொண்டிருக்கும் ஆர்வத்தை
எவரும் தடுத்து நிறுத்திட முடியாது.
ஆறுகளைக் கூவியழைக்கும் பாவலன்
என்ன சொல்லிடப் போகிறான்? (இருக் 3)

அறநெறியை மதிப்பவர்களே,
நண்பனாக நான் சொல்லும் சொல்லைக் கேள்.
சற்று நின்று இளைப்பாறுங்கள்.
அன்பார்வ மிக்க புகழ்ப் பாடலால் அவர்களுடைய
ஆதாரவைக்கேட்டு ஒரு முனிவரின் மகன்
ஆறுகளுடன் பேசுகிறான்: (இருக் 3)

"நமது ஓட்டத்தைத் தடை செய்யும் தடங்கல்களை
அழித்து, இருதலை கலத்தைக் கொண்ட தலைவன்
கால்வாய்களைச் சீராக வெட்டியுள்ளான்.
அழகிய கைகளையுடைய, நுண்ணறிவுச் செல்வி
நம்மை நடத்திச் செல்கிறாள்.
அவள் கொடுத்த ஊக்கத்தினால்
நாங்கள் பிரிந்து பரந்து செல்கிறோம்." (இருக் 3)



இடையூறுகளைக் களையும், இறைவனின் தீரச்
செயல்களும் காலம் காலமாகப்
போற்றிப் புகழ்ப்பட்டு வருகின்றன.
இடிபோல் அவன் தடைகளைத் தகர்த்து நொறுக்குகிறான்.
தங்கள் இருப்பிடம் நோக்கி
தண்ணீர் தவழ்ந்து செல்கிறது. (இருக் 3)

"ஓ, பாடகனே, தலைமுறை தலைமுறையாக
எதிரொலிக்கப்போகும் உனது இந்தச் சொற்பொழிவை
மறந்திடாதே. உனது புகழ்ப் பாடல்களில் எங்களிடம்
அன்பு காட்டு.
மக்களிடையே எங்களைத் தாழ்த்திடாதே, போய் வா".
(இருக் 3)

உடன் பிறந்தவர்களே, சுமை வண்டி, தேர் இவை
கொண்டு நெடுந் தொலைவிலிருந்து வருகை தரும்
கவிஞனுடைய கவிக் குரலைக் கேளீர்.
நன்கு குனிந்து அவன் அமைதியாக
உன்னைக் கடந்து செல்ல வழிவிடு.
உனது நீரோட்டத்தை
மேற்பரப்புக்கு அடியில் அடக்கி வைப்பாய். (இருக் 7)

ஆம், பாடகனே, சுமைவண்டி தேர் கொண்டு நீ
நெடுந்தொலைவிலிருந்து வருகிற காரணத்தினால்,
நீ கூறுவதை நாங்கள் கேட்கிறோம்.
சீராட்டும் தாய்போல் உன்முன் தலை வணங்குகிறோம்,
தன்னை மணமுடிக்கப் போகும் மணாளன் முன்னால்
இளங்கன்னிபோல் உன் முன்னே
நாங்கள் தலை தாழ்த்துகின்றோம். (இருக் 8)



ஓ, ஆறுகளே, எனது நுகத்தடியின் முனை நீர்ப்பரப்பின்
மேல் தலை தூக்கி நிற்பது போல்,
உங்களது அலைகள் மேலோங்கி தவழ்ந்து செல்லட்டும்.
மதகுகள் நலன் கருதி நீங்களிருவரும் இணைந்து
அமைதியுடன் கட்டுப்பாட்டுடன் வழி நடப்பீர்.

(இருக் 9)

தெய்வீக ஆறுகளே, உங்கள் இயற்பண்பில் மனம்
மகிழ்ந்து. நூற்றுக் கணக்கில்
மக்களைப் புனிதப் படுத்துகிறீர்கள்.
இயற்கை ஆற்றல்களை அடியொற்றிச் செல்கிறீர்கள்.
இறைவன் விதித்த மேலான அறமுறைகளை
அவை ஒரு பொழுதும் மீறுவதில்லை.
இத்தகைய ஆறுகளுக்கு உங்கள் அன்பும் ஆசையும்
சேர்த்து படையலாகச் செலுத்துங்கள். (இருக் 10)

பசுமை திகழும் பள்ளத்தாக்குகளின் தனிமையில்,
ஆறுகளின் கூடலில் முனிவர்கள் தெய்வீக
உள்ளுணர்வு பெறுகிறார்கள். (இருக் 10)

இறைவனின் கருணையினாலேயே,
இந்த நலம் நிறைந்த புத்துணர்ச்சி அளிக்கும் வானமிழ்தம்,
நூற்றுக் கணக்கிலான, ஆயிரக் கணக்கிலான
நீரோடைகளில் சென்று கலந்து நிற்கிறது.
கால் பதித்த இடமெல்லாம்
தூய்மை, அழகு, மகிழ்ச்சி பொங்கி எழுகின்றன.
இறைவனை மகிழ்ச்சியுறச் செய்யவே ஊற்றுகள் பொங்கி
இன்னிசையாக மலர்கின்றன. (இருக் 10)



விரைந்தோடும் ஆறுகளே, வழிபாட்டுக்குரிய இறைவன்,
நீ தொடர்ந்து செல்வதற்கு வாய்ப்பாகக்
கால்வாய்கள் வெட்டியிருக்கிறான்.
நீர்த்துளிகள் பாய்ந்து செல்லுமிடமெல்லாம் கூலங்கள்
செழித்துக் குலுங்குமாதலால், உயர்ந்து நிற்கும் மலைப்
பாறைகளிலிருந்து சறுக்கி எழுந்து
சமவெளிகளை அடைகிறீர்கள்,
உலகத்தையே நீங்கள் ஆளப்போகிறீர்கள். (இருக் 10)

பேராற்றல் வாய்ந்த ஆற்றின் பெருமுழக்கம்
மண்ணிலிருந்து விண்ணை எட்டுகிறது.
ஒளிவீசும் அலைகளினால்
தன் கரைகாணா ஓட்டத்தை அவள் இயக்குகிறாள்.
முகில்களிலிருந்து இடிமுழக்கத்துடன் நிலத்தில் சாடும்
மழை வெள்ளம் போல், காளையின் முக்காரத்தோடு
பாய்ந்தோடும் ஆறு சீற்றத்துடன் முன்னேறுகிறது.
(இருக் 10)

தாய்மார்கள் தங்கள் தங்கள்
குழந்தைகளைத் தேடி அலறுவது போல்,
கன்றுகளைத் தேடி பால் சுரக்கும்
மடியோடு பசுக்கள் ஓடி வருவது போல்,
இரைச்சலிட்டு வரும் சிற்றோடைகள்
ஆற்றை நோக்கிப் பாய்ந்து வருகின்றன.
கரைகளுக்கருகிலுள்ள நிலங்களைப் பாய்ந்து
பண்படுத்தியவாறு,
உன் துணை ஆறுகளின் நீரையும் சுமந்து கொண்டு,



காலாட் படையின் படை வீரர்களுடன்
தலைமை ஏற்பவன் முன்னேறுவது போல்,
நீ அரசனைப் போல் நீ முன்னேறிச் செல்கிறாய்.
(இருக் 10)

நேராகச் செல்லும், வெண்ணிறங் கொண்ட, ஒளி திகழும்
ஆறு கரைபுரண்டோடிடும் நீர் கொண்டு பல்வேறு
பகுதிகளை ஊடுருவிச் செல்கிறது.
மீறக் கூடாத மகிமை வாய்ந்த புள்ளிகள் இட்ட குதிரை
போல எழில்மிக்க இளமங்கைபோல
அழகுடன் திகழ்கிறது. (இருக் 10)

ஆன்மாவே, நுண்ணறிவுக் கூர்மை, வீரம் ஆகிய கழுகின்
இரு சிறகுகளை உடையவன் நீ.
இவற்றின் மூலம் நீ விண்ணின் கொடுமுடியை
அடைகிறாய். ர் 2)





**த.கோ - தி.ஸ்ரீ**

## ஏருழுதல்

விளைநில ஆண்டையே, உன்னோடு நாங்களும் ஒரு
நண்பனைப் போன்று, எங்கள் பசுக்களுக்கும்,
குதிரைகளுக்கும் ஊட்டம் அளிக்கும்
உணவைப் பெறுகிறோம்.
இந்த வகையில் இறை
நம்மிடம் பெருந்தன்மையாய் இருக்கட்டும். (இருக் 4)

விளை நிலத்தின் தலைவ, பசு பாலளிப்பதுபோல்,
மலர்கள் தேனை அளிப்பதுபோல்,
வெண்ணையைப் போன்று தூயதாகவுள்ள
தித்திப்பான ஒரு நீரோடையை
எங்களுக்கு அளிப்பாய்.
புனிதமான அறத்தின் தலைவர்கள்
நமக்கு அருள் வழங்கட்டும். (இருக் 4)

மூலிகைகள் எங்களுக்கும்,
தண்ணீருக்கும் இனிப்பளிக்கட்டும்.
நடுவானக் காற்றுத் தேனாயிருக்கட்டும்.



விளைநிலத் தலைவன், எங்களிடம் பரிவு காட்டட்டும்.
புண்படுத்திக் கொள்ளாமல்
அவனை நாங்கள் பின்பற்றுவோமாக. (இருக் 4)

வலிந்திழுக்கும் காளைகள் மகிழ்ச்சியுடன் உழைக்கட்டும்
அவ்வாறே நம் மனிதர்களும் உழவுச் சால்களும் நிலத்தில்
மகிழ்வுடன் ஒன்று சேரட்டும்.
முட்கோலை மகிழ்ச்சியுடன் கையாளுங்கள். (இருக் 4)

ஓ, கலப்பையின் கொழுமுனையே, கலப்பையே,
எங்கள் புகழ்ப் பாடல்கள் உங்களை மகிழ்விக்கட்டும்.
வான் விசும்பின் மழைத்தண்ணீரால் நிலத்தை நனைத்திடுவீர்.
(இருக் 4)

ஓ, அருள்மிகு படைச்சாலே, எங்களிடம் நெருங்கி வா.
உனக்கு எங்கள் வணக்கங்கள்.
நீயும் எங்களிடம் பெருந்தன்மையுடனும், பலனளிக்கும்
எண்ணத்துடனும் நடந்து கொள்வாய். (இருக் 4)

ஓ, பெருவீரனே, படைச்சாலைக் கையிலெடுத்துக் கொள்
ஊட்ட உணவின் தலைவன் வழிகாட்டட்டும்.
நிலமென்னும் நல்லாள், கிடைக்கும் நல்ல
விளைச்சலை எங்களுக்களிக்கட்டும். (இருக் 4)

உழுகின்ற கொழுமுனைகள்
மண்ணைப் புரட்டி எடுக்கட்டும்.
உழுபவன் மகிழ்வுடன் காளைகளை ஓட்டிச்செல்லட்டும்
தேனையும் தண்ணீரையும்
முகில்கள் நிலத்தில் தெளிக்கட்டும்.





உழுகின்ற கொழுமுனையும் கலப்பையும் எங்களுக்கு
வளமை வழங்கட்டும். (இருக் 4)

கடவுள் நம் உள்ளத்தில் வந்து குடிப்புகட்டும்,
நமது உடல் கடவுளின் கோயிலாகட்டும்,
பசுக்கள் புல்வெளியில் மேய்வது போல். இறைவன்
நமது செயல்களின் நற்பலன்களை நன்கு நுகரட்டும்.
நமது வாழ்வின் விளைச்சலை நாம் அடைந்து
அதை இறைவனின் பாதங்களில் படைப்போமாக.
அவருடைய தொண்டர்களாக
நாம் என்றும் இருப்போமாக. (இருக் 1)







## அறுவடைப் பாடல்

செடி கொடிகளில் இனிமையான
மகிழ்ச்சி பூத்துக் குலுங்குகிறது.
எனது சொற்கள் இனிய மகிழ்ச்சி நிறைந்தவை
என்னைச் சுற்றிலும் இனிய மகிழ்ச்சி பரந்திருப்பதைக்
காணும் நான் ஆயிரம் வகைகளில் செழிப்புறுகின்றேன்.
(அதர் 3)

இனிய மகிழ்வு ததும்பும் இறைவனை நான் அறிவேன்.
அவன் தாராளமாக எங்களுக்கு
விளைச்சல் அளித்திருக்கிறான்.
அவனை நாங்கள் எங்கள் இசையினால்
போற்றித் தொழுகிறோம். (அதர் 3)

மழைக்குப்பின் ஆறு
மரத்துண்டுகளைச் சுமந்து
வருவதுபோல்,
உலகின் ஐந்து பகுதிகளும்





இந்த ஐந்து வகையான மனிதர்களும் நமக்கு
செழிமையைக் கொணர்ந்து சேர்க்கட்டும். (அதர் 3)

ஆயிரக்கணக்கான நீரோடைகளில் நீரூற்றுப் பொங்கி
எழுவது போல்,
நமது விளை கதிர்மணிகளும்
ஆயிரமாயிரம் நீரோடைகளில்,
குறையாமல் நீரை பெறட்டும். (அதர் 3)

ஓ நூறு கைகளையுடையவனே, இதைச் சேகரித்துக் கொள்.
ஓ, ஆயிரம் கைகளுடையவனே,
அதை எல்லார்க்கும் வழங்கிடுவாய்.
அறுவடையான அல்லது அறுவடைக்காகக் காத்திருக்கும்
மிகுதியான கதிர்மணிகளை ஒன்று திரட்டிடுவாய்.
(அதர் 3)

மூன்று படி தானியம் அண்டத்தின் ஆற்றல்களுக்காக,
நான்கு படி வீட்டின் தலைவிக்காக,
மீதமிருக்கும் ஏராளமானவை, உனக்கேதான் இறைவா.
(அதர் 3)



## பசுக்கள்

பசுக்கள் நம்மை அடைந்து நமக்கு
நல்ல பேற்றினைத் தந்துள்ளன.
அவை தமது கொட்டிலில் தங்கியிருந்து
நமக்கு உகந்தவை யாயிருக்கட்டும்.
பலவண்ண, நிறங்களில்
கன்றுகளின் தாயாக இங்கே வாழட்டும்.
வைகறைப் பொழுதுகளில் வழிபாட்டுக்குத்
தேவையான பாலைத் தரட்டும். (இருக் 6)

இறைவன் வழிபடுபவரை நண்பனைப்போல் காத்து
அவனுடன் நல்லுறவு கொள்கிறான்.
அவனுக்கு வெகுமதியளிக்கிறான்; அவனுக்கு
உரியவற்றிலிருந்து எதையும் எடுத்துக் கொள்வதில்லை.
அவனது செல்வத்தை மேலும் மேலும் செழிக்கச் செய்து
தொண்டனைத் தகர்க்க முடியாத கோட்டையில்
வைத்துக் காக்கிறான். (இருக் 6)



பசுக்கள் எங்கும் காணாமல் போவதில்லை,
கள்வர்கள் அவற்றைத் துன்புறுத்துவதில்லை.
நேயவுணர்வில்லாதவர்கள் அவற்றை மிரட்டுவதில்லை,
அவற்றைத் தாக்குவதில்லை.
பசுக்கூட்டத்தின் உரிமையாளன் அவற்றுடன்
இணைந்து வாழ்கிறான்.
தெய்வங்களை வணங்குகிறான், ஈத்துவக்கும்
இன்பத்தில் திளைக்கிறான். (இருக் 6)

தூசுகளைக் கிளப்பிடும் எதிரியும் கூட பசுக்களை
அண்ட முடிவதில்லை.
அவை எப்பொழுதும் கொலைக் களத்தைச்
சென்று அடைவதில்லை.
பரந்திருககும் பசும்புல் வெளிகளில் வழிபடுபவனின்
பசுக்கள் பயமின்றி இங்குமங்குமாகத் திரிகின்றன.
(இருக் 6)

ஓ, பசுக்களே, இளைத்துப் பரந்திருக்கும் பசும்புல்
வெளிகளில் பயமின்றி மெலிந்து போயிருப்பவர்களைக்
கொழுக்க வைக்கிறீர்கள்.
அழகில்லாதவர்களை அழகுள்ளவர்களாகச் செய்கிறீர்கள்
எங்கள் வீடுகளை மகிழ்ச்சியாக வைக்கிறீர்கள்
உங்களுடைய அடக்கமான பண்புகளால் சபைகளில்
பெருமை கூடுகிறது. (இருக் 6)

உங்களுக்குக் கன்றுகள் பெருகட்டும்,
பசும்புல்வெளிகளில் மேய்ந்து கொண்டிருப்பீர்களாக,
குடிநீர் நிலைகளில் நல்ல தண்ணீரைக் குடிப்பீர்களாக
கள்வனோ, கெட்டவனோ உங்கள் மேல் ஆட்சி

செலுத்தாமலிருப்பானாக. இறைவனின் கூரம்புகள் உன்னிடமிருந்து ஒதுங்கிச் செல்வதாகட்டும்.

(இருக் 6)

கலவை சீராக இருக்கட்டும்.
மூலிகைச் சாறாகிற சோமா பசுவின் பாலில்
நன்கு கலக்கட்டும்.
வீர நெஞ்சத்தில் இந்த ஆற்றல் சேரட்டும்.

(இருக் 6)



## பருவங்கள்

இயற்கை அன்னையின் பல்வேறு நிலைகளில்
மகிழ்ச்சி கொள்.
பல்வேறு உருவங்களில் தன்னை வெளிக்காட்டிக்
கொள்ளும் கண்ணுக்குப் புலப்படாத தெய்வீக
மேன்மைப் புகழை நுகர்ந்து கொள்.
மலர்களின் பருவகாலம் இன்னிளவேனில் இன்பத்தைக்
கொள்ளை கொள்ளும் மணம் கொண்ட தென்றல்
வீசுகிறது அந்தப் பருவத்தில்.
அடுத்துத் தொடரும் வேனிற் காலத்திற்கும்
அதற்கேற்ற ஒரு பேரழகு இருக்கிறது.
கருமுகில்களும், கண்ணைப் பறிக்கும் ஒளி அலைகளும்
கொண்ட மழைக்காலம் தனது பேரொளியினால்
மண் முழுவதையும் நீராட்டுகிறது.
இலையுதிர்காலம், பனிக்காலம், ஆகிய பருவங்களும்
அவற்றிற்கான எழிலும், கவர்ச்சியும் கொண்டவை.

(சாம 616)



இறைவன் ஞாயிற்றை விண்ணின்
நாப்பண் நிலைப்படுத்தியுள்ளான்.
மழைநீரை அது கவர்ந்திழுக்கிறது,
நிலத்தில் பொழிவிக்கிறது,
செந்நிறம் கொண்டது, நம்மை முழுமையாகக் காக்கிறது,
வகை வகையான கதிர்களைக் கொண்டது,
சுற்றிச் சுழல்கிறது.
முகில்களையும் வெவ்வேறு உலகங்களையும் தன்
கட்டுப்பாட்டில் வைத்துள்ளது, அவற்றைப் பாதுகாக்கிறது.
வெளிச்சத்திற்கும் காரணமான மின்னலில் படர்ந்துள்ளது.
(இருக் 5)

பனிக்காலம், இளவேனில்காலம், இலையுதிர்காலம்,
மழைக்காலம், கோடைக்காலம்
ஆகிய பருவங்களில் எங்களைக் காத்திடு.
குழந்தைகள் ஆடு மாடுகள் ஆகியவற்றை எங்களுக்குத்
தாராளமாக அளித்து மகிழ்ச்சியில் ஆழ்த்திடு.
உன்னுடைய தடங்கலற்ற பாதுகாப்பை அளி.
(அதர் 6)



## மருந்து சார்ந்த மூலிகைகள்

நம் தாய் நாட்டின் மருத்துவ குணங்கொண்ட மூலிகைகள்
பல்வேறு பெயர்கள், பயன்கள் கொண்டவை.
ஆயிரக்கணக்கான முளை நிலைப்பில் உள்ளவை,
பல்வேறு இடங்களில் கிடைக்கின்றன.
நூற்றுக் கணக்கான பயன்கள் கொண்டவை.
நோயாளியை உடல் நலமுள்ளவனாகவும்
வலுவுற்றவனாகவும் ஆக்குகின்றன. (இருக் 10)

மலர்களும் பழமளிக்கும் மருந்துச் செடிகளும்
அழகிய கொடித் தளிர்கள் கொண்டவை.
விரைவாகச் செல்லும் குதிரைகளைப் போல்,
இவை நோய்களைக் குணப்படுத்துகின்றன.
நோயாளிகளிடம் தங்கள் திறன் நிறைகளை
மெய்ப்பிக்கின்றன.
அவர்களை உடல் நலத்தோடும்
மகிழ்ச்சியோடும் வைத்திருக்கின்றன.

(இருக் 10)



பழங்கள் பழுத்தோ பழுக்காமலோ
பூத்தாலோ பூக்காவிட்டாலோ
தேர்ந்த ஒரு மருத்துவன் தான் உண்டாக்கிய
மருத்துவ மூலிகைகளின் மூலம்
நமது நோயைக் குணப்படுத்துகிறான்.

(இருக் 10)

மருத்துவ மூலிகைகள் உடலில் புகுந்து, குருதியில்
கலந்து, நோயாளியின் உடலுறுப்புகள், இணைப்புகள்
இவற்றை ஊடுருவித்
தேர்ந்த நடுவரைப் போல் நோயைக் குணப்படுத்துகின்றன.

(இருக் 10)

உயிரளிக்கும் இந்த மருத்துவ மூலிகைகள்
தீங்கற்றவை, உயிரின்ப மகிழ்வை ஊட்டுபவை,
உரமளிப்பவை. அவை என்றும் முன்னேறுகின்றன.
ஒரு பொழுதும் பின்னடைவதில்லை.
அவை என்றும் வளர்பவை, தடைப்படுபவையல்ல.
மலர்கள், இனிய பழச்சாறு, பருப்புகள் கொண்டவை.
அல்லல் பட்டுக் கொண்டிருக்கும் இந்த மனிதனைக்
குணப்படுத்துவதற்காக
அவற்றை நான் இங்குக் கொணர்கின்றேன். (அதர் 8)

உயிராற்றலின் தலைவ, நீ புனிப் படல
விண்ணகங்களுக்குச் சென்று வருபவன்.
எங்கள் வேண்டுதலையும் கேட்டருள்வாய்
சுற்றிவளைக்கும் திறனுடைய காற்றே. நீ எங்கள்
தொழுகைப் பாடல்களைக் கேட்டிடுவாய்.





புளிங்கு போல் வெண்ணிறம் கொண்ட
தண்ணீரைச் சுமந்து செல்லும் முகிலே,
மலைகளின் முகட்டில் மிதந்துலவும் பொழுது,
நாங்கள் கூறப்போவதைக் கேட்டிடுவீர்.

(இருக் 5)





## தாய் நாடு

உன் நாட்டின் புகழுக்கும், வெவ்வேறு மொழிகள் பேசும்
உன் நாட்டு மக்களின் புகழுக்கும் பாடுபடு.
மக்களின் உள்ளக் கிடக்கைகளுக்கும்,
நம்பிக்கைகளுக்கும் மதிப்பளி.
அன்னை நிலத்திடம் உள்ள செல்வங்கள்
எண்ணிலடங்கா.
அவளிடமிருந்து நூற்றுக் கணக்கான
நீரோடைகள் மூலம் செல்வம் புரண்டோடுகிறது.
இறைவனைத் தொழுவதைப் போன்று
தாய் நாட்டையும் தொழு.
தொல்பழங்காலத்தொட்டு காலங் காலமாக நிலத்தாய்
தன் குழந்தைகளுக்கு வாழ்வளிக்கின்றாள்.
நீ அவளுக்கு நன்றிக்கடன் பட்டிருக்கிறாய்.

(அதர் 12)



## ஒரே மூலம்

முதல் வைகறைக் காலைப் பொழுது தோன்றிய
காலத்தில், என்றும் நிலைத்திருக்கும் தன்மை ஒளியின்
பாதையில் தன்னை அடையாளம் காட்டிக்கொண்டது.
இனிக், கடவுளர்களின் சிலைகள் வணங்கப்படும்.
பேரண்ட ஆற்றல்களின் ஆதிமுதல் சிறப்புடைய
பெருமை மிக்கது. (இருக்3)

கடவுளர்களோ, சீரான பாதை தெரிந்துணர்ந்த
முன்னோர்களோ, இரு பழையகால வீடுகளுக்கிடையே
உள்ள அடையாளமோ நம்மை தவறான பாதையில்
செல்லுவதைத் தடுத்து நிறுத்துமாக.
பேரண்ட ஆற்றல்களின் ஆதிமுதல்
சிறப்புடைய பெருமை மிக்கது. (இருக் 3)

எனது ஆசைகள் பல்வேறு இடங்களுக்குப் பறந்து
செல்கின்றன.
பழங்கால வேள்விகளுக்கு நான் ஒளியூட்டுகிறேன்.





இவ்வாறு ஒளியூட்டப்பட்டபின்,
நாம் அறநெறிகளை நிலைநாட்டுவோம்.
பேரண்ட ஆற்றல்களின் ஆதிமுதல்
சிறப்புடைய பெருமை மிக்கது. (இருக் 3)

இந்த உலகத்தின் அரசன் பல இடங்களில் பிறந்தவன்
படுக்கையில் படுத்துக்கொள்பவன்,
காடுகளில் பரந்து நிற்கிறான்.
என் தேவி குழந்தைகளுக்குப் பாலூட்டுகிறாள்,
இன்னொருத்தி அதை இளைப்பார விடுகிறாள்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

பழைய செடிகளில் பிழைப்பு நடத்துபவனே,
புதியவற்றிலும் பிழைப்பு நடத்துகிறான். விரைவாகவே
அவன் இளைஞர்களுள் ஒருவனாகப் பிறப்பெடுக்கிறான்.
தாமாகவே அவை மகப்பேறு எய்துகின்றன.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

இரு பேரன்னைகளுக்கு எங்கோ பிறந்த அவன்
தனித்தவனாகத் தடையின்றிச் சென்று வருகிறான்.
ஞாயிறு பேராழி இவற்றின் சட்டமுறைகள் இவை.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)



இரு பேரன்னைகளின் குழந்தையாகிய புகழ்பாடுபவன்,
குழுவில் தலைவனாக அவன் ,
மேலே தொடர்ந்து நடக்கிறான்.
அதே நேரம் மற்றவர்களுக்குத் துணையாக
நிற்கவும் செய்கிறான்.
புகழுரைகள் பேசுபவர்கள்
அவன் பெருமையைப் பாடுகிறார்கள்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

போர்க்களத்தில் போரிடும் அன்பிற்குரிய வீரனிடம்
நெருங்கி வருவதெல்லாம் சென்று விடுவதைப்போல்,
நெஞ்சத்திற்குள் இடம் பெற்றிருக்கும் போற்றிப் பாடல்
கடவுளுக்கான பால், தேறலுடன்ன இணைந்து விடுகிறது.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக்)

ஆற்றலுள்ள பழையகால முதுகணாளன்
ஒரே நிலையில் உலாவுகிறான்.
அழகான உருவங்களில் தோன்றி
நம்மைப் பார்வையிடுகிறான்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

எங்கும் நிறைந்திருக்கும் பாதுகாவலன், அன்பான
அழிவில்லாத கோளங்களில் நின்று,
உயர்ந்த பாதையைப் பாதுகாக்கிறான்.
தெய்வீகத் தீ படைக்கப்பட்ட அனைத்து



உலகங்களையும் நன்கறியும்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக்3)

ஒன்றிலிருந்து ஒன்று மாறுபட்டதாக பகல், இரவு
ஆகிய நீங்கள் இருவரும் அழகு பொருந்திய
இரட்டையர்களாகக் காணப்படுகிறீர்கள்.
இந்த இருவரில் ஒன்று ஒளிமயமானது, மற்றது இருட்டானது.
ஆயினும் கருமை சிகப்பு நிறம் கொண்ட இந்த
இருவருமே உடன் பிறந்தவர்களே.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

அமுதம் அளிக்கிற இரண்டு பசுக்களும் தாய்மகள்
(விண்-மண்) கன்றுகளுக்குப் பாலூட்டுகின்றன.
நிலையான ஒழுங்கினையொட்டி,
இரண்டையுமே நான் தொழுகிறேன்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

மற்றொரு பசுவின் கன்றை நக்கிக் கொடுத்தவாறே
ஒரு பசு குரல் எழுப்புகிறது.
அமிழ்தப்பாலளிக்கும் பசு
எந்த உலகில் தன் மடியை இறக்கியது?
இயற்கை ஒழுங்காகிய பாலினால்
நிலம் தன்னை நிறைத்துக் கொள்கிறது.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)



வெவ்வேறு உருவங்களில்
உலகம் வண்ணக் கோலமிடுகிறது.
ஒன்றரை ஆண்டு நிரம்பிய ஞாயிறாகிய தன் கன்றை
நக்கிக் கொண்டு அது எழுந்து நிற்கிறது.
இதை அறிந்து கொண்ட நான்
நிலையான ஒழுங்கில் இருக்கையைத் தேடிச் செல்கிறேன்.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)

பகல் இரவு ஆகிய இரண்டும்
வியப்பான ஓர் இடத்தில் வாழ்கின்றன.
இவற்றில் ஒன்று மறைந்துள்ளது.
மற்றது வெளிப்படையாக தெரிவது.
நமது நடைவழி இரண்டாகப் பிரிக்கப்பட்டுள்ளது.
பேரண்ட ஆற்றல்களின் மூலாதாரம் பெருமை மிக்கது.
(இருக் 3)



